# திருப்புகழ்த் திருத்தலங்கள்

பால முருகன்
(ஆ. கோமதிநாயகம்)

கிடைக்குமிடம் :

**சங்கர் பதிப்பகம்**

20, ஆசிரியர் சங்கக் குடியிருப்பு
இராஜாஜி நகர் விரிவு, வில்லிவாக்கம்
சென்னை-49.

# நூல் விவரப் பட்டி


| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | திருப்புகழ்த் திருத்தலங்கள் |
| ஆசிரியர் | : | பால முருகன் (ஆ கோமதிநாயகம்) |
| மொழி | : | தமிழ் |
| பதிப்பு | : | முதல் பதிப்பு - ஜூன் 1993 |
| உரிமை | : | ஆசிரியர்க்கு |
| பயன்படுத்தியதாள் | : | சேஷசாயி தாள் |
| நூலின் அளவு | : | 148 × 210 மி மி. |
| எழுத்து அளவு | : | 10 புள்ளி |
| பக்கங்கள் | : | 18+272 |
| படிகள் | : | 1000 |
| அச்சகம் | : | கிரேஸ் பிரிண்டர்ஸ் 8. போலீஸ் குவாட்டர்ஸ் ரோடு, தி நகர், சென்னை-17, போன் : 442232 |
| ஒளி அச்சுக் கோர்பு | : | சுமதி லேசர்ஸ் சென்னை-6. போன் : 473427 |
| விலை | : | ரூ. 60/- |



This Book was
Published with the financial
Assistance of
Thirumala Tirupati Devasthanams
Under their Scheme
"AID TO PUBLISH RELIGIOUS BOOKS"



Sri Chandramouleeszaraya Namaha

**SRI SANKARA BHAGAVADPADACHARYA PARAMPARAGATHA**

**His Holiness Sri Kanchi Kamakoti Peetadhipathi**

# Jagadguru Sri Sankaracharya Swamigal

**SRIMATAM : : SAMSTHANAM.**

KANCHEEPURAM-631502.

Camp :காஞ்சீபுரம் Date: 15.3.93

திரு ஆ. கோமதிநாயகம் அவர்களால் எழுதப்பட்ட "திருப்புகழ்த் திருத்தலங்கள்" என்னும் நூலை அழகு பதிப்பகம் அச்சிட்டு வெளியிட்டிருப்பதைக் கண்டு ஸந்தோஷிக்கிறோம். இந்நூலில் நூலாசிரியர் தமிழ்நாடு, ஆந்திரா, கேரளா, கர்னாடகா, இலங்கை, முதலிய மாகாணங்களில் உள்ள திருப்புகழில் பாடப் பெற்றதும் மற்றும் மிக முக்ய புண்யஸ்தலங்களின் வரலாற்றையும் மகிமைகளையும் தெளிவாக விளக்கி இருக்கிறார். குறிப்பாக முருகப் பெருமானின் திருத்தலங்கள் அனைத்தையும் விசேஷ முறையில் விளக்கியிருப்பது மிகவும் நன்றாக உள்ளது. ஸ்ரீமுருகப் பெருமானின் "சரவணபவா" என்னும் ஷடக்ஷரஜபம் ஆறு எழுத்துக்களைக் கொண்டது. அந்த ஆறு எழுத்துக்களையும் ஷட்கோணசக்ரத்தில் அமைத்து காண்பித்திருப்பது பக்தர்களுக்கு மிக உதவியாக இருக்கும். நூலாசிரியர் ஸ்கந்தபுராணத்தின் தத்வங்களை விரிவாக விளக்கியிருப்பது பாராட்டத் தக்கது. இந்நூலாசிரியர் இம்மாதிரியான பக்தியை வளர்க்கும் பயனுள்ள நூல்களை எழுதி லோகோபகாரம் செய்யவும், இந்நூலின் உதவியால் மக்கள் அனைவரும் திருத்தலங்களுக்கு யாத்திரை செய்து வழிபட்டு இறைவன் அருளைப் பெற்று ஸகலமங்களங்களையும் அடைந்து பரமக்ஷேமமாக வாழ வேண்டும் என்று ஆசீர்வதிக்கிறோம்.

நாராயணஸ்ம்ருதி:

உ
முருகா





"வேலை வணங்குவதே வேலை"
கிருபானந்தவாரி
107, சிங்கண்ண செட்டித் தெரு
சிந்தாதிரிப்பேட்டை, சென்னை - 600 002

தொலைபேசி : 835666

சென்னை
நாள்: 15-3-93.

உ
முருகா

சாற்றுக்கவி
நேரிசை வெண்பா

திருப்புகழ் செய்ய திருத்தலங்கள் என்னும்
திருப்புகழ் நன்னூலை தந்தான் - விருப்புடைய
கோமதி நாயகன் கோலமுடன் ஓதுவார்
மாமதி சேர்ந்து மகிழ்வார்

அன்பன்
கிருபானந்தவாரி

# முகவுரை

முருகப் பெருமானின் பெருமைகளை விளக்கும் அரிய நூலான திருப்புகழிச் 1325 பாடல்களே இன்று நமக்குக் கிடைத்துள்ளன. சுமார் 500 ஆண்டுகட்கு முன் திருவண்ணாமலையில் அவதரித்த அருணகிரிநாத அடிகள் திருமுருகன் திருவருள் துணை கொண்டு முருகப் பெருமானின் பல்வேறு திருத் தலங்கட்கும் நேரில் சென்று அவ்வத்தல முருகப் பெருமானின் சிறப்புகளைப் போற்றிப் பாடினார்.

அதில் பல தலங்கள் குறித்து கருத்து வேறுபாடுகள் உள்ளன. சில தலங்களைச் கண்டுணர முடியவில்லை. முருகனடியார்கள் பலர் திருப்புகழ் பாடல் பெற்ற பல தலங்களின் விவரங்களை நமக்கு ஏற்கனவே தொகுத்துத் தந்துள்ளார்கள். அண்மைச் காலத்தில் அந்நூல்கள் கிடைக்கப் பெறுவதில்லை.

பல முருகனடியவர்களின் நூல்களைத் துணைக் கொண்டும் நேரில் தரிசித்த தலங்களையும், அவற்றின் சிறப்புகளையும், திருப்புகழ் பாடல் பெறாத இதர சிறப்புத் தலங்களையும் ஓரளவு தொகுத்து 301 தலங்களின் முருகப் பெருமானின் திருவுருவ அமைப்பு, மந்திரச் சக்கரங்கள் இந்நூலில் கொடுத்துள்ளேன்.

இந்நூலின் சிறப்புக்குத் திருவாவடுதுறை ஆதீன வெளியீடான 'முருகன்', சுவாமிமலை திருக்கோயில் வெளியிட்ட நண்பர்கள் வலையப்பட்டி திரு. ரா.கிருஷ்ணன் சகோதரர்கள் எழுதிய 'அருணகிரி நாதரின் அடிச்சுவட்டில்', கோயிற்கலைச் செல்வர் திருமிகு இராசமாணிக்கனார் அவர்களின் 'அறுமாமுகனின் அரிய திருவுருவங்கள்', மற்றும் அவர்களின் இதர பல நூல்களும், மற்றும் பல அறிஞர்களின் திருக்கோயில் வரலாற்று நூல்களும், மற்றும் பல அறிஞர்களின் திருக்கோயில் வரலாற்று நூல்களும், மலர்களும் பெருந்துணை புரிந்தன. அந்நூல்களில் காணும் முருகப் பெருமானின் திருவுருவப் படங்கள் இந்நூலில் சேர்க்கப்பட்டுள்ளன. 'முருகன்' நூலில் காணும் படங்களும், மந்திரச் சக்கரங்களும் இந்நூலில் சேர்க்கப்பட்டுள்ளன. முருகப் பெருமானின் புகழ் பரப்பும் திருவாவடுதுறை ஆதீனத்தாருக்கும் சுவாமிமலை தேவஸ்தானத்தாருக்கும் என் மனமார்ந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூலுக்கு ஸ்ரீமுகம் அருளிய காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சங்கராச்சாரிய சுவாமிகள், நடமாடும் திருப்புகழ் அன்பர், திருமுருக கிருபானந்த வாரியார் அவர்களின் அருளாசிக்கும் எனது பணிவார்ந்த வணக்கத்தினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூல் சிறப்புற வெளிவர உதவிய நண்பர்கட்கும், அச்சகத்தாருக்கும் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூலினை அன்பர்கள் வாங்கிப் பயன்படுத்துவதுடன் இதில் விடுபட்ட செய்திகள் குறித்தும் எழுதியனுப்ப வேண்டுகிறேன். அடுத்த பதிப்புகளில் மேலும் செம்மைப்படுத்த அது உதவியாகும்.

ஆ. கோமதிநாயகம்

21, ஆசிரியர் சங்கக் குடியிருப்பு
வில்லிவாக்கம்,
சென்னை-49.

# உள்ளுறை

**வைப்புத்தலங்கள், புகழ்பெற்ற தலங்கள்**

# திருத்தலங்கள் - மாவட்ட விவரப் பட்டியல்

**கன்னியாக்குமரி மாவட்டம்:**

230. குமாரகோயில் 272. தேவாளை 289. மருங்கூர் 298. வெள்ளிமலை 230. வேளிமலை.

**திருநெல்வேலி மாவட்டம்:**

7. ஆய்க்குடி 13. இலஞ்சி 29. கழுகுமலை 79. திருக்குற்றாலம் 257. திருநெல்வேலி-குறுக்குத்துறை 258. சாலைக்குமரன் 259. நெல்லையப்பர் திருக்கோயில் 139. திருப்புருடமங்கை 275. திருமலை 139. நாங்குனேரி 275. பண்புளி 151. பாபநாசம் (பொதியமலை) 183. வள்ளியூர்.

**வ.உ.சி. மாவட்டம்:**

86. திருச்செந்தூர்.

**பசும்பொன் முத்துராமலிங்கர் மாவட்டம்:**

11. இராமேஸ்வரம் 16. உத்தரகோசமங்கை 214. ஒற்றைக்கண்ணூர் 47. குன்றக்குடி 15. கொடுங்குன்றம் 256. சிவகங்கை 100. திருப்பத்தூர் 117. திருவாடானை 152. பிரான்மலை 296. பிள்ளையார்பட்டி. (விநாயகமலை).

**காமராஜ் மாவட்டம்:**

256. திருத்தங்கல்.

**மதுரை மாவட்டம்:**

144. அழகர்கோயில் (ஆவிணன்குடி) 212. ஏடகம் 213. ஒத்தக்கடை 156. குளந்தை 238. சின்னாளப்பட்டி 240. சுருளிமலை 74. தனிச்சயம் 94. திருப்பரங்குன்றம் 267. திருவாதவூர் 144. பழமுதிர்ச்சோலை 154. பூம்பறை 156 பெரிய குளம் 166. மதுரை.

**அண்ணா மாவட்டம்:**

145. பழனி.

**புதுக்கோட்டை மாவட்டம்:**

8. ஆவுடையார்கோயில் 228. குமரன்மலை 253. திருக்கோகர்ணம் 102. திருப்புனவாயில் 8. திருப்பெருந்துறை 270. தேனீ 188. விராலிமலை.

**திருச்சி மாவட்டம்:**

64. இரத்தினகிரி 18. உய்யகொண்டான்மலை 210. உறையூர் 46. கடம்பந்துறை 28. கரூர் (கருவூர்) 225. கீழையூர் 41. கீழ்ப்பழுவூர் 178. குமாரவயலூர் 46. குளித்தலை (கடம்பந்துறை) 64. சிவாலயமலை 242. செட்டிகுளம் 243. செந்துறை 174. தவத்துறை 248. திண்ணியம் 18. திருக்கற்குடி 87. திருச்சி 93. திருநெடுங்களம் 96. திருப்பராய்த்துறை 107. திருமாந்துறை 124. திருவானைக் கோயில்

142. நெருவூர் (நேரூர்) 153. புகழிமலை (புகழூர்) 155. பூவாளூர் 157. பெருங்குடி 174; லால்குடி 178. வயலூர் 186. வாலிகண்டபுரம் 193. வெஞ்சமாக்கூடல் 297. வெண்ணெய் மலை.

**தஞ்சை மாவட்டம்:**

2. அம்பர் (அம்பல்) 4. அக்கூர் 175. ஆடுதுறை 5. ஆண்டாநல்லூர் 9. இஞ்சிக்குடி 14. இலுப்பைப்பட்டு 20. எட்டிக்குடி 21. எண்கண் 131. ஏழு திருப்பதி 215. கங்கைகொண்ட சோழபுரம் 27. கந்தன்குடி 53. கரியவனநகர் 37. காவளூர் 223. காவிரிப்பூம்பட்டினம் 39. கீரனூர் 226. கீழ்வேளூர் 42. குடவாசல் 43. குற்றாலம் 44. கும்பகோணம் 45. கும்பகோணம் சோமேசர் திருக்கோயில் 49. கூந்தலூர் 52. கொட்டைநகர் (கொட்டையூர்) 53. கொண்டல் 56. கோடிக்கரை (கோடிநகர்) 58. கோயில்பத்து 255. சாயாவனம் 59. சிக்கல் 61. சிவபுரம் 67. சீர்காழி 68. சுவாமிமலை 73. தஞ்சாவூர் 246. தண்டலைச்சேரி 247. தாராசுரம் 4. தான்தோன்றிமலை 68. திருஏரகம் 77. திருக்கடையூர் 249. திருக்கண்டியூர் 251. திருக்களர் 78. திருக்குறுக்கை 256. திருக்கைச்சினம் 82. திருச்சக்கரப்பள்ளி 83. திருச்சத்திமுத்தம் 85. திருச்செங்காட்டங்குடி 255. திருச் செம்பனார்கோயில் 43. திருத்துருத்தி 91. திருநாகேஸ்வரம் 260. திருப்பறியலூர் 97. திருப்பனந்தாள் 101. திருப்புவனம் 262. திருப்புறம்புயம் 63. திருப்பூந்துருத்தி 216. திருப்பைஞ்ஞலி 264. திருமருகல் 105. திருமாகாளம் 114. திருவலஞ்சுழி 116. திருவாஞ்சியம் 120. திருவாரூர் 121. திருவாவடுதுறை 123. திருவாளப்புத் தூர் (திருவாளொளிப்புத்தூர்) 131. திருவையாறு 58. திலதைப்பதி 134. தில்லைஸ் தானம் 269. தேவூர் 124. திருவிடைக்கழி 127. திருவிடைமருதூர் 128. திருவீழிமிழலை 5. நல்லூர் 138. நாகப்பட்டினம் 134. நெய்த்தானம் 276. பட்டீஸ்வரம் 143. பந்தணைநல்லூர் 146. பழையாறை 276. புள்ளிருக்கு வேளூர் 281. பெரம்பூர் 158. பெரும்புலியூர் 286. பொரவாச்சேரி 161. பொன்னூர் 162. மகேந்திரப்பள்ளி (மயேந்திரம்) 292. மயிலாடி 163. மதுரமாணிக்கம் 169. மருத்துவக்குடி 171. மாயூரம் 175. வடகுரங்காடுதுறை 179. வலிவலம் 181. வழுவூர் 185. விற்குடி 196. வேதாரண்யம் 198. வைத்தீஸ்வரன் கோயில்.

**பெரியார் மாவட்டம்:**

19. ஊதிமலை (ஊதியூர்) 217. கதித்தமலை 30. கன்னபுரம் 31. காங்கேயம் 177. கொங்கனகிரி 50. கொடுமுடி 63. சிவன்மலை 70. சென்னிமலை 50. திருப்பாண்டிக் கொடுமுடி 147. திருவாணிக்கூடல் (பவானி) 268. தீண்டல்மலை 63. பட்டாலியூர் 171. வட்டமலை 192. விஜயமங்கலம்.

**கோயமுத்தூர் மாவட்டம்:**

3. அவிநாசி 203. அழகுமலை 66. குருடிமலை 232. குருந்தமலை 234 கோயமுத்தூர் - சுக்கிவாரப்பேட்டை 66. சின்னத்தடாகம் 237. சிறவைக் கௌமார மடம் 69. செஞ்சேரிமலை 245. சேலூர் 24. ஞானமலை (ஓதிமலை) 261. திருப்புக்கொளியூர் 108. திருமுருகன்பூண்டி 69. தென்சேரிகிரி 282. பூராண்டான் பாளையம் 160. பேரூர் 287. பொன்மலை 301. பொள்ளாச்சி 291. மருதமலை.

**தர்மபுரி மாவட்டம்:**

135. தீர்த்தமலை (தீர்த்தகிரி)

**சேலம் மாவட்டம்:**

206. இரெட்டிப்பட்டி கந்தகிரி 22. ஏமூர் 216. கஞ்சமலை 219. கந்தாசிரமம் 228. கபிலமலை 22. காந்தமலை 227. குமரகிரி 55. கொல்லிமலை 244. சென்னிமலை 72. சேலம் 84. திருச்செங்கோடு-நாககிரி 173. ராசிபுரம் (ராஜபுரம்) 299. வேளுக்குறிச்சி.

**தென்னாற்காடு மாவட்டம்:**

1. அண்ணாமலைநகர் 191. அத்திப்பட்டு 12. இராஜேந்திரன்பட்டினம் 25. கடம்பூர் 229. குமாரகுப்பம் 48. கூடலையாற்றூர் 60. சிதம்பரம் 62. சிவபுரி 81. திருக்கோவிலூர் 92. திருநாமநல்லூர் (திருநாவலூர்) 62. திருநெல்வாயில் 89. திருத்தளூர் 98. திருப்பாதிரிப்புலியூர் 106. திருமாணிக்குழி 112. திருவக்கரை 111. திருவதிகை 112. திருவரத்துறை 118. திருவாமாத்தூர் 119. திருவாமூர் 1. திருவேட்களம் 60. தில்லை 136. தேவனூர் 129. திருவெண்ணெய்நல்லூர் 89. துறையூர் 149. பாக்கம் 201. முட்டம் (ஸ்ரீமுஷ்ணம்) 169. மயிலம் 12. யாழ்ப்பாணாயன் பட்டினம் 190. விருத்தாசலம் 191. வில்லுடையான்பட்டி 194. வேப்பஞ்சத்தி (வேப்பூர்).

**வடஆர்க்காடு மாவட்டம்:**

197. ஆற்காடு 205. இரத்தினகிரி 211. எலத்தூர் 23. ஒடுக்கத்தூர் 137. கனககிரி 36. காமக்கூர் (காமத்தூர்) 54. குரட்டி (கொரட்டி) 99. திருக்கரபுரம் 99. திருப்பாற்கடல் 115. திருவலம் 110. திருவண்ணாமலை 133. திருவோத்தூர் (செய்யாறு) 137. தேவிகாபுரம் 172. மூள்வாய் 115. வல்லம் 182. வள்ளிமலை 189. விரிஞ்சிபுரம் 197. வேப்பூர்.

**செங்கை-எம்.ஜி.ஆர். மாவட்டம்:**

6. ஆண்டார்குப்பம் 204. ஆனூர் 15. இளையனார்வேலூர் 17. உத்தரமேரூர் 132. ஒற்றியூர் 32. காஞ்சிபுரம் - ஏகாம்பரேசுரர் கோயில் 33. கச்சபேசுரர் திருக்கோயில் 34. கச்சிமேற்றளி 35. குமரகோட்டம் 233. குன்றத்தூர் 57. கோசைநகர் (கோயம்பேடு) 180. கோடைநகர் 65. சிறுவாபுரி (சிறுவரம்பேடு) 71. சேயூர் 6. தச்சூர் 250. திருக்கச்சூர் 76. திருக்கழுக்குன்றம் 88. திருத்தணி 104. திருப்போரூர் 109. திருமுல்லைவாயில் 150. திருவலிதாயம் 122. திருவாலங் காடு 130. திருவேற்காடு 132. திருவொற்றியூர் 141. நெடியமலை 148. பாகசாலை (பாகை) 150. பாடி 283. பெருங்கரணை 284. பெரும்பேடு 159. பெரும்பேறு கண்டிகை 159. பேறைநகர் 164. மதுராந்தகம், 165. மதுராந்தகம்-வடசிற்றம்பலம்

293. மாகறல் 170. மாடம்பாக்கம் (மாடயம்பதி) 180. வல்லக்கோட்டை 71. வளவாபுரி 187. விசூர் 195. வெள்ளிகரம்.

**சென்னை மாவட்டம்:**

218. கந்தகோட்டம் 125. திருவான்மியூர் 168. மயிலாப்பூர் 295. வடபழனி.

**கேரள மாநிலம்:**

207. இளங்குன்னபுழா 208. உதயணாபுரம் 209. உள்ளூர் 221. கன்னிமங்கலம் 224. கிடங்கூர் 231. குமூர் 51. கொடும்பு (கொடும்பை) 241. செங்கணாச்சேரி 252. திருக்குமரன்கூடம் 266. திருவஞ்சிக்குளம் 271. தைக்காடு 278. பழுவில் 288. பையனூர் 289. ஸ்ரீமஞ்சேஸ்வரர் 300. ஹரிப்பாடு.

**ஆந்திர மாநிலம்:**

10. இந்திர சைலாத்திரி (வடவிஜயபுரம்) 38. காளஹஸ்தி 95. திருப்பதி (திருவேங்கடம்) 200. ஸ்ரீசைலம் (திருமலை).

**கர்னாடக மாநிலம்:**

239. சுப்பிரமண்யா 265. திருமுக்கூடல் 140. நிம்பமுரா 273. நஞ்சன்கூடு 279. பாகமண்டலா.

**பாண்டிச்சேரி மாநிலம்:**

90. திருநள்ளாறு 176. வடுகூர்.

**வடநாடு:**

75. கயிலைமலை (திருக்கைலாயம்) 280. பார்வதிமலை (பூனா) 184. காசி (வாரணாசி) 202. ஹரித்துவார்.

**வெளிநாடுகள்:**

**இலங்கை:**

26. கதிர்காமம் 40. கீரிமலை (அருக்கொணாமலை) 80. திருகோணமலை 294. மாவிட்டபுரம் 274. நல்லூர்.

**மலேசியா:**

277. பத்துமலை.



## விநாயகர் துதி

கைத்தல நிறைகனி அப்பமொ டவல்பொரி
கப்பிய கரிமுகன்
அடிபேணிக்-

கற்றிடும் அடியவர் புத்தியில் உறைபவ
கற்பகம் எனவினை
கடிதேகும்;

மத்தமு மதியமும் வைத்திடும் அரன்மகன்
மற்பொரு திரள்புய
மதயானை-

மத்தள வயிறனை உத்தமி புதல்வனை
மட்டவிழ் மலர்கொடு
பணிவேனே;

முத்தமிழ் அடைவினை முற்படு கிரிதனில்
முற்பட எழுதிய
முதல்வோனே-

முப்புரம் எரிசெய்த அச்சிவன் உறைரதம்
அச்சது பொடிசெய்த
அதிதீரா;

அத்துய ரதுகொடு சுப்பிர மணிபடும்
அப்புன மதனிடை
இபமாகி-

அக்குற மகளுடன் அச்சிறு முருகனை
அக்கண மணமருள்
பெருமாளே !

# திருப்புகழ்த் திருத்தலங்கள்

## திருமுருகன் திருவருள்

முருகன், குமரன், அழகன், கந்தன் எனப் பல திருநாமங்களில் வழிப பெறும் முருகப் பெருமான் மும்மூர்த்திகளின் சக்திகளும் ஒருங் பெற்றவராகத் திகழ்கின்றார்.

முத்தொழில் புரியும் கடவுளர்களான காக்கும் கடவுள் **முகுந்த** அழிக்கும் கடவுள் **ருத்ரன்,** படைக்கும் கடவுள் **கமலோற்பவன்** ஆ மூவரின் முதல் எழுத்துக்களின் அடக்கமே '**முருக**' என்னும் திருப்பெய கும்.



இவருடைய ஆறு திருமுகங்களும் 1) முற்றறிவு 2) அளவிலின்பம் 3) வரம்பிலாற்றலுடைமை 4) தன்வயமுடைமை 5) பேரருள் உடைமை 6) இயற்கை அறிவு என்னும் ஆறு குணங்களைக் குறிப்பதாகும். இவரது திருமேனி அருளுரு.

இவரது ஆயுதம் தோமரம், கொடி, வாள், குலிசம், அம்பு, அங்குசம், மணி, தாமரை, தண்டம், வில், மழு, வேல். இவை பன்னிரு கரங்களிலும் உள்ளன. இதில் வேல் தவிர மற்ற பதினொரு ஆயுதங்களும் பதினொரு உருத்திரர்கள்.

வேல் மூன்று சக்திகளின் உரு. இது நாத தத்துவம். இச்சா, கிரியா, ஞான சக்தி உடையவன். இச்சா சக்தி வள்ளி நாயகி; கிரியா சக்தி தெய்வயானை; ஞானசக்தி திருக்கை வேல்.

வாகனம் மயில்; இது விந்து தத்துவம். இரு நாச்சியார்களும் சிற்சித்தி, பரா சத்தியர்.

குமரக் கடவுளின் வாகனம் ஆடு, யானை, மயில் ஆகும். கொடி சேவல், மாலை நீபம் ஆகும்.

ஒருமுறை சிவன், பார்வதி, கங்கை, அக்னி ஆகிய நால்வரும் ஓரிடத்தில் இருந்தனர். அப்போது அங்கு வந்த குமரன் தங்களில் யாரிடத்தில் வருவாரென நால்வரும் எண்ணிக் குமரனை நோக்கினர். இவர்கள் எண்ண ஓட்டத்தினை அறிந்து கொண்ட குமரன் தம்மை ஸ்கந்தர், சாகர், விசாகர், நைகமேயர் என நான்கு உருவம் கொண்டு நால்வரிடமும் சென்றதாகப் புராணம்.

அதேபோல் முருகன் திருநாமம் துதித்து, திருப்புகழ் பாடுவோர் நெஞ்சகத்தே முருகப் பெருமான் குடியேறுவார், அருள் தருவார்.

ஒவ்வொரு திருக்கோயிலுக்கும் பல்வேறு சிறப்புகள் உண்டு. தேவாரம், திருப்புகழ், திருவாசகம் பாடல் பெற்ற தலங்கள், வைப்புத் தலங்கள், சிற்பக்கலை, ஓவியக் கலைகளால் சிறப்புப் பெற்றது; வழிபடுவோர் பெற்ற வரங்களால் சிறப்பு பெற்றன எனப் பலவகை உண்டு.

அருணகிரிநாதரின் திருப்புகழால் பாடல் பெற்ற திருமுருகன் திருத்தலங்கள் தனிச் சிறப்பு வாய்ந்தன.

குமரன் திருத்தலங்களில் கார்த்திகை நாள், பூச நாள், விசாக நாள், உத்தர நாள் சிறப்பானவையாகும். முருகனுக்குக் காவடிகள் மிகவும் பிடித்த ஒன்றாகும்.

அருள்ஞானக் குமரனின் திருத்தலங்களைத் தரிசித்து அவன் அருள் பெற்று மகிழ்வோம்.

# திருமுருகன் வரலாறு

சூரபத்மன் என்னும் அசுரன் தேவர்களுக்கு இன்னல்கள் பல விளைவித்து வந்தான். அவன் மகன் பானுகோபனால் சுவர்க்கம் எரிக்கப்பட்டு இந்திரன் மகன் ஜெயந்தனும் தேவர்களும் சிறைப்படுத்தப்பட்டனர்.

இத்துன்பங்களைக் களைய வேண்டி தேவர்கள் சிவபெருமான் உமா தேவியுடன் கயிலையில் யோகத்தில் எழுந்தருளி இருக்கையில் கயிலை சென்று சிவனைத் துதித்து வேண்டினர்.

அவர்களின் முறையீட்டினைக் கேட்டு திருவுள்ளம் இரங்குகின்றார். சிவபெருமானும் தமக்கு இயல்பாக உரிய ஈசானம், தற்புருடம், அகோரம், வாமதேவம், சத்தியோசாதம் முதலிய ஐந்து முகங்களோடு அதோ முகமொன்றும் கொண்டு ஆறு திருமுகங்களை உடையவராகி அம் முகங்களில் உள்ள நெற்றிக் கண்கள்தோறும் ஒவ்வொரு தீப்பொறிகளைத் தோற்றுவித்து அருளினார்.



அவைகள் எல்லா உலகிலும் பரவித் தேவர்களுக்கு அச்சத்தை, விளை வித்தன. அதனால் சிவபிரான் அவைகளைத் தம் திருக்கரத்தினால் எடுத்து



வாயுதேவனிடம் கொடுத்தார். அவர் அதனைத் தாங்காமல் அக்கினி பகவானிடம் கொடுத்தார். அக்கினி பெருமான் அத்தீப்பொறிகளை ஏற்று அதைத்தாங்க முடியாமல் கங்கையில் விட்டார். கங்கை அதன் வெப்பம் தாங்காமல் தன் மடியில் தாங்கிக் கரையிலுள்ள சரவணப் பொய்கையில் அப்பொறிகளைச் சேர்த்தனள். அங்கு அவ்ஆறு பொறிகளும் ஆறு குழந்தைகள் ஆயின. கார்த்திகைப் பெண்கள் அறுவரின் முலைப்பால் குடித்து விளையாடின. சிவபிரான் அக்குழந்தைகளை உமாதேவியாருக்குக் காட்டினார். தேவி அந்த ஆறு குழந்தைகளையும் எடுத்து ஒன்றாகச் சேர்த்து அணைத்தார்.

அப்போது அருவமாயும் உருவமாயும் அநாதியாயும் ஒன்றாயும் பலவாயும் பரப்பிரம்மமாயும் விளங்கும் சோதிப் பிழம்பான சிவபெருமானே ஒரு திருமேனியாக வடிவு கொள்ள முருகப் பெருமான் ஓருருவாகத் திரு அவதாரம் செய்தருளினார்.

ஆகாயத்தில் தேவதுந்துபிகள் ஒலித்தன. வேதங்கள் ஆர்த்தன. திருமால், பிரம்மா, இந்திரன், தேவர்கள் பூமாரி பெய்தனர். அதைக் கண்டு மகிழ்ந்து 'கந்தன்' எனப் பெயரிட்டு அணைத்து உச்சிமோர்ந்து திருமுலைப்பால் ஊட்டி சிவபெருமானிடம் குழந்தையை அளித்தார் உமாதேவியார்.

பிரம்மா, விஷ்ணு, இந்திரன் முதலியோர் முனிவர்கள், தேவர்கள் சூழ சரவணப் பொய்கையை அடைந்து குமரனைக் கண்டு மகிழ்ந்தனர்.

இறைவன் ஆறுமுகனைத் தம் பக்கத்தில் இறைவியோடு அமர்த்தி சோமாஸ் கந்தமூர்த்தியாகத் திகழ்ந்தார்.



**நவசக்திகள்:**

சிவபிரானின் நெற்றிக் கண்ணிலிருந்து, தோன்றிய ஆறு சோதிகளைக் கண்டு பயந்து உமாதேவி ஓடினார். அப்போது உமாதேவியாரின் கால் சிலம்பிலிருந்து சிதறிய மணிகளிலிருந்து மாணிக்கவல்லி, புஷ்பராகவல்லி, கோமேதகவல்லி, முத்துவல்லி, வைடூர்யவல்லி, வைரவல்லி, மரகதவல்லி, பவளவல்லி, இந்திர நீலவல்லி என்னும் நவசக்திகள் தோன்றினர்.

அவர்கள் சிவபெருமானை வணங்கி விருப்புடன் நோக்கக் கருக் கொண்டனர். அதனால் அவர்களிடமிருந்து வீரவாகு, வீரகேசரி, வீரமகேந்திரர், வீரமகேசுவரர், வீரபுராந்தகர், வீரராட்சசர், வீரமார்த்தாண்டர், வீராந்தகர், வீரதீரர் என்னும் நவவீரர்கள் தோன்றினர்.

**இளமைக்காலம்:**

முருகப் பெருமான் இந்திரனிடம் தன் வலிமையைத் தெரிவித்து விஸ்வரூபத் தரிசனம் தந்து இந்திரனால் செய்விக்கப்பட்ட மகா மண்டபத்தில் எழுந்தருளினார். அபிஷேகம் செய்து கொண்டு 'தேவ சேனாதிபதி' என்னும் பட்டம் பெற்றுக் கயிலையில் எழுந்தருளினார்.

நாரதர் செய்த வேள்வியில் பிறந்த வெள்ளாடு உலகைத் துன்புறுத்துவதனைக் கண்டு தேவர்கள் முருகப் பெருமானிடம் வேண்டினர். முருகப் பெருமானும் தம் துணைவரான வீரபாகுவை அனுப்பி வெள்ளாட்டைப் பிடித்து வரச் செய்தார். அதனை முருகப்பெருமான் எட்டுத் திக்குகளிலும் செலுத்தி விளையாடி அதனைத் தம் வாகனமாகக் கொண்டார்.

**பிரமன் சிறைப்படுதல்:**

சிவமூர்த்தியைத் தரிசனம் செய்து திரும்பும் தேவர்களுடன் வந்த பிரமன் முருகப் பெருமானைப் பணியாது போனார். முருகப் பெருமான் பிரமனை அழைத்து ''நீர் யார்? என்ன தொழில் செய்கின்றீர்!'' என வினவினார்.

அதற்கு அவர் ''நான் பிரமதேவன். படைப்புத் தொழில் செய்கிறேன்'' என்றார். ''படைப்புத் தொழிலை எவ்வாறு செய்கிறீர்'' என முருகப் பெருமான் வினவ, பிரமன் ''வேதங்களை ஓதிச் செய்கிறேன்'' என்றார். முருகப் பெருமான் ''வேதங்களை ஓதிக்காட்டு'' எனப் பணித்தார். பிரமனும் வேதத்தினை ஓத முற்பட்டு முதலில் ''ஓம்'' என்று கூறத் தொடங்கினார். முருகப்பெருமான் உடனே அவரை நிறுத்தி ''நீ இப்போது கூறிய 'ஓம்' என்பதன் பொருள் கூறுக'' என வினவினார். பிரமனும் பொருள் தெரியாது விழித்தார்.

''பிரணவத்திற்குப் பொருள் தெரியாத நீ எவ்வாறு படைத்தல் தொழில் செய்வது'' எனக் கடிந்து பிரமனின் தலையில் குட்டி கந்தமானச் சிறையில் அடைத்தார். பிரமன் செய்து வந்த படைப்புத் தொழிலைத் தாமே மேற்கொண்டனர்.

தேவர்கள் பிரமன் முருகப் பெருமானிடம் சிறைப்பட்டதனைச் சிவபிரானிடம் சென்று எடுத்துக் கூறினர். சிவபெருமான் பிரமனை விடும்படி முருகப்பெருமானிடம் கூறினார். ''அயனைச் சிறை விடுப்பது தங்கள் திருவுளமாகில் அவ்வாறே செய்கிறேன்'' எனக் கூறிய கந்த பெருமான் அயனைச் சிறையினின்றும் விடுவித்தார். பிரமனும் முருகப் பெருமானைப் பணிந்து வணங்கி மீண்டும் படைப்புத் தொழிலை மேற்கொண்டார்.

சிவனும் முருகட பெருமானிடம் ''பிரம்மாவிடம் கேட்ட பிரணவத்தின் பொருளைத் தமக்குக் கூற வல்லையோ'' எனக் கேட்க குமரனும், பிரணவத்தின் பொர்ருளை முறைப்படி கேட்டால் உரைப்பேன் எனக் கூறினார். சிவபிரான் அதற்கு இசைய முருகப்பெருமான் சிவபெருமானின் திருச்செவிகளில் பிரணவத்தின் பொருளை ஓதியருளினார்.

**திருமாலின் புதல்வியர்:**

திருமாலின் புதல்வியர்களான அமிர்தவல்லி, சுந்தரவல்லி இருவரும்



முருகப் பெருமானை மணம் முடிக்க விரும்பிச் சரவணப் பொய்கையில் தவம் செய்தனர். முருகப் பெருமான் அவர்கள் முன் தோன்றி ''நீங்கள் இருவரும் இந்திரனிடத்தும் சிவமுனிவரிடத்தும் பிறந்திருங்கள். நாம் உங்களை மணக்கின்றோம்'' எனத் திருவாய் மலர்ந்தருளினார்.

**பழனியாண்டவர்:**

ஒருநாள் நாரதப் பெருமான் மாங்கனி ஒன்றினைச் சிவபெருமானிடம் வழங்கினார். முருகப் பெருமானும், விநாயகரும் அக்கனியைத் தங்களுக்குத் தருமாறு வேண்டினர்.

அதனை இருவருக்கும் பகிர்ந்து கொடுக்காது உலகுக்கு ஓர் அரிய தத்துவத்தைப் போதிக்க திருவுள்ளம் கொண்டார். ''குழந்தைகளே அகில உலகத்தையும் ஒரு கணப் பொழுதில் முதலில் வலம் வருகின்றவர்களே இக்கனிக்குரியவராவர்'' என்றார் சிவபிரான்.

முருகப்பெருமான் மயில் மீது ஏறி வாயு வேகம் மனோவேகம் கொண்டு உலகைச் சுற்றி வரப் புறப்பட்டார். ஆனால் விநாயகப் பெருமான் தாய் தந்தையரை வலம் வந்து ''தந்தையே! சகல பிரபஞ்சங்களும் அண்ட சராசரங்களும் தங்கள் திருவடிகளில் அடக்கம் - நான் தங்களை வலம் வந்து விட்டேன். அப்படியானால் அண்டங்கள் அனைத்தையும் வலம் வந்ததாகத்தானே பொருள்'' என நயமாகப் பேசி கனியினைப் பெற்றுக் கொண்டார்.

உலகை வலம் வந்த முருகப் பெருமான் கனி விநாயகர் கரத்திலிருக்கக் கண்டார். ''தந்தையே! இது நியாயமன்று! இனி இங்கு ஒரு கணமும் நான் இருக்க மாட்டேன்'' எனக் கூறி தாம் அணிந்திருந்த அணிகலன்களையும் ஆயுதங்களையும் அகற்றி தண்டம் ஏந்தி மயில் மீதேறி கயிலையை விட்டு பழனியை அடைந்து பழனியாண்டவராக மக்கட்கு அருள்பாலிக்கலானார்.

**சூரபத்மனை அழித்தல்:**

சிவபெருமான் கேட்டுக் கொண்டபடி தேவர்களைத் துன்புறுத்திய அசுரர்களை அழிக்கப் புறப்பட்டார் வேலாயுதமூர்த்தி. தாரகாசுரன், கிரவுஞ்சனை அழித்து திருச்சேய்ஞலூரை வந்து அடைந்தார். அங்குச் சிவனை வணங்கிப் பாசுபதம் பெற்றார். அங்குத் தவம் இருந்த பராசபுத்திரருக்கு அனுக்கிரகம் செய்தார்.

பின்னர் திருச்செந்தூரில் எழுந்தருளினார். வீரபாகுவைச் சூரபத்மனிடம் தூது அனுப்பி சிறையிடப்பட்ட தேவர்களை விடுவிக்கும்படிக் கூறினார். அவர்களைச் சிறை விடுத்து இனி தேவர்களைத் துன்புறுத்துவதில்லை என முருகப்பெருமானிடம் பணிந்து வேண்ட வேண்டும் என்று வீரபாகு வழி தூதனுப்பினார். இல்லையெனில் போர் செய்து உம்மை அழிப்போம் என்றும் அறிவுறுத்திக் கூறினார்.

சூரபத்மன் அதனைக் கேட்காது ஆணவமாகப் பேசவே கந்த பெருமான் போரிடப் புறப்பட்டார். கதிர்காமம் என்னும் தலத்தில் கந்தபெருமான் தங்கினார். சூரபத்மன் படையுடன் எதிர்க்கப் புறப்பட்டார்.

முதல்நாள் போரில் சூரபத்மன் மகன் பானுகோபன் போரிட வந்து தோல்வி கண்டு புறமுதுகிட்டுத் திரும்பினான்.

இரண்டாம் நாள் சூரபத்மனும் சிங்கமுகாசுரன் அதிசூரனும் தாரகா சுரன் மகன் அசுரேந்திரனும் உடன் வந்தனர். வீரபாகுத் தேவர் அசுரேந்திரனைக் கொன்றார்.

மூன்றாம் நாள் சூரபத்மன் தன் மற்றொரு மகன் இரணியனைப் போரிடச் சொன்னான். அவன் அறிவுரை கூறியும் சூரபத்மன் ஏற்கவில்லை. இருப்பி னும் 'தந்தை சொல் மிக்க மந்திரமில்லை' என்னும் திருவாக்கினை ஏற்றுப் போரிடச் சென்றான். போரில் தோற்றதும் தம் பெற்றோருக்கு அந்திமக்க டன் செய்யத் தான் உயிரோடு இருக்க வேண்டுமென எண்ணி மாயா



சக்தியால் மீனுருக்கொண்டு மறைந்தான். வீரபாகுத் தேவர் பானுகோப னைக் கொன்றார்.

சிங்கமுகாசுரன் ஆயிரம் முகம் கொண்டவன். அவன் தேவாதியரையும் வீரபாகுவையும் தன் தாய் கொடுத்த பாசத்தை விட்டுக் கட்டிக் கடலில் இட்டான். பாலசுப்பிரமணியருடன் போரிட வந்த பூதப்படைகள் அனைத்தையும் கோர ரூபம் கொண்டு விழுங்கினான். குமரக் கடவுளால் பலமுறை வெட்டப்பட வெட்டுண்ட சிரம் மீண்டும் மீண்டும் கிளைத்தது. குமாரக் கடவுள் உங்கரிப்பால் கிளைத்தல் ஒழிந்து ஒரு சிரம் இருகரங்கள் பெற்று அடங்கிக் கடைசியில் வேலாயுதத்தால் உயிரிழந்தான்.

பத்து நாட்கள் யுத்தம் நடந்தது. சூரபத்மன் திறமையாகப் போரிட்டான். முடிவில் இந்திர ஜாலத் தேரைக் கொண்டு சஞ்சீவியால் உயிர்ப்பித்த பானுகோபன், சிங்கமுகன், தருமகோபன் முதலிய வீரர் களைக் கொண்டு மீண்டும் போரிட்டான்.



முருகப் பெருமான் பாசுபதத்தால் மீண்டும் அவர்கள் அனைவரையும் கொன்றார். சூரபத்மன் எடுத்த மாமர உருவை வேலாயுதத்தால் இரு பிளவாக்க அவன் பெற்ற வரத்தால் மீண்டும் நல்லுருவுடன் வந்தான். மீண்டும் அவனை இரு பிளவாக்க அவ்விரு பிளவும் மயிலும், சேவலுமாக மாறின.

மயிலை வாகனமாகவும், சேவலைக் கொடியாகவும் பிடித்துத் தேவர்களைச் சிறை மீட்டார். பின் செந்திலை அடைந்து சிவபூசை செய்தார். இவ்வாறாக சூரபத்மனை அழித்ததனால் மும்மூர்த்திகளின் குறைகளைப் போக்கினார். தேவர்களை விடுவித்தார். தேவேந்திரன் தனக்கும் தேவர்கட்கும் உதவிய முருகனுக்குத் தம் நன்றியைப் புலப்படுத்த விரும்பி தன் மகளான தேவசேனாதேவியை மணம் முடிக்க விரும்பினார்.

**தேவசேனா தேவி திருமணம்:**



பின்னர் முருகப்பெருமான் திருப்பரங்குன்றம் சென்றடைந்தார். முனிவர் அறுவருக்கும் யோகம் அருளினார். ஆறு முனிவர்களும் தேவதச்சனால்

உருவாக்கப்பட்ட திருக்கோவிலில் குமரனை எழுந்தருளச் செய்தனர்.

அப்போது தேவேந்திரன் தன் மகள் தேவசேனாதேவியை முருகப் பெருமானுக்கு மணமுடிக்க விரும்பி, முருகப் பெருமானிடம் வேண்டினார். அமுதவல்லியே தேவசேனாதேவியாவார்..

பெருமானும் சம்மதிக்க திருப்பரங்குன்றத்தில் தேவர்கள் சூழ சிவபெருமான் உமையுடன் எழுந்தருளத் திருமணம் சிறப்பாக நடந்தது. திருமணத்திற்குத் தேவர்களும், முனிவர்களும் எழுந்தருளியிருந்தனர்.

குமரப் பெருமான் தேவசேனாபதியுடன் எழுந்தருளி திருப்பரங்குன்றத்தில் அனைவருக்கும் திருவருள் புரிந்து வந்தார்.

**வள்ளி நாயகி பிறப்பு:**

இந்திரன் சாபத்தினால் திருமால் பூலோகத்தை அடைந்து வள்ளி மலையில் சிவமுனிவர் என்னும் நாமத்துடன் அமர்ந்து தவம் செய்து



வந்தார். அங்குத் திருமகள் மானுருவாக அவதரித்து வர திருமால் அம்மானினை நோக்கினார். அம்மான் கருவுற்று சுந்தரவல்லிதேவி வள்ளிக்

கிடங்கில் குழந்தையாகப் பிறந்தார். திருமாலும் திருமகளும் சாப விமோச னம் பெற்று குழந்தைக்குத் திருவருள் புரிந்து மறைந்தனர்.

நம்பிராஜன் என்னும் வேடர் தலைவன் தம் மனைவியுடன் அங்கு வர இருவரும் அக் குழந்தையைக் கண்டு மகிழ்ந்தார்கள். அக்குழந்தையை எடுத்துச் சென்று வளர்க்கலானாள். வள்ளிக் கிடங்கில் கிடைத்ததால் அக்குழந்தைக்கு வள்ளி என்று திருநாமம் சூட்டினர்.

வள்ளி தேவி பருவநிலை அடைந்ததும் வேடுவர் வழக்கப்படி தினைக் கொல்லையைக் காவல் புரிய அனுப்பினர். வள்ளிதேவி தினைப் புனத்தில் எத்திசையும் நோக்கும் வகையில் பரண் அமைத்துக் காவல் காத்தார்.

ஆறுமுகப் பெருமான் வள்ளிதேவிக்கு அருள்புரிய தக்க நேரம் வந்ததை அறிந்து திருத்தணிகை மலையில் வந்து எழுந்தருளினார்.

**நாரதர் வள்ளிதேவி பற்றி முருகனிடம் கூறல்:**

நாரதப் பெருமான் முருகனை வணங்கி ''வள்ளி மலையில் தினைப்பு னங் காக்கும் வள்ளி தேவியின் அழகினை எடுத்துக் கூறி முற்பிறப்பில் திருமாலின் திருமகளான சுந்தரவல்லிக்குப் பெருமான் கொடுத்த வாக்கி னையும் நினைவுபடுத்தினார். அவரே வள்ளி தேவியாக அவதாரம் செய்ததாகவும் அவருக்கு அருள்புரிக'' எனவும் வேண்டினார்.

**முருகப் பெருமான் வள்ளி தேவியைக் காணச் செல்லல்:**

ஆறுமுகப் பெருமானும் மானிட உருக்கொண்டு வீரக்கழல் அணிந்து வில்லும் அம்பும் ஏந்தி வேடுவ உருவெடுத்து வள்ளிமலையை அடுத்த தினைப்புனத்திற்கு எழுந்தருளினார்.

பரண் மீதிருந்த வள்ளியை அணுகி இன்ப மொழி கூறி அழகே திருவுருவான உன்னை எவ்வாறு தினைப்புனம் காக்க அனுப்பினார் என வினவினார். அப்போது அங்கு வேடர் தலைவனான நம்பிராஜன் வந்தார். உடனே முருகக் கடவுள் ஒரு வேங்கை மர வடிவெடுத்து நின்றார்.

நம்பிராஜன் தன் மகளுக்குத் தேனும் தினைமாவும், பாலும் அளித்தான். அருகே புதுமையாக நின்ற வேங்கை மரத்தினைக் கண்ட உடன் வந்த வேடர்கள், அதனால் தீங்கு நேரும் என எண்ணி வெட்ட முயல நம்பிராஜன் அதனைத் தடுத்து வள்ளிக்கு இது இனிய துணையாக நிற்கும் எனக் கூறிச் சென்றான்.

வேடர் தலைவன் சென்றதும் மீண்டும் பழைய மானுட உருவை அடைந்த பெருமான் வள்ளியிடம் மீண்டும் தம் மனக்கருத்தை வெளியிட் டார். வள்ளி ''முதியவரான தாங்கள் இவ்வாறு பேசுவது சரியா'' என வினவினார். அப்போது மீண்டும் வேடர்கள் வரும் ஒலி கேட்டு உடனே இவ்விடம் விட்டு அகல வேண்டினார் தேவி.

முருகப் பெருமான் புதிய முதிய சிவனடியார் வேடம் பூண்டு வேடர்

தலைவனை எதிர்கொண்டார். நம்பிராஜனும் சிவனடியாரை வணங்கி, யாரென வினவ, ''இங்கே நும்வரைக் குமரியாடுவதற்கு விரும்பி வந்தேன்' எனக் கூறினார்.

நம்பிராஜரும் இங்குத் தீர்த்தமாடி என் மகளுக்கும் துணையாக இருப்பீராக என வேண்டினான். வேடன் சென்றதும் வள்ளி முருகப் பெருமானுக்குத் தேனும் திணைமாவும் அளித்தார். நீர் அருந்த சுனைக்குச் செல்ல வழி தெரியாததால் வள்ளியையே வழிகாட்ட அழைத்தார்.



வள்ளிக்கு யானை மீது பயம் என்று உணர்ந்த முருகப் பெருமான் தம் தமையனாரை மனதில் வேண்ட அவரும் யானை உருக்கொண்டு எதிரில் வர வள்ளி தேவி பயந்து முதியவரைத் தழுவிப் பிடித்துக் கொண்டார். முருகப் பெருமான் குறிப்பறிந்து விநாயகரும் விலகினார்.

முருகப் பெருமான் வள்ளிக்குத் தன் சுய உருவினைக் காட்டி காட்சிதர வள்ளியும் தமக்கு முன்பே சுய உருவை காட்டாதது குறித்து வருந்தி தன் பிழையினைப் பொறுக்கும்படி வேண்டினார்.




முருகப் பெருமான் வள்ளி தேவியிடம் மீண்டும் திணைப்புனம் செல்லுமாறும் தக்க நேரத்தில் வருவதாகவும் அருளினார்.

**வள்ளி திருமணம்:**

அறுவடை முடிந்ததும் நம்பிராஜன் இல்லம் திரும்பினார் தேவி. ஒருநாள் இரவு நம்பிராஜன் இல்லம் சேர்ந்து வள்ளியை யாரும் அறியா வண்ணம் அழைத்துக் கொண்டு சென்றார் முருகப்பெருமான்.

நம்பிராஜன் விவரம் அறிந்து பெருமானை எதிர்த்துப் போரிட நம்பிராஜன் எய்த அம்பும் வேலும் மாலைகளாகப் பெருமான் திருவடிகளில் வீழ்ந்தது. நம்பிராஜனும் உண்மையை உணர்ந்து பெருமான் திருவடிகளில் பணிந்தார். பெருமானும் வள்ளிநாயகியும் தன் நீலமயில் வாகனத்தில் மயில்வாகனனாகக் காட்சி தந்தார்.

நம்பிராஜன் முன்னின்று வள்ளித் திருமணத்தை நடத்தினார். திருமால், நான்முகன், இந்திரன் முதலான தேவர்கள் சிவபெருமான் உமாதேவியாரோடு விண்ணில் எழுந்தருளி மணவிழாவில் வந்து வாழ்த்தினார்.



*இதே சமயத்தில் பிராட்டியாருக்கும் அலங்கார வைபவம் நடந்த வண்ணமாகவே இருந்தது.*

முருகப் பெருமான் வள்ளி தேவியுடன் தணிகைமலையில் எழுந்தருளினார்.

முருகப் பெருமான் தேவசேனா வள்ளி சமேதரராக எழுந்தருளி அவன் அடியவர்கட்கு அருள் பாலிக்கின்றார்.

முருகப்பெருமான் அவதாரம் சித்திரைமாத பூர்வ பட்சத்துப் பௌர்ணமி. ஈருருவம் ஒன்றானது பூர்வபட்சத்துப் பஞ்சமி. தேவசேனாபதி ஆனது சஷ்டி என்பர்.

**அறுபடை வீடுகள்:**

1. தேவேந்திரன் திருக்குமாரி தெய்வயானையை மணந்தது திருப்பரங்குன்றம்.

2. சூரபத்மனை வதம் செய்து உலகைக் காத்தது திருச்செந்தூர்.
3. மாங்கனிக்காகச் சினந்து தங்கியது பழனி.
4. தந்தைக்குப் பிரணவம் உரைத்தது சுவாமிமலை.
5. வள்ளியை மணந்தது திருத்தணி.
6. இருதேவியருடன் பக்தர்கட்குக் காட்சிக் கொடுத்தது பழமுதிர் சோலை.

**ஆறு ஆதாரங்கள்:**

*நம் உடம்பில் ஆறு ஆதாரங்கள் உள்ளன. அவை: மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்ஞை எனப்ப டும். இந்த ஆறு ஆதாரங்களிலும் முருகப்பெருமான் வீற்றிருந்து அருள்புரிவதாக யோகிகள் கூறி வழிபடுவர்.*

*ஆறுபடை வீடுகளை ஆறு ஆதாரங்களாகப் பிரித்துள்ளனர்.*

| | | |
|---|---|---|
| *திருப்பரங்குன்றம்* | - | *மூலாதாரம்* |
| *திருச்செந்தூர்* | - | *சுவாதிஷ்டானம்* |
| *திருவாவினன்குடி* | - | *மணிபூரகம்* |
| *திருவேரகம்* | - | *அநாகதம்* |
| *குன்றுதோறாடல்* | - | *விசுத்தி* |
| *பழமுதிர்ச்சோலை* | - | *ஆக்ஞை* |



**அருணகிரிநாதர்:**

அருணகிரிநாதர் பட்டினத்தடிக ளுக்கு சுமார் 500 ஆண்டுகட்கு முன்பு திருவண்ணாமலையில் பிறந்தார். இளமையில் தாயினை இழந்து தமைக்கையால் வளர்க்கப் பெற்றார்.

இளமைக் காலத்தில் செல்வங் களை இழந்து தமக்கையின் கர்ண கடூர வார்த்தைகளினால் வெறுப்புற் றார்.

திருவண்ணாமலை வல்லாள திருக்கோபுரத்திலிருந்து கீழே குதித்து உயிர் நீக்க விரும்பிக் குதித் தார். குமாரக் கடவுள் துறவியாக வந்து காப்பாற்றினார் 'அருணகிரி நாதர்' என அழைத்து, நோய் நீக்கி, ஜபமாலை அளித்து பின் மயில்வா கனனாகக் காட்சியும் தந்தார். அரு ணகிரிநாதர் நாவில் தம் வேல் கொண்டு சடாக்ஷரம் பொறித்தார். எம் மீது பாடுக எனப் பணித்து

''முத்தைத்தரு பத்தித் திருநகை'' என அடியெடுத்துக் கொடுத்து திருப்புகழ் பாடக் கட்டளையிட்டார்.

அருணகிரிநாதரும் முருகன் மெய்யடியாராகி குமாரக் கடவுள் ஆலயம் தோறும் சென்று திருப்புகழ் பாடினார்.

சம்பந்தாண்டவன் நான் என் தேவியான காளியை வரவழைக்கிறேன். அருணகிரிநாதர் தம் முருகனை வரவழைப்பாரா? எனச் சவால் விடுத்தார். அருணகிரிநாதர் முருகப் பெருமானை வணங்கி, ''அதல சேடனாராட'' என்னும் திருப்புகழினைப் பாடினார். அடியவரின் வேண்டுதலை ஏற்று முருகப் பெருமான் காட்சி தந்தார். மயில் மீதேறி வந்து காட்சி தந்த பெருமானே, திருவண்ணாமலைத் திருக்கோவிலில் ''கம்பத்திளையனார் கோவில்'' என்னும் சந்நிதியில் காட்சி தருகின்றார்.

திருத்தலங்கள் தோறும் திருப்புகழ் பாடிவரும் போது திருச்செந்தூரில் வில்லிபுத்தூர் ஆழ்வாருடன் வாதிட்டு கந்தரந்தாதி பாடினார். ஒவ்வொரு பாடலுக்கும் பொருள்கூறிய ஆழ்வார் 54வது பாடலுக்குப் பொருள் கூறாது தோற்றார். தோற்றவர் காதினைத் துறட்டியால் கிழிக்கும் வழக்கமுடைய வில்லிபுத்தூரார் தோற்ற தம் காதைத் துறட்டியால் கிழிக்கும்படி கூறி அருணகிரிநாதரிடம் துறட்டியைக் கொடுத்தார். அருணகிரிநாதர் அதனை மறுத்து, ''கருணைக்கு அருணகிரி'' எனப் புகழ் பெற்றார்.

மீண்டும் திருவண்ணாமலை திரும்பிய அருணகிரியாரை அழிக்க விரும்பிய சம்பந்தாண்டவன் தேவருலகில் உள்ள பாரிஜாதமலரை எடுத்து வர அருணகிரிநாதரே தக்கவர் என மன்னனிடம் கூறினார்.

கூடுவிட்டு கூடு பாயும் சித்தினை அறிந்த அருணகிரிநாதர் தம் மெய்யுடலை மலையில் வைத்துவிட்டுக் கிளி உடம்பில் புகுந்து தேவலோகம் சென்றார். அங்கு இந்திரனால் உபசரிக்கப்பட்டார்.

அருணகிரிநாதரின் மெய்யுடலை மலையில் கண்ட சமணன் அரசனிடம் சென்று அருணகிரிநாதர் பொய் கூறிவிட்டுத் தம் உயிரை மாய்த்துக் கொண்டார்; அவர் உடல் மலையில் உள்ளது எனக் கூறினான். அரசனும் அதை உண்மையென நம்பி அவ்வுடலை எரியூட்டச் செய்தான்.

இந்திரனிடம் பாரிஜாதமலர் பெற்று அரசனின் கொலு மண்டபத்தில் கிளி உருவில் அருணகிரிநாதர் பாரிஜாத மலரைக் கொண்டு வந்து கொடுத்தார். அரசனும் மலரின் துணை கொண்டு கண்பார்வை பெற்றார். நடந்ததை அறிந்து மனம் வருந்தினார் அரசர்.

மெய்யுடல் இல்லாததால் அருணகிரிநாதர் மீண்டும் தம் உடம்பில் புக முடியாது போயிற்று. முருகப் பெருமான் கட்டளையால் அருண கிரிநாதர் தணிகை முருகப் பெருமானின் திருக்கோயிலில் வீற்றிருந்தார்.

கிளி வடிவில் அருணகிரிநாதர் பாடியது கந்தரனுபூதியாகும். பின் கிளி உருவில் பார்வதி தேவியின் கையில் அமர்ந்தார்.

இவர் எழுதிய நூல்கள் திருப்புகழ், திருவகுப்பு, கந்தரந்தாதி முதலியன வாகும்.

**திருப்புகழும் கடவுளர்களும்:**

திருப்புகழ் முருகப்பெருமானைப் போற்றி மட்டுமே பாடப் பெற்றதன்று. இதில் பல கடவுளர்களின் அருமை பெருமைகளைப் பலவாறு போற்றிப் பாடியுள்ளார் அருணகிரிநாதர்.

அருணகிரிநாதர் திருமாலைப் பல இடங்களிலும் நினைவுகூர்ந்தது கவனிக்கத்தக்கதாகும். பல இடங்களில் முருகப் பெருமானை 'திருமால் மருகனே' எனப் பக்திப் பரவசத்துடன் விழிக்கின்றார். திருமாலின் பெருமைகளைக் கூற அவரது பல அவதாரங்களில் நடந்த வீரச் செயல்க ளைப் போற்றி மகிழ்கின்றார். ஸ்ரீராமச்சந்திர மூர்த்தியாய் ராவண சம்ஹா ரம் செய்த வீரத்தினைப் போற்றுகின்றார்.

கோசலைக் குமரனையும் யசோதைக் குமரனையும் பல இடங்களில் போற்றிப் புகழ்கின்றார்.

கிருஷ்ணனுடைய லீலைகளைப் பல இடங்களில் அழகுறச் சித்தரிக்கின் றார். வெண்ணெய் உண்டது, யசோதை உரலில் கட்டிய போது அழுதது, ஆயர் உறிகளை அடித்தது, அதனால் அடிபட்டது, ஆயர் மகளிரை மணந்தது, இடையர் குலத்தில் வளர்ந்தது, காளிங்கன் மீது திருநடனம் செய்தது, குருந்த மரத்தில் ஏறியது, குழல் ஊதியது, சகடு உடைத்தது, பாரதப் போரில் உதவியது, பாரிஜாதம் கொண்டு வந்தது, பேயின் முலைப்பால் உண்டது, மலையைக் குடையாகப் பிடித்தது, ஆயர்களைக் காத்தது, மல்லரை வென்றது என கிருஷ்ண பகவானைப் போற்றுகின்றார்.

இராமாயணமும், மகாபாரதமும் பல இடங்களில் எடுத்துக்காட்டப்பட் டுள்ளன. சூதாடியது, தூது சென்றது, தேர்ச்சாரதியாக கண்ணன் வந்தது, 18 நாள் போர் முதலியன அழகுற சித்தரிக்கப்பட்டுள்ளன.

அருணகிரிநாதர் நடுநிலைப் போக்கினைக் கொண்டவர். அனைத்துத் தெய்வங்களையும் அவரவர்கட்கு உரிய பக்தர்கள் போற்றியதனை விட உயர்ந்த முறையில் அழகுற போற்றிப் பாடுகின்றார்.

கணபதியைப் போற்றும் போது ''குஞ்சர மாமுக விக்கி னப்ரபு'' என்றும் சிவனைப் போற்றும் போது ''சகலமயம் பரமேச்சுரன்'' என்றும் திருமாலே தேவியானவள் என்று ''அண்ட முண்ட நாரணி'' என்றும் போற்றுகின்றார். கண்ணனைப் போற்றுமிடத்து ''இசைகள் பல பல தொனிதரு கருமுகில், சுருதியுடையவன் நெடியவன்'' என்றும் போற்றுகின்றார்.

## திருப்புகழ்

திருப்புகழ் பல சந்தங்களாக அருணகிரிநாதரால் முருகப்பெருமான் மீது பாடப்பெற்ற தோத்திரப் பாடல்களாகும். முருகப் பெருமானின் திருவருள் பெற்று உய்வதற்குரிய ஏற்புடைய சிறந்த நூல்களுள் தலையாயது இந்நூல்.

ஒவ்வொரு திருத்தலங்கட்கும் சென்று அங்குள்ள கந்தபெருமான் மீதும் திருக்கோபுரத்தில் எழுந்தருளியுள்ள முருகப் பெருமான் மீதும் திருப்புகழ் பாடினார். 1005 பாடல்கள் பல்வேறு திருத்தலங்கள் மீது பாடப்பெற்றன. 314 பாடல்கள் பொதுப் பாடல்களாகவும் ஒரு பாடல் க்ஷேத்திரக் கோவைகளாகவும் விநாயகர் துதியாக 5 பாடல்களும் பாடப்பட்டுள்ளன. மொத்தம் 1325 பாடல்களே நமக்குக் கிடைத்துள்ளன.

தேவாரப் பாடல் பெற்ற தலங்களை நாம் கண்டு வணங்க சிவஸ்தலமஞ்சரி, க்ஷேத்திரக்கோவை எனப் பல நூல்கள் உள்ளன. இதுபோல் முருகப்பெருமானை அருணகிரிநாதர் தன் அமுதப் பாக்களால் சந்தம் மிளிரத் திருப்புகழாகப் பாடி வணங்கிய முருகப் பெருமானை நமக்கு வழிகாட்ட போதுமான வழிகாட்டி நூல்கள் இல்லாததால் அதனையும் பிற முக்கிய முருகன் தலங்களையும் காட்டும் வழிகாட்டி நூலாக இந்நூல் உருவாக்கப் பட்டுள்ளது.

## 1. அண்ணாமலை நகர் - திருவேட்களம்

சிதம்பரம் புகைவண்டி நிலையத்திற்குக் கிழக்கே அண்ணாமலைப்



பல்கலைக்கழக வளாகத்தில் அமைந்துள்ளது. சைவர்களால் 'கோயில்' என்று போற்றப்படும் சிதம்பரத்தை அடுத்து அமைந்துள்ள தலம்.



கீழ்த்தில்லைவனம், மூங்கில்வனம், திருவேட்களம், திருவேளவிக்களம், விசயனூர், சிங்கவர்மேச்சுரம் என்ற பெயர்களும் இத்தலத்திற்குரியது.

இக்கோவிலின் பிரகாரத்தில் முருகப் பெருமான் திருச்சந்நிதி அமைந் துள்ளது. இங்கு எழுந்தருளியுள்ள மூலவர் ஆறுமுகப் பெருமானாகப் பன்னிரு திருக்கரங்களுடன் வள்ளி, தேவசேனா தேவியர் சமேதரராக மயில் மீது கிழக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார். திருவாசியுடன் ஒரே கல்லில் அமைந்த திருவுருவம். உற்சவர் ஒரு திருமுகத்துடன் தேவியருடன் விளங்குகின்றார். கிருத்திகை சஷ்டி சிறப்பான நாட்களாகும். வைகாசி விசாக விழா சிறப்பு. திருப்புகழில் இருபாடல்கள் உள்ளன.

இங்கு எழுந்தருளியுள்ள இறைவன் (சிவபெருமான்): அர்ச்சுனனுக்குப் 'பாசுபதம்' அருளியதால் 'பாசுபதேசர்' என்றும் இறைவி: 'சற்குணாம்பாள்' என்றும் திருநாமம் கொண்டு விளங்குகின்றனர். தீர்த்தம் - கிருபாதீர்த்தம், தலமரம் - மூங்கில்.

## 2. அம்பர் - அம்பல்

மாயூரம் - திருவாரூர் புகைவண்டிப் பாதையில் பூந்தோட்டம் புகை வண்டி நிலையத்திலிருந்து 4 கி.மீ. தூரத்தில் உள்ளது.

காம்போஜ மன்னன் நந்தனராஜன் வழிபட்டதனால் நந்தனராஜபுரம் என்றும் பிரம்மபுரி, இந்திரபுரி, மாரபுரி என்றும் வழங்குகின்றது. கோச்செங் கட் சோழனால் கட்டப்பட்ட மாடக்கோவில்களுள் ஒன்று. தேவாரப் பாடல் பெற்ற தலம்.

முருகப்பெருமான் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு கிழக்கு நோக்கி, இரு தேவியருடன் நின்ற திருக்கோலத்தில் எழுந்தருளி யுள்ளார்.

இங்கு எழுந்தருளியுள்ள இறைவன்: (சிவபெருமான்) பிரம்மபுரீசுவரர்; இறைவி: சுகந்தகுந்தளாம்பிகை; தீர்த்தம். இந்திர தீர்த்தம், சூலதீர்த்தம், அன்னமாம் பொய்கை என்னும கிணறு; தலமரம்: புன்னை.

இலிங்கத் திருமேனிக்குப் பின்புறம் சோமாஸ்கந்தப் பெருமானாக இத்தலத்தில் காட்சி தருவது சிறப்பு. சஷ்டி, கிருத்திகை, மாசிமகத் திருவிழா சிறப்பு. அருணகிரிநாதர் இத்தலப் பெருமான் மீது ஒரு பாடல் பாடியுள்ளார்.

## 3. அவிநாசி

கோவை - ஈரோடு பேருந்துத் தடத்தில் உள்ளது. திருப்பூரிலிருந்து வடக்கே 12 கி.மீ. தூரத்தில் உள்ளது.

ஊழிக்காலத்தும் விநாசமில்லாதது என்னும் பொருள்பட அவிநாசி எனப் பெயர் பெற்றது. காசிவிசுவநாதரே இங்குக் கிளைத்து கோவில் கொண்டதாக ஐதீகம். ''காசியில் வாசி அவிநாசி'' என்பது வழக்கு.

கயிலையில் பிறக்க முத்தி, தில்லையைத் தரிசிக்க முத்தி, அருணையை நினைக்க முத்தி, காசியில் இறக்க முத்தி, ஆலவாய் எனக் கூற முத்தி, அவிநாசி எனக் கேட்க முத்தி என்பது வழக்கு.

இத்தலச் சிவபெருமான் அவிநாசியப்பர் சுயம்பு மூர்த்தி. இறைவி பெருங்கருணை நாயகி நின்ற திருக்கோலம். இருவர் சந்நிதிகளுக்கும் நடுவே முருகர் சந்நிதி கொண்டுள்ளார். பாலதண்டாயுதபாணி சந்நிதியும், சுப்பிரமணியர் சந்நிதியும், அறுகோண அமைப்பிலுள்ள செந்தில்நாதன் சந்நிதியும் உள்ளன. தீர்த்தம்: காசிக்கிணறு, நாக கன்னிகைத் தீர்த்தம், ஐராவதத் தீர்த்தம், தலமரம்: மாமரம், பாதுரிமரம். காசிவிசுவேசுவரரிடமிருந்த ஒரு வேர் கிளைத்து ஓடி அவிநாசியப்பராய் முளைத்ததாக ஐதீகம்.

உற்சவப் பெருமான் ஒருமுகமும், நான்கு திருக்கரங்களும் கொண்டு வள்ளி, தேவசேனா தேவியுடன் விளங்குகின்றார். குமார சுப்பிரமணியராகவும் உற்சவர் உள்ளார்.

வைகாசி விசாகமும், முதலை உண்ட பாலகனைச் சுந்தரர் மீட்ட விழாவும் (பங்குனி மாதம்) அறுபத்து மூவர் விழாவும் சிறப்பானவை.

கொங்கு நாட்டிலேயே மிகப் பெரிய தேர் இங்குள்ள தேர்தான். அண்மையில் இத்தேர் நெருப்பினால் எரியுண்டது. திருப்புகழில் மூன்று பாடல்கள் இத்தலத்திற்குரியது.

## 4. ஆக்கூர் - தான் தோன்றிமலை

மாயூரம் - பொறையாறு புகைவண்டிப் பாதையில் ஆக்கூர் புகைவண்டி நிலையம். மாயூரத்திலிருந்து தரங்கம்பாடி செல்லும் வழியில் 16 கி.மீ. தூரத்தில் உள்ளது.

இத்தலத்தில் சிவபெருமான் தானாகவே தோன்றியதால் (சுயம்பு) இத்தலம் 'தான்தோன்றி' என்றும், இறைவன் 'தான் தோன்றியப்பர்' என்ற திருநாமமும் பெற்றார். இறைவி: வாள் நெடுங்கண்ணியம்மை.

கோச்செங்கட் சோழன் கட்டிய மாடக்கோவில்களில் ஒன்று. அகத்தியருக்குச் சிவபெருமான் திருமணக்கோலம் காட்டிய தலங்களில் ஒன்று. இத்தலச் சிவபெருமான் மன்னன் ஒருவன் ஆயிரம் அந்தணர்க்கு உணவு அளித்த பொழுது தாமும் ஒருவராக வந்து உணவருந்திய தலம். தனிச் சந்நிதியில் 'ஆயிரத்திலொருவர்' உற்சவ விக்கிரகம் உள்ளது.

சிறப்புலி நாயனார் அவதாரத் தலம். தலமரம்: கொன்றை. தீர்த்தம்: குமுதபுஷ்கரணி.

முருகப் பெருமான் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு மயில் மீது விளங்குகின்றார். அருகே இரு தேவியரும் எழுந்தருளியுள்ளனர். கிழக்கு நோக்கிய சந்நிதி.

திருப்புகழில் ஒரு பாடல் இத்தலத்திற்குரியது.

## 5. ஆண்டாநல்லூர் - நல்லூர்

தஞ்சை - கும்பகோணம் பேருந்து வழித்தடத்தில் வாழப்பழக்கடை என்ற இடத்தில் இறங்கி 1.6 கி.மீ. செல்ல வேண்டும். சுந்தரப் பெருமாள் கோயில் புகைவண்டி நிலையத்திற்குத் தெற்கே 3 கி.மீ. தொலைவில் உள்ளது.

இத்தலம் சுந்தராசலம், ஆண்டான் நல்லூர் என்றும் வழங்கப் பெறுகின்றது.

முருகப் பெருமான் ஒரு திருமுகமும், நான்கு திருக்கரங்களும் கொண்டு வள்ளி, தேவசேனாதேவி சமேதரராய் கிழக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார்.

பிருகு முனிவர் வண்டு வடிவில் இலிங்கத்தைத் தொளையிட்டுப் பூசித்த தலம். அச்சிவபெருமான் பஞ்சவர்ணேசுவரர், பெரியாண்டேஸ்வரர், கல்யாண சுந்தரேஸ்வரர் என வழங்கப்படுகிறார். இறைவி: கல்யாணசுந்தரி, பர்வதசுந்தரி என்னும் திருநாமம் கொண்டுள்ளார்.

சப்தசாகரத் தீர்த்தத்தில் கார்த்திகை மாதம் ஞாயிற்றுக் கிழமைகளிலும் மாசி மாதம் மக நட்சத்திரத்தன்றும் தீர்த்தமாடுவது சிறப்பு.

திருப்புகழில் ஒரு பாடல் இத்தலத்திற்குரியது.

## 6. ஆண்டார் குப்பம் - தச்சூர்

சென்னையிலிருந்து 32 கி.மீ. பொன்னேரிக்கு அருகில் தச்சூர் கூட்டுச் சாலையிலிருந்து 7 கி.மீ. தூரத்தில் உள்ளது. சுப்பிரமணியபுரம் என்னும் பெயர் உண்டு. தனிக்கோவில். கருவறையில் முருகப் பெருமான் ஒரு திருமுகமும், இரு திருக்கரங்களுடன் நின்ற திருக்கோலத்தில் இரு திருக்கைகளும் ஊர் முத்திரையுடன் சுமார் 5 அடி உயரத்துடன் எழுந்தருளியுள்ளார். தலையில் மகுடத்துடன் இரு கரங்களும் தொடை மீது ஊன்றிக் காட்சி தருகின்றார்.

எதிரே உள்ள மண்டபத்தில் காணப்படும் தாமரைப்பூ அதில் உறையும் பிரம்மாவாகக் கருதப்பட்டு, ''பிரணவப் பொருளை பிரம்மனிடம் கேட்ட முருகப் பெருமான் திருக்கோலமாக''க் கருதப்படுகின்றது.

இத்தல முருகப் பெருமான் வேலும் மயிலும் இன்றி உள்ளார். வேலும் மயிலும் பெறுவதற்கு முன் பிரமனிடம் பிரணவப் பொருள் கேட்ட முருகப் பெருமான் இவர் என ஐதீகம்.

கருவறைக்கு முன் உள்ள முகமண்டபத்தில் முருகப் பெருமான் மலை மீது அமர்ந்தும் இரு கரங்களைத் தொடை மீது ஊன்றிய கோலத்துடன் தனக்குப் பின் பக்கம் படைக்கலங்களுடன் வீரபாகு நிற்க எதிரில் பிரமன்

பிரணவப் பொருளுக்கு விடை தெரிவிக்காத போது முருகப் பெருமான் ''செவ்வேள் குட்டினான் அயன் நான்கு மாமுடிகளும் குறுங்க'' என்னும் கந்தபுராண அடிகளுக்கு ஒப்ப குட்டும் நிலையிலான சிற்பம் உருவாக்கப் பட்டுள்ளது.

அயனிடம் பிரணவப் பொருள் வினவும் அமலனின் திருவுறு வேறு எங்கும் காணக்கிட்டாத ஒன்றாகும். திருப்புகழில் ஒரு பாடல் இத்தலத்திற்கு ரியது.

## 7. ஆய்க்குடி

திருநெல்வேலி மாவட்டம் செங்கோட்டையிலிருந்து கிழக்கே 13 கி.மீ. தூரத்தில் உள்ளது.

அனுமன் நதிக்கரையில் முருகப் பெருமான் தனிக்கோயிலில் எழுந்தருளி யுள்ளார்.

இத்தலக் குமரன் குழந்தை சாமியாக -பாலசுப்பிரமணியராகக் கிழக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார். இவர் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்க ளும் கொண்டு விளங்குகிறார்.

வஜ்ஜிராயுதத்தையும் சக்தி வேலையும் தன் இரு திருக்கரங்களில் ஏந்தி, கால்களில் தண்டையும் சலங்கையும் அணிந்து, மயிலின் முகம் தன் இடப்புறம் விளங்க நின்ற திருக்கோலத்தில் ஒன்றறையடி உயர மூர்த்தமா கப் பச்சிளம் பாலகனாகப் 'பாலசுப்பிரமணியர்' என்னும் திருநாமத் துடன் எழுந்தருளியுள்ளார்.

இம் முருகப் பெருமானை உபாசித்து வந்த சித்தர் அனுமன் நதிக்கரை யில் ஜீவசமாதியாகி குமாரக் கடவுளுடன் ஐக்கியமானதாக ஐதீகம். அச்சித்தர் இக்கோவிலின் பின்புறமுள்ள பாம்புப் புற்றில் சர்ப்ப ரூபத்தில் இன்றும் இருப்பதாகக் கூறுகின்றனர்.

அச்சித்தர் வழிபாடு செய்து வந்த மகாகணபதி, அம்பிகை, பரமேஸ்வ ரன், மகாவிஷ்ணு, சூரியன் ஆகிய பஞ்சாயதன பூஜையின் மூர்த்தங்களும் பாலசுப்பிரமணியரின் பின்புறம் உள்ளது.

இங்குள்ள உற்சவர் முத்துக்குமாரசாமி என்ற பெயருடன் மயில்வாகன னாகக் காட்சி தருகிறார். இவரின் இடப்புறம் வீரபாகுவும் வலப்புறம் சக்தி வேலும் பஞ்சலோக விக்கிரகங்களாக உள்ளன. இத்தலத்தில் படிப்பாயாச நிவேதனம் செய்வது சிறப்பு. குழந்தைகளுடன் பாலமுருகனும் பாயாசம் அருந்துவதாக ஐதீகம்.

இப்பாலமுருகனை நினைந்து விரதம் இருப்பவர்கட்கு குழந்தைப் பேறும், மணமாகாதவர்கட்கு விரைவில் திருமணப்பேறும் கிட்டுகின்றது.

இங்குப் பால்குடம், காவடி எடுப்பது சிறப்பாகும்.

தலமரம் - அரசமரம். தீர்த்தம் - அனுமன் நதி. கடையெழு வள்ளல்களில் ஒருவரான ஆய் மன்னன் ஆண்ட ஊர். திருப்புகழில் ஒரு பாடல் உள்ளது.

இக்கோவிலுக்குத் தெற்கே அரைக் கிலோ மீட்டரில் காளகண்டேசுவரர் சௌந்தர நாயகி அம்மன் திருக்கோவில் உள்ளது.

## 8. ஆவுடையார் கோயில் - திருப்பெருந்துறை

இத்தலம் திருப்புவனவாயிலிலிருந்து 5 கி.மீ., அறந்தாங்கியிலிருந்து 12 கி.மீ. தொலைவில் உள்ளது.

ஆதி கைலாயம், குருந்த வனம், திருப்பெருந்துறை என்ற பெயர்களும் உண்டு. ஆளுடையார் கோவில் என்றும் கூறுவர். மாணிக்கவாசகர் கட்டிய கோவில்.

ஈசனும், அம்பாளும் லிங்கமாகவோ, திருவுருவாகவோ இன்றி அரூபிகளாக எழுந்தருளியிருப்பதாக ஐதீகம். இரு பீடங்கள் மட்டுமே உள்ளன. அவற்றிற்கே வழிபாடு நடக்கின்றது. லிங்கம் இல்லாமல் உள்ள பீடம் ஆவுடையராகக் கருதப் பெறுவதனால் ஆவுடையார் கோயில் எனப் பெயர் பெற்றது.

அம்பாள் யோகத்தில் இருப்பதாக ஐதீகம். சந்நிதியைச் சுற்றி சலாகை அடித்த சுவர் உள்ளது. துவாரங்களின் வழியாகத்தான் கற்பூர ஆரத்தியைச் சேவிக்க வேண்டும். அம்பிகை, மாணிக்கவாசகர் இருவருக்கும் ஒரே நேரத்தில் ஆராதனை நடைபெறும்.

இங்குள்ள சுப்பிரமணியர் சந்நிதி சிறப்பானது. முருகப் பெருமான் திருவுருவம் எழிலார்ந்த கோலம் கொண்டு விளங்குகின்றது.

மாணிக்கவாசகருக்காக, நரிகளைப் பரிகளாக்கிய தலம்; வழக்கமாக உள்ள நந்தி, துவஜ ஸ்தம்பம், சண்டிகேஸ்வரர் இக்கோவில் இல்லை.

திருப்புகழில் மூன்று பாடல்கள் உள்ளன.

## 9. இஞ்சிக்குடி

மாயூரம் - திருவாரூர் புகைவண்டிப் பாதையில் பேரளத்திற்குத் தெற்கே 1 கி.மீ.யில் அமைந்த தலம்.

பிரமதேயம், சதுர்வேதி மங்கலம், பார்வதீசுவரம், கந்தவனம், சாந்தி வனம், எதிரிலி சோழநல்லூர் என்ற பெயர்களும் இத்தலத்திற்குரியன. இஞ்சி மிகுதியாக விளைந்ததால் இஞ்சிக்குடி என்று பெயர் பெற்றது.

இத்தல முருகப் பெருமான் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு வள்ளி தேவசேனா தேவி சமேதரராய் கிழக்கு நோக்கி நின்ற திருக்கோலத்தில் அருள்பாலிக்கின்றார்

இத்தலச் சிவபெருமான் பார்வதீசுவரர். இறைவி: சாந்தநாயகி. திருப்புகழில் ஒரு பாடல் உள்ளது.

## 10. இந்திர சைலாத்திரி -வடவிஜயபுரம்

ஆந்திர மாநிலம் விஜயவாடா மாவட்டம், கொத்தப்பேட்டை வட்டத்தில் அமைந்த தலம். வடவிஜயபுரம் என்ற பெயரும் பெற்ற தலம். மலை மீது அமைந்த திருக்கோயில். 236 படிகள் உள்ளன.

இங்குக் கற்பகக்கிரகத்தில் மூலவரான பாலசுப்பிரமணியர் சுயம்புமூர்த்தி. மற்றொரு சந்நிதியில் முருகப் பெருமான் ஒரு முகமும் இரு கரங்களும் கொண்டு மயில் முன் நின்ற திருக்கோலத்துடன் வள்ளி தெய்வசேனா தேவி சமேதரராய் எழுந்தருளியுள்ளார்.

சஷ்டி, கார்த்திகை சிறப்பு. கந்த சஷ்டி விழாவும் பங்குனி உத்திரத் திருவிழாவும் முக்கியமானவை.

விநாயகர், ஆஞ்சநேயர், லட்சுமி, சரஸ்வதி, அன்னபூரணி, ஆடல் வல்லான், நவக்கிரகச் சந்நிதிகள் உள்ளன.

திருப்புகழில் ஒரு பாடல் உள்ளது.

## 11. இராமேஸ்வரம்

மதுரையிலிருந்து 160 கி.மீ. ராமநாதபுரத்திலிருந்து 54 கி.மீ. தூரத்தில் உள்ளது. மண்டபம் சென்று ரயில் மார்க்கம் அடையலாம்.

இராவணன் முதலியவர்களைக் கொன்ற பிரமஹத்தி தோஷம் நீங்க இராமர் சீதை அமைத்துக் கொடுத்த லிங்கத்தைப் பிரதிஷ்டை செய்து பூஜை செய்த தலம். அனுமன் கொணர்ந்த லிங்கம் காசிவிசுவாதர். முதல் பூசை இவருக்கே நடைபெறுகின்றது.

சீதை அமைத்து இராமர் பிரதிஷ்டை செய்த லிங்கம் இராமநாதர். இறைவி: மலைவளர்காதலி, பர்வதவர்த்தினி.

மேலக்கோபுரத்தின் முன் ''மேலவாசல் சுப்பிரமணிய சுவாமி'' எழுந்தருளியுள்ளார். ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு மேற்கு நோக்கி மயிலுடன் வேல் கொண்டு தனியே எழுந்தருளியுள்ளார்.

கருவறையைச் சுற்றிய பிரகாரத்தில் முருகப் பெருமான் தம்பதி சமேதரராய் எழுந்தருளியுள்ளார். உற்சவரும் வள்ளி தெய்வயானையுடன் விளங்குகின்றார்.

மாதக் கார்த்திகை, வைகாசி விசாகம், கந்த சஷ்டி, பங்குனி உத்திர விழாக்கள் சிறப்பாகும். இங்குக் காவடி எடுத்தல், முடிகாணிக்கை செலுத்துவதும் வழக்கம். இரு திருப்புகழ் பாடல்கள் பெற்ற தலம்.

## 12. இராசேந்திரன் பட்டினம்
## யாழ்ப்பாணாயன்பட்டினம்

விருத்தாசலத்திற்குத் தெற்கே 5 கி.மீ. தொலைவில் அமைந்த தலம். இத்தலம் யாழ்ப்பாணாயன் பட்டினம் என்றும் திருக்கோவிலில் வெள்ளெருக்கஞ் செடி உள்ளதால் எருக்கத்தம்புலியூர் என்றும் பெயர் பெற்றது.

திருநீலகண்ட யாழ்ப்பாணாய நாயனார் அவதாரத் தலம். எனவே யாழ்ப்பாணாயன் பட்டினம் எனப் பெயர் பெற்றது.

முருகப் பெருமான் இருதேவியருடன் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு கிழக்கு நோக்கி நின்ற திருக்கோலத்தில் அருள்பாலிக்கின்றார்.

இத்தலச் சிவபெருமான்: ஸ்வேதார்க்கவனேசுவரர், நீலகண்டேசுவரர். இறைவி: அபின்னகுசாம்பிகை, நீலமலர்க் கண்ணி.

உருத்திரசன்மர் இத்தல இறைவனை வழிபட்டு ஊமைத் தன்மை நீங்கிய தலம்.

பங்குனி உத்திரம் பிரமோற்சவம். தலமரம்: வெள்ளெருக்கு. தீர்த்தம்: கந்த தீர்த்தம், செங்கழுநீர்த் தீர்த்தம், நீலத் தீர்த்தம்.

## 13. இலஞ்சி

தென்காசிக்கு மேற்கே 5 கி.மீ. தூரத்திலும், திருக்குற்றாலத்திலிருந்து 3 கி.மீ. தூரத்திலும் அமைந்த தலம். இலஞ்சி என்றால் மருதமரம் எனப் பொருள். மகிழ மரத்தின் கீழ் பெருமான் தோன்றியதால் இப்பெயர் ஏற்பட்டது. ஏரிகள் சூழ்ந்த இடத்தையும் இலஞ்சி என்பர்.

முருகப்பெருமான் சமரச நிலையை உணர்த்திய தலம். 'வரதராஜ குமரன்' என்னும் திருநாமம் கொண்டவர். கந்த சஷ்டி விழா நாட்களில் முதல் ஐந்து நாட்களில் முருகப் பெருமான் பிரம்மா, விஷ்ணு, ருத்திரன், மகேஸ்வரன், சதாசிவன் ஆகிய மூர்த்திகளின் திருக்கோலங்களில் காட்சி தருகின்றார்.

பஞ்ச கிருத்தியங்களான படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளுதல் ஆகியவைகளின் அதிதேவதைகளாகத் தாமே விளங்குவதால் தெய்வங்களில் பேதம் காட்டக் கூடாதென்பதனை விளக்குகின்றார்.

இலஞ்சிக் குமரன் ஆணைப்படி அகத்திய முனிவர் திருக்குற்றாலத்தில் மூலமூர்த்தியாய் விளங்கிய விஷ்ணுவைக் குறுகி சிவலிங்க வடிவாக்கியதாகச் க்ஷேத்திரக்கோவைப் பிள்ளைத் தமிழ் கூறுகின்றது.

கர்ப்பக்கிரகத்தில் வள்ளி தேவசேனா தேவியருடன் ஒரு திருமுகமும்

நான்கு திருக்கரங்களும் கொண்டு மயிலின் அருகில் நின்ற கோலத்தில் கிழக்கு நோக்கி முருகப் பெருமான் எழுந்தருளியுள்ளார். இடக்கரங்களில் அபயமும் குக்குடமும் வலக்கரங்களில் வரதமும் வேலும் விளங்க இளமை யுடன் காட்சி தருகின்றார். முத்துக்குமரன் ஓங்கார வடிவில் காட்சி தருகின்றார்.



உற்சவமூர்த்தி சிறிய திருவுருவம். தங்க வேலுடனும் தேவியருடனும் வெள்ளி மயிலிலும் குதிரையிலும் பவனி வருவது கண்கொள்ளாக் காட்சியாகும்.

வைகாசி விசாகம், ஆடிக்கிருத்திகை, கந்த சஷ்டி, கார்த்திகை சோம வாரம், மாசிப் பெருவிழா சிறப்பான விழாக்களாகும்.

மாதுளை விதையினைக் கொண்டு குமரனுக்கு வேலும் சேவல் கொடியும் சமர்ப்பிப்பது இங்கு நடைபெறும் தனிச்சிறப்பாகும். 1008 செண்பகப் பூமாலை, 108 எலுமிச்சம்பழ மாலை அணிவிக்கின்றனர்.

வெள்ளி மயில் வாகனத்தில் மயிலின் வாயில் பாம்பும், பாம்பின் நாக்கில் ஆடும் பச்சைக்கல்லும் வெகு அழகு. இங்கு 10 தலை கொண்ட முருகப் பெருமானைக் கண்டு களிக்கலாம்.

திருப்புகழில் நான்கு பாடல்கள் பெற்ற தலம். கவிராசப் பண்டாரத்தையா முருகன் மீது பிள்ளைத் தமிழ் பாடியுள்ளார்.

பார்வதி திருமணத்தின் போது வடநாடு உயர்ந்து தென்னாடு தாழ்ந்த தனைச் சரி செய்ய சிவபிரான் அகத்தியரைத் தென்னாட்டுக்கு அனுப்பி னார். இங்கு வந்த அகத்தியர் சிற்றாற்றின் கரையில் வெண்மணலைச் சிவலிங்கமாக அமைத்து மாலையிலும் காலையிலும் பூசித்தார். பின் இரண்டையும் ஒன்றாக்கினார். எனவே இச் சிவலிங்கம் இருவாலுக நாயகர் என்னும் பெயர் பெற்றார். வாலுகம் என்றால் மணல் எனப் பொருள். இவர் கிழக்கு நோக்கியும் தேவி இருவாலுகர்க்கினியாள் தெற்கு நோக்கியும் எழுந்தருளி உள்ளார். இருவலுநாயகர் குவளை சாத்தியே காட்சி தருகின் றார். இவருக்கு அபிஷேகம் உண்டு; ஆனால் எண்ணெய் அபிஷேகம் செய்வதில்லை.

தலமரம்: மகிழ மரம். மகிழ மரத்திற்கு இலஞ்சி என்ற பெயர் உண்டு. அதுவே இத்தலப் பெயராயிற்று.

அருகிலுள்ள தென்காசியில் முருகப் பெருமான் பாலதண்டாயுதபாணி யாய் மயில் மீது காட்சி தருகின்றார்.

## 14. இலுப்பைப்பட்டு - திருமண்ணிப்படிக்கரை

வைத்தீஸ்வரன் கோவிலுக்கு மேற்கே 13 கி.மீ., திருவாழ் கொளிபுத்தூ ரில் இருந்து 6 கி.மீ., மாயூரத்திலிருந்து மணல் மேடு சென்று பாப்பாக்குடி வழியாக 2 கி.மீ. தூரத்தில் உள்ளது.

தலமரத்தின் பெயரால் இலுப்பைப்பட்டு எனப் பெயர் பெற்றது. இத்தலம் மண்ணியாற்றின் கரையில் அமைந்ததனால் திருமண்ணிப்படிக்கரை என்பர்.

வடக்குப் பிரகாரத்தில் முருகப் பெருமான் சந்நிதி உள்ளது. இவர் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு கிழக்கு நோக்கி நின்ற திருக்கோலத்தில் தேவியர் இருவருடன் காட்சி தருகின்றார். உற்சவர் வில்லேந்திய வடிவில் எழுந்தருளியுள்ளார்.

இத்தலச் சிவபிரான் நீலகண்டேசுவரர். இறைவி: அமுதகரவல்லி. பஞ்ச பாண்டவர் வழிபட்ட தலம். தர்மர் நீலகண்டரையும், அர்ச்சுனன் படிக்கரை

நாதரையும் பீமன் மகதீசரையும், நகுலன் பரமேசரையும். சகாதேவன் முத்தீசரையும் பூசித்தனர். இவ்வைந்து லிங்கங்களும் இங்கு உள்ளன.

திரியோதனன் பஞ்சபாண்டவர்களைக் கொல்ல இங்குள்ள தீர்த்தத்தில் விஷத்தைச் சேர்த்தான். தேவி அவ்விஷத்தைத் தம் கையிலிருந்த அமுதத் தால் முறித்தாள். இறைவன் அந்நஞ்சை உண்டார். அதனாலேயே இவ் இறைவன் திருநீலகண்டன் எனப் பெயர் பெற்றார்.

தீர்த்தம்: பிரம்ம தீர்த்தம். தலமரம்: இலுப்பை மரம்.

சமபந்தர் மணக்கோலத்துடன் ஜோதியில் இறைவனுடன் கலந்த தலம். திருப்புகழில் ஒரு பாடல் உள்ளது.

## 15. இளையனார் வேலூர்

சென்னை - காஞ்சிபுரம் வழியில் வாலாசாபாத்திலிருந்து 8 கி.மீ. தூரத்தில் உள்ளது. பல்லவர் காலத் திருப்பணி. இங்கு முருகப் பெருமான் பிரம்ம சாஸ்தா கோலத்தில் எழுந்தருளியுள்ளார். இது பாலாற்றின் கரையில் அமைந்த தலம்.

மலையன், மாகரன் என்ற இரு அசுரர்களை முருகப் பெருமான் தம் திருக்கை வேலினால் சம்ஹாரம் செய்த தலம். வேலாயுதம் இக் கோவிலில் மூல வேலாகப் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளது தனிச்சிறப்பாகும்.

இங்குள்ள முருகப் பெருமான் மூலவர் ஒரு திருமுகமும், நான்கு திருக்கரங்களும் கொண்டு கிழக்கு நோக்கி நின்ற கோலத்தில் பாலசுப்பிர மணியராக எழுந்தருளியுள்ளார். உற்சவர் தம்பதி சமேதராய் எழுந்தருளி யுள்ளார்.

கார்த்திகைதோறும் முடி காணிக்கை, பால் காவடி, புஷ்பக் காவடி ஆகிய பிரார்த்தனைகள் செலுத்தப்படுகின்றன.

சித்திரை மாதம் பிரமோற்சவமும், சஷ்டியும், தை கிருத்திகையும் சிறப்பாகும். வ.ஆ.மாவட்ட வேலூரைப் பிரித்துக் காட்ட இத்தலம் இளையனார் வேலூர் எனப்படுகிறது. திருப்புகழில் அருணகிரிநாதர் வேலூர் என்றே குறிப்பிட்டுள்ளார்.

திருப்புகழில் இரு பாடல்கள் பெற்ற தலம்.

## 16. உத்தரகோசமங்கை

இராமநாதபுரத்திலிருந்து 8 கி.மீ. தூரத்தில் உள்ளது.

திருக்கோவிலின் இராஜ கோபுரத்தின் முன் வலப்புறம் முருகனும் இடப்புறம் விநாயகரும் எழுந்தருளியுள்ளனர். பொதுவாக இடப்பக்கம்

முருகப் பெருமானும் வலப்பக்கம் விநாயகப் பெருமானும் எழுந்தருளி யிருப்பர். இத்தலத்தில் இது மாறுபட்டுள்ளது. மேலும் பெருமானுக்குரிய மயில் இருக்க வேண்டிய இடத்தில் யானை உள்ளது.

தேவயானையின் மணாளனான முருகப் பெருமானுக்கு இந்திரன் தன் ஐராவதத்தை இத்தலத்தில் கொடுத்ததாக ஐதீகம்.

முதல் பிரகாரத்தின் வாயு மூலையில் தேவியர் இருவருடன் மயில் வாகனத்துடன் முருகப் பெருமான் காட்சி தருகின்றார்.

இரண்டாம் பிரகாரத்தின் வாயு மூலையில் ஆறுமுகப் பெருமான் ஆறு திருமுகங்களுடனும் பன்னிரு திருக்கரங்களுடனும் மயில் மீது இரு தேவியருடன் சண்முகப் பெருமானாக எழுந்தருளியுள்ளார்.

இத்தலத்தில் ஆடல் வல்லான் சந்நிதி மிக்க சிறப்புடையது. இங்குச் சிவபெருமான் மங்களநாதர், உத்தரகோச மங்கைநாதர் எனவும் தேவி மங்களாம்பிகை என்னும் திருநாமத்துடன் எழுந்தருளியுள்ளனர்.

திருப்புகழில் ஒரு பாடல் உள்ளது.

## 17. உத்திரமேரூர்

செங்கல்பட்டு - வந்தவாசி சாலையில் சுமார் 30 கி.மீ. தூரத்தில் உள்ளது.

இங்கு முருகப் பெருமான் தனியாகக் கோவில் கொண்டுள்ளார். மூலவர் பாலசுப்பிரமணிய சுவாமி 6 அடி உயரத் திருவுடையவராய் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு கிழக்கு நோக்கி எழுந்தருளி யுள்ளார். இப்பெருமான் உத்திராக்கம் அணிந்து கைகளில் நாகாபரணமும் சடைமுடியும் காதுகளில் குண்டலமும் விளங்கக் காட்சி தருகின்றார். முருகப் பெருமான் பிரம்ம சாஸ்தா கோலத்தில் காட்சி தருகிறார். சிறு குன்றினையே செதுக்கி உருவாக்கப்பட்ட திருமேனியாதலால் அஷ்டபந்த னம் கிடையாது. கருவறையில் சிவன், உமை, நந்தி, விநாயகர் திருவுருவங் கள் மாடத்தில் உள்ளன. ஆலயம் பல்லவர் திருப்பணி.

கருவறையின் மூலையில் சிவபெருமான் உமையம்மை சந்நிதிகள் உள்ளன. முருகப் பெருமான் சிறிது சாய்வாக இருந்து சிவனைப் பூஜிப்பது போன்று காட்சி தருகின்றார்.

உற்சவர் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு தேவியர் இருவருடன் நின்ற கோலத்தில் காட்சி தருகின்றார்.

வருடப்பிறப்பு, கார்த்திகைப் பெருவிழா சிறப்பு.

தீர்த்தம்: இந்திர தீர்த்தம். இத்தலத்தில் இரட்டைத் தளீசர் என்ற சிவாலயமும். ஒன்பது கருவறையுள்ள சுந்தரவரதர் ஆலயம், நரசிம்மர் ஆலயம் ஆகியனவும் உள்ளன.



திருப்புகழில் நான்கு பாடல்கள் இத்தலத்திற்குரியனவாகும்.

## 18. உய்யகொண்டான் -திருகற்குடி

திருச்சிக்குத் தென்மேற்கே 4 கி.மீ. தூரத்தில் உள்ளது. 50 அடி உயர சிறிய மலைமேல் அமைந்த கோயில். திருகற்குடி என்ற பெயருமுண்டு.

இங்கு முருகப் பெருமான் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு தேவியர் இருவருடன் கிழக்கு நோக்கி காட்சி தருகின்றார்.

அம்பிகை சந்நிதிக்கு அருகில் சண்முகர் தனிச் சந்நிதி உள்ளது. மண்டபத்தில் உற்சவமூர்த்தி காட்சி தருகின்றார். மலைமேல் உள்ள சண்முகர் தேவியருடன் காட்சி தருகின்றார்.

பௌர்ணமியன்று பால் அபிஷேகம் சிறப்பு. பங்குனி மாதம் பிரமோற்சவம் நடைபெறுகின்றது.

இங்குள்ள சிவபெருமான் உச்சிநாதர், முத்தீசர், கற்பகநாதர் உய்ய கொண்டநாதர், உஜ்ஜீவனநாத சுவாமி எனவும் வழங்கப்படுகிறார். இரு அம்மன் சந்நிதிகள் உள்ளன. அம்பிகை அஞ்சனாட்சி. நாரதர், உபமன்யு, மார்க்கண்டேயர், சூரன் வழிபட்ட தலம்.

தீர்த்தம்: பொன்னொளி ஓடை, குடமுருட்டி, ஞானவாவி, எண்கோணக் கிணறு, நாற்கோணக் கிணறு முதலியன.

திருப்புகழில் இருபாடல்கள் உள்ளன

## 19. ஊதியூர் - ஊதிமலை

தாராபுரம் - காங்கேயம் பேருந்து வழித்தடத்தில் 16 கி.மீ. தூரத்தில் உள்ளது. ஊதிமலை, கொங்கணகிரி, சஞ்சீவிமலை, பொன்னூதிமலை முதலிய பெயர்களும் இத்தலத்திற்கு உண்டு.

சிறிய மலை மீது அமைந்த கோவில். 158 படிகள் ஏறிச் செல்ல வேண்டும். மலை மீது தண்டாயுதபாணியாக முருகப் பெருமான் கிழக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார். வள்ளி, தெய்வயானை ஒரே சந்நிதியில் தனியே எழுந்தருளியுள்ளனர்.

உற்சவர் உத்தண்ட வேலாயுதர் ஒரு திருமுகமும் இரு திருக்கரங்களும் உடையவர். கையில் தண்டுடன் நின்ற திருக்கோலத்தில் காட்சி தருகிறார்.

மலையில் சிவன் கோவில் உள்ளது. இரு திருப்புகழ்ப் பாடல் பெற்ற தலம். கொங்கணச் சித்தர் கோவில் உள்ளது.



## 20. எட்டிக்குடி

திருத்துறைப்பூண்டி - நாகப்பட்டினம் பேருந்து வழியில் 21 கி.மீ., சிராவட்டம் பாலத்திலிருந்து வடக்கே 5 கி.மீ., திருவாய்மூரிலிருந்து 1.5 கி.மீ. தூரத்தில் உள்ளது.

தலமரமான எட்டி மரத்தின் பெயரால் அமைந்த தலம். இதன் பழைய பெயர் காஞ்சிரங்குடி (எட்டி-காஞ்சிரம்).

சிக்கல் சிங்காரவேலனை வடித்த சிற்பி மேலும் ஒரு ஆறுமுகனை மயில் மீது அமர்ந்த நிலையில் வடித்தார். பெருமான் திருமேனியில் ரத்த ஓட்டமும் வியர்வையும் வரக்கண்டு மயில் உயிர் பெற்று எழுந்து பறந்து விடாமலிருக்க சங்கிலியால் மயிலைக் கட்டினார். அப்படி இருந்தும் மயிலின் கண்ணைத் திறந்ததும் மயில் பறக்கத் தொடங்கியது.

சிற்பி உடனே மயிலின் கால் நகத்தினை உளியால் தட்டி பின்னம் உண்டாக்கினார். மயிலும் பூமியில் நின்றது. இவ்வழகிய தெய்வீகச் சிலையை இன்றும் இத்தலத்தில் காணலாம்.

மயிலின் கால்களே ஆதாரமாக மயில் மீது இறைவன் அமர்ந்திருப்பது அதிசயத்தக்கது. ஆறுமுகப் பெருமான் முன்னும் பின்னுமாக ஆறுதிருமுகங் களுடன் பன்னிரு திருக்கரங்களுடன் வள்ளி, தேவசேனாதேவி சமேதரராய் மயில் மீது இடக்காலை மடித்து வலக்காலைக் கீழே தொங்க விட்டு கிழக்கு நோக்கி அமர்ந்த கோலத்தில் காட்சி தருகிறார். திருவாசியின் கொடி, சுடர் இணைப்புத் திறப்பாக அமைந்திருப்பதும் முருகனின் ஆறு திருமுகங் களும் கரங்களும் தனித்தனியே தெரியும்படி அமைக்கப் பெற்றிருப்பதும் சிறப்பாகும்.

முருகப் பெருமானைத் தாங்கும் மயிலின் கால்கள் தனித்தனியே 3 அங்குல உயரத்தில் முன்னும் பின்னுமாக இருப்பதனைத் தீபாராதனையின் போது காணலாம். மயிலின் கால்கள் நன்கு தெரியும்படி தீபாராதனை காட்டுவர். இது போன்ற திருவுருவினை எண்கண், பொரவாச்சேரியிலும் காணலாம்.

மூலவரைப் போன்றே உற்சவரும் எழுந்தருளியுள்ளார். பிருங்கி முனி வர் சிவனும் உமையும் தம்பதி சமேதரராய் எழுந்தருளியிருந்த போது சிவனை மட்டும் வணங்கியதனால் கோபம் கொண்ட சக்தி இத்தலத்தில் தவம் இருந்து கேதாரீசுரர் விரதம் இருந்து சிவனை வணங்கி சிவனின் திருவுடலில் இடப்பாகம் பெற்று அர்த்தநாரீசுரர் ஆனார்.

பிருங்கி முனிவர் வண்டு உருவெடுத்து இறைவனின் உடலில் வலப் பாகத்தில் துளையிட்டு வலம் வர இறைவி கோபம் கொண்டு முனிவர் உடலில் இருந்து சக்தி, இரத்தம் முழுவதையும் எடுக்க சிவன் உமையைச் சமாதானப்படுத்தியதாக ஐதீகம்.

வன்மீக முனிவர் இங்குச் சமாதி கொண்டிருப்பதாகவும் அவர் சமாதி மீது சித்தி விநாயகப் பெருமான் எழுந்தருளியிருப்பதாகவும் வரலாறு.

சித்ரா பௌர்ணமியன்று பிரமோற்சவம். கார்த்திகை, சஷ்டி விழா சிறப்பு. ஆடிக்கிருத்திகையன்று காவடி எடுப்பர்.

திருப்புகழில் நான்கு பாடல்கள் உள்ளன.

## 21. எண்கண்

தஞ்சை - நாகை பேருந்து வழித்தடத்தில் முகத்தனூர் என்னும் ஊரின் அருகில் உள்ளது திருவாரூரிலிருந்து 13 கி.மீ. தூரத்தில் உள்ளது.



பிரம்மபுரம், பாஸ்கர க்ஷேத்திரம், அஷ்டநேந்திரபுரம் என்னும் பெயர் பெற்றது.

இத்தலப் பெயருக்கு ஒரு கதை உண்டு. சோழ மன்னனான முத்தரச

சோழன் முருகப் பெருமானின் அழகிய திருவுரு ஒன்றைச் செய்ய விரும்பி சிற்பி ஒருவனை ஏற்பாடு செய்தான். சிற்பியும் ஆறுமுகப் பெருமானின் அழகிய திருவுரு ஒன்றினை வள்ளி தெய்வயானையுடன் மயில் மீது அமர்ந்த நிலையில் மயிலின் இரு மெல்லிய கால்கள் மட்டுமே ஆதாரமாக வைத்துச் செதுக்கினான்.

மன்னன் இது போன்ற வேறொரு சிலையினைப் பிறர் செய்து வாங்கி விடக் கூடாதேயென்ற பொறாமையுடன் சிற்பியின் கை கட்டைவிரலினைத் துண்டித்து விட்டான்.

அதன் பின்னும் மனம் தளராத சிற்பி எட்டிக்குடி முருகன் திருவுருவினைச் செய்தான். மன்னன் அதைக் கண்டு கோபம் கொண்டு சிற்பியின் கண்களைக் குருடாக்கினான்.

சிற்பி முருகனை வணங்கி முருகப் பெருமானையே எண்ணி அவ் ''எண்ணத்தினையே கண்களாக்கி'' முன் போல் அற்புதச் சிலையினை வடித்தான். கண்ணையும் கட்டை விரலினையும் ஆறுமுகப் பெருமான் அருளால் திரும்பப் பெற்றான். எனவே இத்தலம் ''எண்கண்'' எனப் பெயர் பெற்றது.

எட்டிக்குடி, எண்கண், பொரவாச்சேரி ஆகிய மூன்று ஆறுமுகப் பெருமானும் இச் சிற்பியால் வடிக்கப் பெற்றனவாகும்.

இங்கு ஆறுமுகப் பெருமான் மயில் மீது இடதுகாலை மடக்கி வலது காலைத் தொங்க விட்டு தெற்கு நோக்கியவாறு மயில் மீது அமர்ந்த நிலையில் காட்சி தருகின்றார். தேவியர் இருவரும் இருபுறமும் உள்ளனர். உற்சவரும் மூலவரைப் போலவே எழுந்தருளியுள்ளார்.

சிங்காரவேலர் கிருத்திகை போன்ற நாட்களில் உலா வருவார். மூலவரின் பின்பக்கம் மந்திரத் தகடு பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளது.

தலமரம்: வன்னி. தீர்த்தம்: குமார தீர்த்தம், காவிரி (வெட்டாறு). திருப்புகழில் ஒரு பாடல் இத்தலத்திற்குரியது.

இத்தலத்தில் வழிபட்டால் கண் நோய் நீங்கும். இங்குக் காவடி எடுத்தல் சிறப்பு.

## 22. ஏழூர்

நாமக்கல்லிலிருந்து 16 கி.மீ. இல் திருச்செங்கோடு - இராசிபுரம் சாலையில் உள்ளது. இதனை ஏழுகரை நாடு என்பர்.

தேஸீஸ்வரர் ஆலயம் உள்ளது. தேவார வைப்புத் தலங்களுள் ஒன்று. இங்கு முருகப் பெருமான் தனிச் சந்நிதியில் எழுந்தருளியுள்ளார்.

கொங்கு நாட்டை 24 உள் நாடுகளாகப் பிரித்தனர். அதில் பூந்துறை நாடு ஒன்றாகவும் அதைச் சார்ந்த துணை நாடாக ஏழுகரை நாடும்

இருந்தது. ஏழுகரை நாட்டிலுள்ள ஏழு ஊர்களுக்கும் தலைமையாக இருந்தது ஏழூர். திருப்புகழில் ஒரு பாடல் பெற்றது.

இடம் விளங்காத தலம் என்பர். உயர்திரு. கி.வா.ஜ. அவர்களும் இத்தலமே திருப்புகழ் பாடல் பெற்ற ஏழூர் என்று குறிப்பிட்டுள்ளார்.

## 23. ஒடுக்கத்தூர்

வடஆற்காடு மாவட்டம் வேலூர் வட்டத்தைச் சேர்ந்த தலம். இதனை ஒடுக்கத்துச் செறிவாய் என்பர். வேலூரிலிருந்து 38 கி.மீ. தொலைவில் உள்ளது.

இங்குள்ள சப்தரிஷிஸ்வரர் கோவில் மிகப் பழைமையானது. சோழர் காலச் சிவாலயம்.

இங்குள்ள ஒடுக்கபுரீசுவர் ஆலயத்தில் சுப்பிரமணியர் வேழ மங்கை, வேடமங்கையுடன் கிழக்கு நோக்கி ஒரு திருமுகமும் நான்கு திருக் கரங்களும் கொண்டு காட்சி தருகின்றார். இச்சந்நிதி புராதனமானது அல்ல.

திருப்புகழ் ம்ணி தணிகைமணி அவர்கள் ஊர் அறியப் பெறாத பாடலாக இத்தலத்தின் பாடலைக் குறிப்பிட்டுள்ளார்.

திருப்புகழில் ஒரு பாடல் 'ஒடுகத்துச் செறிவாய்' என உள்ளது.

## 24. ஓதிமலை - ஞானமலை

கோவையிலிருந்து புன்செய்புளியம்பட்டி செல்லும் வழியில் இடும்பரை என்னும் ஊரிலிருந்து 1 கி.மீ.யில் உள்ளது. புன்செய்புளியம்பட்டியில் இருந்து 8 கி.மீ. யில் உள்ளது. 180 படிகள் கொண்ட மலை உச்சியில் அமைந்த கருவறை, முகமண்டபம் கொண்ட சிறிய கோயில்.

இத்தல முருகப் பெருமான் ஐந்து திருமுகங்களும் எட்டு திருக்கரங்களும் கொண்டு தனி முருகனாக 'குமார சுப்பிரமணியன்' என்னும் பெயரில் எழுந்தருளிள்ளார். ஒரு முகம் இடும்பரையில் சிறையில் இருக்கும் அயனை க்காவல் புரிவதாக ஐதீகம். தலைகளின் பின்னே ஒளிவட்டம் அமைக்கப்பட்டுள்ளது.

வலக்கையில் அபய முத்திரை, கத்தி, அம்பு, வச்சிரமும் இடக்கையில் வரதம், கேடயம், வில், பாசமும் அமைக்கப்பட்டுள்ளன. தலைகளில் காந்தமகுடம் அணி செய்கின்றது. முருகப் பெருமான் பீடத்தில் மயில் உருவாக்கப்பட்டுள்ளது.

இம்மலையடிவாரத்தில் கயிலாய நாதர் ஆலயமும் போகர் யாக குண்டமும் உள்ளன. போகரை வழியனுப்ப முருகப் பெருமான் ஒருமுக மும் நான்கு திருக்கரங்களும் கொண்டு இறங்கி வந்தார். எஞ்சிய ஐந்து

முகங்களும் எட்டு திருக்கரங்களும் கொண்டு ஆறுமுகப் பெருமான் விளங்குவதாகவும் ஐதீகம்.



திருப்புகழ் பாடல் பெற்ற ஊதிமலை ஓதிமலையே என்பாரும் உண்டு.

## 25. கடம்பூர்

சிதம்பரத்திற்குத் தென்மேற்கே 24 கி.மீ.யில் உள்ள மன்னார்குடிக்குத் தெற்கே 6 கி.மீ. ஓமாம்புலியூர். ஓமாம் புலியூருக்கு வடமேற்கே 6.5 கி.மீ.இல் கடம்பூர் உள்ளது.

தலமரம்: கடம்ப மரம். தல மரத்தைக் கொண்டு கடம்பூர் எனப் பெயர் பெற்றது. இங்குள்ள சிவபெருமான் அமிர்தகடேசுவரர். இறைவி: ஜோதி மின்னம்மை. முருகப் பெருமான் இவரை வழிபட்டு சூரனை அழிக்க வில் பெற்றார். இந்திரன் இவரை வழிபட்டு அமிர்த கலசம் பெற்றார். செவ்வாய் வழிபட்ட தலம்.

இத்தலத்தில் ஆறுமுகப் பெருமான் பன்னிரு திருக்கரங்களோடு எழுந்தருளியுள்ளார்.

இந்திரனின் தாய் தினமும் இத்தலம் வந்து வழிபட்டு வந்தார். அவரது சிரமத்தினைக் குறைக்க விரும்பிய இந்திரன் இக்கோவிலைத் தனது இந்திரலோகம் கொண்டு செல்ல எண்ணி அகழ்ந்து எடுத்தார். அவர் விநாயகரை முறைப்படி வணங்கி அனுமதி பெறாததால் விநாயகர் தன் வலக்கால் பெருவிரலால் தேரை அழுத்தவே தேர் ஒரு பக்கமாக சாய்ந்து நின்று விட்டது. இந்திரனும் பிழை உணர்ந்து தன் முயற்சியை நிறுத்தி விட்டு விநாயகப் பெருமான் ஆணைப்படி கோடிலிங்கம் பிரதிஷ்டை செய்தார். இத்தல விநாயகர் இன்றும் வலக்காலை ஊன்றிய நிலையிலேயே காட்சி தருகின்றார்.

கீழைக்கடம்பூர் கோவில் இந்திரனால் பிரதிஷ்டை செய்யப்பட்டது. இறைவன் ருத்ரகோடீசுவரர். சிற்பக் கலைச் சிறப்பு பெற்ற தலம்.

திருப்புகழில் ஒரு பாடல் இத்தலத்திற்குரியது.

## 26. கதிர்காமம்

இலங்கை நாட்டில் கொழும்பிலிருந்து 230 கி.மீ. தூரத்தில் உள்ளது. ஏமகூடம், பூலோகக் கந்தபுரி, பஞ்சமூர்த்தி வாசம், வில்வகானம், சகல சித்திகரம், அகத்தீயப்பிரியம், பிரமசித்தி, அவ்வியர்த்த மூர்த்தம், சித்த க்ஷேத்தரம், கதிரை, ஜோதிர்காமம் எனப் பெயர் பெறும்.

இறைவனுக்குக் கதிரைவேலன், கதிரைநாதன், கதிர்காம சுவாமி, மாணிக்க வேல், கந்தக்கடவுள், ஆறுமுகப் பெருமான், பரஞ்ஜோதிப் பெருமான் என்ற பெயர்களும் உண்டு.

முருகன் திருக்கோயில் செப்போடு வேய்ந்த சிறிய கொட்டகை வடிவில் உள்ளது. கோயிலின் முன் வாயிலில் திரைகள் அடுக்கடுக்காக தொங்க விடப்பட்டுள்ளன. இதனை ஏழு திரைகள் என்பர். நம் ஊனுடம்பாகிய

லயத்திலும் மூலாதாரம் முதலாகிய ஆக்ஞை ஈறாக ஆறுவாயில்களும் ஆறு திரைகளாக உள்ளன. ஏழாவது திரை துவாதசாந்தமாகிய ஒளித்திரை, வெளித்திரையாகும். இதனைக் கடந்து ஆனந்த முருகனின் அக்கரவடிவைத் தரிசிக்க வேண்டும்.



இத்தலம் முக்கோண வடிவில் அமைந்துள்ளது. விந்துதானத்தில் முருகப் பெருமானும், வலது நுனியில் வள்ளி நாயகியும், இடது நுனியில் தெய்வயானையும் கோயில் கொண்டுள்ளனர்.

சூரபத்மனைச் சங்காரம் செய்யும் நோக்குடன் தென்திசை வந்து தங்கிய இடம் ஏமகூடம். சூரபத்மனைச் சங்காரம் செய்து வாகை சூடி கதிர்காமம் வந்து நவகங்கைத் தீர்த்தத்தை உண்டாக்கி சிந்தாமணி ஆலயத்தில் வள்ளி தெய்வயானையுடன் வீற்றிருக்கின்றார்.

வேலவன் தெற்கு நோக்கியும் வள்ளி வடக்கு நோக்கி இறைவனை நோக்கியவாறும் தெய்வயானை கிழக்கு நோக்கியும் எழுந்தருளியுள்ளனர்..

கர்பக்ககிரகத்தின் வெளியே எப்போதும் மயில் மீது இரண்டு தேவியரோடு அமர்ந்த முருகன் உருவமுடைய திரையிட்டுள்ளனர். உள்ளே

இருப்பது என்ன என்று யாருக்கும் தெரியாது. பெட்டி ஒன்று மட்டும் உள்ளே உள்ளது. பூசை செய்யும் சுப்புரளைமார் மட்டும் உள்ளே சென்று தேங்காய் உடைத்து பூசை செய்வர். மரகத வேலுக்கு மட்டும் அபிஷேகம் உண்டு. இங்கு மலைமீது கிடைக்கும் திருநீரே பிரசாதம்.

சுபிட்சர மந்திர வடிவாக அமைக்கப்பட்ட பொன் இயந்திரத் தகடு உள்ள பெட்டியே இப்போது திரைச்சீலையால் மறைக்கப்பட்டுள்ளது. இங்கு ஜோதி வடிவில் முருகப் பிரான் வணங்கப் பெறுகிறார்.

இப்பெருமானுக்கு பூசை செய்பவர்கள் வாயைக் கட்டிக் கொண்டு மௌனமாக நின்றே பூசனை செய்வர்.

திருவிழாக் காலங்களில் பெட்டி ஒன்றினை யானை மீது கட்டி உலா வருவர். கதிர்காமத்திற்கு 5 கி.மீ. தூரத்தில் உள்ள செல்லக் கதிர்காமம் என்னும் தலத்தில் மாணிக்கக் கங்கைக் கரையில் மாணிக்க விநாயகர் எழுந்தருளியுள்ளார். அங்கு ஆலயம் எதுவும் இல்லை. மலையையே முருகராக வழிபடுவது வழக்கம். விநாயகருக்கும் திருவுரு இல்லை. திரைச் சீலையில் விநாயகர் திருவுரு உள்ளதனையே வணங்குவர்.

திருப்புகழில் 25 பாடல்கள் உள்ளன.

## 27. கந்தன்குடி

மாயவரத்திலிருந்து காரைக்கால் செல்லும் வழியில் உள்ளது. அம்பகரத் தூர் புகைவண்டி நிலையத்திலிருந்து 1.6 கி.மீ. பேரளத்திலிருந்து 6 கி.மீ. தொலைவில் உள்ளது.

கருணைக் கடலாம் கந்த பெருமான் திருப்பெயராலேயே அமைந்து விளங்கும் திருத்தலம் கந்தன்குடியாகும். கந்தன்குடி கொண்டு விளங்கு வதனால் 'கந்தன்குடி' எனப் பெயர் பெற்றது. இத்தலம் குமரக்குடி, மதுவனம் என்றும் குறிக்கப்படுகின்றது.

கந்தவேல் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு இருதேவி யருடன் கிழக்கு நோக்கி மயில் இலச்சினை பொறித்த பீடத்தின் மீது நின்ற கோலத்தில் திருக்கரத்தில் வேல் தாங்கிக் காட்சி தருகிறார். எதிரில் மயிலுக்குப் பதில் ஐராவதம் உள்ளது. தன் திருமகளான தெய்வயானையின் தவத்திற்கு ஊறு ஏதும் நேராதவாறு தந்தை காவல் புரிவதாக ஐதீகம். தெய்வயானைக்குத் தனிச் சந்நிதி உள்ளது. பெரம்பூர், திருவிடைக்கழியில் மட்டுமே இவ்வாறு தனிச்சந்நிதி உள்ளது. இவர் கல்யாண சுந்தரர் என்று அழைக்கப் பெறுகின்றார்.

முன்காலத்தில் பெரும் காடாய் இருந்த இத்தலத்தில் மேய்ச்சலுக்காக வந்த பசுக்கூட்டங்களில் ஒரு பசு மட்டும் தினமும் ஒரு குறிப்பிட்ட பாம்புப் புற்றில் தாமாகவே பாலைச் சொறிந்து வந்தது. பசுவின் உரிமையாளர் தினமும் பாலின்றி வரும் பசுவைக் கண்டு அதன் உண்மை அறிய

பசுவினைப் பின் தொடர்ந்து வந்த போது பசு தாமாகவே புற்றில் பால் சொறிவதனைக் கண்டார். ஊர் மக்களை அழைத்து வந்து அந்தப் புற்றினை அகழ்ந்த போது அங்குக் கந்த பெருமான் வள்ளி தெய்வசேனாதேவி சமேதரராகக் காட்சி தந்ததாகப் புராண வரலாறு.

தேவசேனாதேவி இத்தலத்தில் தவம் இருந்து கந்தப் பெருமானை அடைந்ததாக ஐதீகம். தேவிக்குக் காவலாக ஐராவதத்தையும் பைரவரையும் இந்திரன் அனுப்பினார். இன்றும் இத்தலத்தில் ஐராவதம் யானை உள்ளது.

ஓங்கி உயர்ந்த திருக்கோபுரமும், கொடிமரமும் அடுத்து ஐராவதமும் காணப்பெறுகின்றன. இரு பிரகாரங்களைக் கொண்டது. முதலில் தெய்வ யானை சந்நிதியும் அடுத்து கர்பக்கிரகத்தில் கந்தவேள் சந்நிதியும் உள்ளது.

மூலவருக்குத் தென் பக்கத்தில் ஐராவதேசுவரரும் சண்டிகேசுவரரும் காட்சி தருகின்றனர். கந்தன் கையில் உள்ள வஜ்ராயுதம் தனிப் பெருமை கொண்டு ஒளிவீசுகிறது.

இத்தலத்தில் சித்ரா பௌர்ணமியும் கந்தர்சஷ்டியும் சிறப்பு. இங்குள்ள தீர்த்தத்தில் நீராடி கந்தனை வழிபடுவோர் இம்மையில் இன்பவாழ்வும் மறுமையில் போக வாழ்வும் பெறுவர். மாதக் கார்த்திகை, சித்ரா பௌர்ணமி சிறப்பாகும்.

திருப்புகழில் ஒரு பாடல் இத்தலத்திற்குரியது.

இத்தலத்தின் அருகில் பெரம்பூர் என்னும் முருகன் தலமும் உள்ளது.

## 28. கரூர் - கருவூர்

திருச்சி - ஈரோடு புகை வண்டிப் பாதையில் அமைந்த தலம். திருச்சியிலிருந்து 76 கி.மீ. ஈரோட்டிலிருந்து 66 கி.மீ. தொலைவில் உள்ளது.

இத்தலம் கரூர் - கருவூர் என அழைக்கப்படுகின்றது. வஞ்சி மரங்கள் அடர்ந்த காடாய் இருந்தமையினால் இதனை 'வகுளாரண்யம்' என்பர். காமதேனு வழிபட்டு படைத்தற் தொழிலுக்கு வரப் பெற்றதால் 'ஆனிலை' எனப் பெயர்.

ஏழு நிலைகளும், ஏழு கலசங்களும் கொண்ட இராஜகோபுரம். உள்கோபுரம் 5 நிலைகளைக் கொண்டது.

இங்கு முருகப் பெருமான் ஆறு திருமுகங்களும் பன்னிரு திருக்கரங்களும் கொண்டு வள்ளி தெய்வயானையுடன் கிழக்கு நோக்கி நின்ற திருக்கோலத்தில் கட்சி தருகின்றார். மயில் பின் பக்கம் உள்ளது.

கருவூர்த் தேவர், புகழ் நாயனார் தொடர்புடைய தலம். இங்குச் சிவபெருமான் மூலஸ்தானத்தில் சுயம்புத் திருமேனியுடன் காட்சி தருகின்றார். சுமார் 2 அடி உயரம். வடக்கு நோக்கிச் சிறிது சாய்ந்து காட்சி

தருகிறார். கருவூராருக்கு இடம் கொடுத்ததாக ஐதீகம். இவர் பசுபதீசுவரர் கல்யாண பசுபதீசுவரர், ஆனிலையப்பர், ஆதிநாயகர் என்ற திருநாமங் களை உடையவர்.

இரு தேவியர் சந்நிதிகள் உள்ளன. கிழக்கு நோக்கிய தேவி அலங்கார வல்லி -ஞானசக்தி வடிவானவள். தெற்கு நோக்கிய தேவி சௌந்தர நாயகி -கிரியா சக்தி வடிவானவள். சிவபெருமானின் இடப்பக்கம் பெறத் தேவி தவம் இருந்த தலங்களுள் ஒன்று.

கார்த்திகைதோறும் முருகனுக்குச் சிறப்பு வழிபாடு உண்டு. எறிபத்த நாயனார் விழா, பங்குனி உத்திரம், தைப்பூசம், அருணகிரிநாதர் விழா சிறப்பாகும்.

திருப்புகழில் ஏழு பாடல்கள் உள்ளன.

அருகில் வெண்ணெய் மலை என்னும் முருகன் திருத்தலம் உள்ளது.

## 29. கழுகுமலை

திருநெல்வேலியிலிருந்து 32 கி.மீ., கோவில்பட்டியிலிருந்து 19 கி.மீ., சங்கரன்கோவிலிலிருந்தும் செல்லலாம்.

கழுகாசலம், குருகுமலை, கிருத்ரகிரி, அரைமலை என்ற பெயர்களும் இத்தலத்திற்குரியனவாகும்.

சம்பாதி (கழுகு) முனிவரால் பிரதிஷ்டை செய்து வணங்கப்பட்ட முருகர், கழுகு வந்து வழிபட்ட ஊர் கழுகுமலை, 300 அடி உயரம் கொண்ட இம்மலை கழுகு போன்ற உருவம் கொண்டது. எனவே 'கழுகு மலை' எனப் பெயர் பெற்றது.

மலையடிவாரத்தில் புஷ்கரணியும் அடுத்து திருக்கோவிலும் அமைந்துள் ளன. இது ஒரு குகைக் கோயில். குகையிலே முருகப் பெருமான் காட்சி தருகிறார். இதைப் போன்ற அமைப்பினை உடையது திருச்செந்தூரும், வள்ளியூரும் ஆகும். இம்மூன்றும் நெல்லை மாவட்டத்திலேயே உள்ளது. குகையை வைத்து மேலே திருக்கோயில் விரிவாகக் கட்டப்பட்டுள்ளது. முருகன் சந்நிதியும் கற்பக்கிரகமும் குடவரையாகும்.

குமரப் பெருமான் ''கழுகாசல மூர்த்தி'' என்னும் திருநாமத்துடன் ஒரு திருமுகமும் 6 திருக்கரங்களும் கொண்டு மயில் மீது மயில்வாகனனாக ஒரே கல்லில் அமைக்கப்பட்டு காட்சி தருகின்றார். வேறு எங்கும் காண முடியாத அரிய காட்சியாகும். தாரகாசுரனை வதம் செய்யவே இக்கோலத் தில் காட்சி தருகின்றார். வழக்கமாக வலப்பக்கம் காணப் பெறும் மயில் இங்கு இடப்பக்கமாகக் காணப்படுகிறது. இது சிறப்பாகும். ஆறு திருக்கரங் களில் அபயம், வரதம், சக்தி, கத்தி, வஜ்ரம், கேடயம் காணப்பெறுகின்றன.



முருகப் பெருமானின் அருகில் எதிர் எதிராக வேழமங்கையும் வேடமங் கையும் எழுந்தருளியுள்ளனர். எனவே முருகப் பெருமானின் எதிரே நின்று பார்த்தால் தேவிய ரைக் காண முடியாது. பக்கவாட்டில் நின்றே பார்க்கவேண்டும். இவ்வற்பு தத்தினை இங்கு மட்டுமே காண முடியும்.

அகத்தியருக்கு உபதேசம் செய்வ தற்காக முருகப் பெருமான் தென் திசை நோக்கி எழுந்தருளியுள்ளதாக ஐதீகம்.

உற்சவர் சந்நிதியும், கர்பக்கிரக மும் மலையைக் குடைந்து அமைக் கப்பட்டுள்ளது. உற்சவரும் மூலவ ரைப் போன்று ஒரு திருமுகமும், ஆறு திருக்கரங்களும் கொண்டு தேவியருடன் எழுந்தருளியுள்ளார்.

ஆறுமுகப் பெருமான் திருவுருவம் பாறையிலேயே ஒரே வரிசையில் ஆறு முகங்களுடன் ஆறு திருக்கரங்களுடன் செதுக்கப்பட்டுள்ளது.

சஷ்டி, கார்த்திகை சிறப்பான நாட்கள். வைகாசி விசாகம், கந்த சஷ்டி, தைப்பூசம், பங்குனி உத்திரம் பெருவிழாக்களாகும். திருவிழாக் காலங் களில் இரத்தின வேல், இரத்தின கிரீடம், தங்கக் கவசங்களுடன் முருகன் காட்சி தருவது காண வேண்டிய ஒன்றாகும்.

சம்பாதி முனிவர் முருகனை வழிபட்டு முக்தி பெற்ற தலம். மலைவலம் 1.5 கி.மீ. மலையில் விநாயகர் கோவிலும் உள்ளது.

இத்தலத்தில் காவடி எடுத்தல், திருமணம், முடி எடுத்தல் சிறப்பாகும். திருப்புகழில் மூன்று பாடல்கள் பெற்ற தலம். ''கழுகுமலைநாதனைக் காணாத கண் என்ன கண்'' என்பது இங்குள்ள வழக்கு.

சென்னிகுளம் அண்ணாமலை ரெட்டியார் 'காவடிச் சிந்து' இத்தல முருகனுக்குரியதாகும்.

அருகே சிவகிரி முருகன் கோவில் உள்ளது. மலைமேல் ஆறுமுகநயினார், பாலசுப்பிரமணியர் உள்ளனர்.



கழுகுமலையின் மேலே கீழ்ப்புறம் 'கல்வெட்டாங் கோயில்' என்னும்

கோயில் சிற்ப வேலைப்பாடுகளுடன் மலையிலேயே வெட்டப்பட்டு



காணப்படுகின்றது. சிற்பங்கள் வெகு அற்புதமானவை. உலகப் புகழ் பெற்றது.

## 30. கன்னபுரம்

கோவை - கரூர் பேருந்து வழித்தடத்தில் உள்ளது. நேத்ரபுரி என்ற பெயரும் இத்தலத்திற்கு உண்டு. இங்குள்ள விக்கிரம சோளீஸ்வரம் மிகப் பழைமையான தலம். இத்தலத்தில் எழுந்தருளிய ஆறுமுகப் பெருமான் பன்னிரு திருக்கரங்களுடன் கிழக்கு நோக்கி நின்ற திருக்கோலத்தில் சுமார் 6 அடி உயரத்துடன் காட்சி தருகின்றார்.

இத்தலச் சிவபெருமான்: விக்கிரமசோளீசுவர். இறைவி: வித்வநாயகி. இறைவனுக்கு வலப்புறம் இறைவி சந்நிதி உள்ளது.

சித்ரா பௌர்ணமிக்கு முன்னும் பின்னுமாக 10 நாட்கள் பெருந்திருவிழா — தேர்த்திருவிழா, நவராத்திரி, கார்த்திகை, மார்கழி, சிவராத்திரி சிறப்பு.

திருப்புகழில் ஒரு பாடல் உள்ளது.

## 31. காங்கேயம்

ஈரோடு - திருப்பூர் புகைவண்டிப் பாதையில் ஊற்றுக்குழி புகைவண்டி நிலையத்திலிருந்து 22.5 கி.மீ. தொலைவில் உள்ளது. இத்தலம் சிங்கை, அகிலாண்டபுரம் என்ற பெயர்களும் பெற்றது.

இங்குள்ள அகஸ்தீஸ்வரர் திருக்கோயிலில் கந்த பெருமான் ஒரு திருமுகமும் இரு திருக்கரங்களும் கொண்டு தண்டாயுதபாணியாய் கிழக்கு நோக்கி நின்ற திருக்கோலத்தில் காட்சி தருகின்றார். உற்சவர் இல்லை.

இத்தலச் சிவபெருமான்: அகஸ்தீஸ்வரர். இறைவி: அகிலாண்டநாயகி. தீர்த்தம்: கோவிந்த தீர்த்தம். இது அகத்தியர் வழிபட்ட தலங்களில் ஒன்று.

இத்தலத்திலேயே காசிவிசுவநாதர் - விசாலாட்சி திருக்கோவில் ஒன்றும் உள்ளது. இங்கு எழுந்தருளியுள்ள முருகப் பெருமான் - கல்யாண சுப்பிரமணியசுவாமி என்ற திருநாமத்துடன் எழுந்தருளியுள்ளார். ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு தேவியருடன் மயில் அருகில் நிற்க கிழக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார்.

திருப்புகழில் இரு பாடல்கள் உள்ளன.

## 32. காஞ்சிபுரம் - ஏகாம்பரேசுரர் திருக்கோவில்

காஞ்சிபுரம் மாவடிக்கருகில், ''மாவடிக் கந்தன்'' சந்நிதி உள்ளது. இத்தலப் பெருமான் ஆறு திருமுகங்களும், பன்னிரு திருக்கரங்களும் கொண்டு இருபுறமும் தேவியர் சூழ மயில் மீது அமர்ந்த திருக்கோலத்தில் எழுந்தருளியுள்ளார். திருவாசியுடன் ஒரே அமைப்பு கொண்டது. உற்சவர் ஒரு திருமுகத்துடன் காட்சி தருகின்றார்.

மற்றொரு ஆறுமுகர் இரு தேவியருடன் சுமார் 4 அடி உயரத்துடன் மயில் பின்பக்கம் இடப்புறம் அதன் முகம் விளங்க நின்ற திருக்கோலத்தில் காட்சி தருகின்றார்.

ஏகாம்பரேசுரர் சந்நிதிப் பிரகாரத்தில் மயில் மீது அமர்ந்த ஆறுமுகப் பெருமான் இருபுறமும் தேவியர் விளங்க எழுந்தருளியுள்ளார்.

இங்குள்ள விகட விநாயகரையே கந்த புராணத்தில் முதல் துதியாக வைத்து கச்சியப்பச் சிவாச்சாரியார் பாடினார். இரண்டாம் பிரகாரத்தில் வாயுத்திக்கில் பாலமுருகன் நின்ற திருக்கோலத்திலும், தலமரமான மாமரத்தின் அடியிலுள்ள மாவடி வைகும் செவ்வேள் உற்சவரையும் திருப்புகழில் குறிப்பிடப்பட்டுள்ளது.

## 33. காஞ்சிபுரம் - கச்சபேசுவரர் திருக்கோவில்

இங்கு எழுந்தருளியுள்ள ஆறுமுகப் பெருமான் பன்னிரு திருக்கரங்களுடன் மயில் மீது அமர்ந்து இருபுறமும் தேவியர் இருவர் விளங்க கிழக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார். திருவாசியுடன் ஒரே அமைப்பு.

உற்சவர் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களுடன் இரு தேவியருடன் தனிச் சந்நிதியில் எழுந்தருளியுள்ளார். நவவீரர் சந்நிதியும் உள்ளது.

கார்த்திகை மாதம் ஞாயிற்றுக் கிழமைகளில் மண்சட்டியில் மாவிளக்கு ஏற்றித் தலையில் வைத்து வலம் வரும் ''மண்டை விளக்கு'' பிரார்த்தனை செய்வர். தலை சம்பந்தமான நோய்கள் இதனால் நீங்கும்.

பிரகாரத்தில் திருப்பரங்குன்ற முருகப் பெருமான் மயில் மீது அமர்ந்த ஆறுமுகம் பெருமானாக இடப்பக்கம் தெய்வயானையுடனும் திருவாசியுடனும் ஒரே கல்லில் அமைந்த திருக்கோலம்.

ஒரு திருப்புகழ் பாடல் பெற்ற தலம்.

## 34. காஞ்சிபுரம் - கச்சிமேற்றளி

இங்கு எழுந்தருளியுள்ள முருகப் பெருமான் நான்கு திருக்கரங்களுடன் மயில் மீது அமர்ந்த திருக்கோலம். மயில் இருபுறமும் தோகையினை உடைய அபூர்வ அமைப்பாகும்.

மகாவிஷ்ணு சிவசாரூபம் பெறும் பொருட்டுத் தவம் செய்த தலம். இங்குள்ள ஓதவுருகீசர் விஷ்ணு ரூபமாயிருந்தவர் சம்பந்தர் பாடலால் சிவலிங்கமாக உருமாறினார் என்பர். மேற்கு நோக்கிய சந்நிதி.

ஒரு திருப்புகழ் பாடல் பெற்றது.

## 35. காஞ்சிபுரம் - குமரகோட்டம்

தலங்களுள் சிறந்தது காஞ்சி. இதையே கவியரசர் காளிதாசர் 'நகரேஷு காஞ்சி' எனப் போற்றினார். முக்தி தரும் தலங்கள் ஏழனுள் ஒன்று. பஞ்ச பூதத் தலங்களுள் இது பிருதிவித்தலம்.

பிரமனை விடுவிக்கக் கோரி சிவபெருமான் நந்தி தேவரை முருகப் பெருமானிடம் அனுப்பினார். முருகப் பெருமான் அதனை மறுத்து, பின் விடுவித்தார். தந்தை சொல்லை மறுத்த பாவம் நீங்க சிவனைப் பிரதிஷ்டை செய்து வழிபட்ட தலம். அப்பெருமானே தேவசேனாபதீச்சுரலிங்கம் என்ற திருநாமம் பெற்றவர்.

காமாட்சியம்மன் கோவிலுக்கு அருகில் அமைந்துள்ளது. கந்தபுராணம் அருளிய கச்சியப்பச் சிவாச்சாரியார் தினமும் வழிபட்ட தலம். கந்த புராணம் எழுதக் காரணமான தலம்.

இங்குப் பாலசுப்பிரமணியராக ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு நான்கு அடி உயரமுடையவராக வடமேற்குத் திசை நோக்கி நின்ற திருக்கோலத்தில் பிரம்மச்சாரியாகக் காட்சி தருகின்றார்.

பிரணவத்தின் பொருளை அறியாத நான்முகனைச் சிறையில் அடைத்து பின்பு படைப்புத் தொழிலைத் தாமே ஏற்றுக் கொண்ட கோலத்தில் உள்ளார்.

இங்கு இரு உற்சவர்கள் எழுந்தருளியுள்ளனர். ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு இரு தேவியருடன் எழுந்தருளிய திருக்கோலம் ஒன்று.

மற்றொருவர் ஒரு திருமுகத்துடன் தம்பதிசமேதரராக இருக்க ஐந்து தலைநாகம் தலைமீது குடை பிடிக்க எழுந்தருளிய எழிலார்ந்த உற்சவர். இவரை 'உடுப்பி சுப்பிரமணியர்' என்பர். இவ்வரிய முருகப் பெருமானை வேறு எங்கும் காண முடியாது.

தனியே சண்முகர், தண்டாயுதபாணி சந்நிதிகள் உள்ளன. உற்சவர் சண்முகர் மயில் மீது அமர்ந்த கோலத்தில் அருள் பாலிக்கின்றார்.

முத்துக்குமாரசுவாமி ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு இடது காலை மயில் மீது வைத்துக் கொண்டு நின்ற திருக்கோலத்தில் வில், அம்புடன் காட்சி தருகின்றார்.

பொதுவாகக் காஞ்சிக்குரிய பாடல்கள் அனைத்தும் இத்தலத்திற்குப் பொருந்தும். இரு பாடல்களில் இத்தலம் குறிக்கப்பட்டுள்ளது. 'கச்சிக் குமரப் பெருமானே' என அருணகிரியார் முருகனை அழைக்கின்றார். இங்கு முருகன் பிரம்மசாஸ்தா கோலத்தில் எழுந்தருளியுள்ளார்.

## 36. காமக்கூர் - காமத்தூர்

ஆரணியிலிருந்து படவேடு செல்லும் வழியில் 7 கி.மீ.யில் பாளையம் என்ற ஊரின் அருகில் உள்ளது. இத்தலத்தினைக் காமத்தூர், காமநகர் என்றும் குறிப்பிடுகின்றனர்.

இத்தலத்தில் எழுந்தருளியுள்ள காமாட்சியம்மன் காமேஸ்வரியாகவும், காமரூபிணியாகவும், காமவர்த்தினியாகவும் விசேச சான்னியத்துடன் எழுந்தருளியுள்ளதனால் இத்தலம் காமத்தூர், காமக்கூர் எனப் பெயர் பெற்றது.

'திரிபுர சுந்தரி' என்னும் தேவி ஒரு கையில் பூச்செண்டும், ஒரு கையில் கரும்பும் கொண்டு காட்சி தருகின்றார். ஸ்ரீசக்கர பிரதிஷ்டையும் உள்ளது. இச் சந்நிதியில் துவார பாலகியாக ஒருவர் மட்டுமே உள்ளார். இதனைத் தட்டினால் பலவித ஒலிகள் வருகின்றன.

சந்திரன் பூசித்த சந்திரசேகர சுவாமிக்கு முன் 10 அடி உயரத்தில் அமைந்த துவாரபாலகர்கள் உள்ளனர். அம்மை - அமிர்தாம்பிகை.

கருவறைக்குப் பின் பக்கம் ஆறுமுகப் பெருமான் பன்னிரு திருக்கரங்களுடன் 3.5 அடி உயரத்துடன் மயில் மீது அமர்ந்த திருக்கோலத்தில் திருவாசியுடன் இருபுறமும் தேவியர் சூழ எழுந்தருளியுள்ளார். மயிலின் முகம் வடக்கு நோக்கியுள்ளது.

உற்சவர் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு தேவியருடன் வீற்றிருக்கின்றார்.

இங்கு எழுந்தருளியுள்ள ஆடல்வல்லான் இடக்காலை ஊன்றி வலக் காலை இடது காலை பின்னியவாறு தாண்டவமாடும் திருவுரு மிக அழகானது.

திருப்புகழில் ஒரு பாடல் உள்ளது.

## 37. காவளூர்

தஞ்சையிலிருந்து அசுரமாங்குடி சென்று அங்கிருந்து தெற்கே 1 கி.மீ. தஞ்சையிலிருந்து திருக்கருக்காவூர் செல்லும் பேருந்தில் நதியனூரில் இறங்கி கிழக்கே 1 கி.மீ., ஐயம்பேட்டையிலிருந்து 6 கி.மீ. தொலைவிலும் உள்ளது.

கட்டுமலை மேல் அமைந்த திருக்கோயில். 12 படிகள் ஏறிச் செல்ல வேண்டும். 12 ராசிகளை 12 படிகளாக அமைத்து இப்படிகளை ஏறி வழிபடுவோருக்கு ஒரு மகாமகம் கண்ட புண்ணியம் ஏற்படும் என்பது ஐதீகம்.

இங்கு முருகப் பெருமான் முத்துக்குமார சாமியாக வள்ளி, தேவசேனா தேவி சமேதரராக எழுந்தருளியுள்ளார். ஆறுமுகமும் பன்னிரு திருக்கரமும்




கொண்டு மயிலின் அருகில் நின்ற திருக்கோலம்.

உற்சவர் ஒரு திருமுகமும் இருதேவியரும் சூழக் காட்சி தருகின்றார். மூலவர் விமானம் அறுகோணத்தில் அமைந்துள்ளது சிறப்பாகும்.

குமார தீர்த்தமும், காவிரியும் இத்தலத்திற்குரிய தீர்த்தங்களாகும்.

இங்கு வெட்டாறு தெற்கிலிருந்து வடக்கு நோக்கி ஓடுவது சிறப்பு. தலமரம் கமுகு மரம். மாணிக்கவாசகரைப் போன்ற தோற்றப் பொலிவுடன் அருணகிரிநாதர் உத்திராக்கம் அணிந்து கூப்பிய கரங்களுடன் எழுந்தருளி யுள்ளார்.

திருப்புகழில் ஒரு பாடல் உள்ளது.

## 38. காளஹஸ்தி

திருப்பதியை அடுத்த தலம். ரேணுகுண்டாவிலிருந்து 24 கி.மீ. தூரத்தில் உள்ளது.

பஞ்சபூதத் தலங்களில் வாயுத் தலம். விராட புருஷனின் விசுத்தித் தலம். மேற்கு நோக்கிய சந்நிதி. 'தக்ஷிண கைலாயம்' என்பர்.

சிலந்தி (ஸ்ரீ), பாம்பு (காளம்), யானை (ஹஸ்தி) ஆகிய மூன்றும் பூசித்துப் பேறு பெற்றதால் இத்தலம் 'ஸ்ரீகாளகஸ்தி' எனப் பெயர் பெற்றது. யானையின் தந்தம் போன்ற அமைப்பை உடையவர் சிவலிங்கப் பெரு மான்.

மலைமீது எழுந்தருளிய சிவபெருமான் குடுமி தேவர் -கண்ணப்ப நாயனார் கண் எடுத்து அப்பிய பெருமான் ஆவார்.

திருக்கோவிலின் நுழைவாயிலில் 5 அடி உயரம் கொண்ட முருகப் பெருமான் இரு தேவியருடன் எழுந்தருளியுள்ளார். இவருக்குப் பூசை இல்லை.

'செங்கல்வராயன்' என்ற பெயர் கொண்டு எழுந்தருளியுள்ள முருகப் பெருமான் ஆறு திருமுகங்களும் பன்னிரு திருக்கரங்களும் கொண்டு தேவியர் இருவர் அருகில் விளங்க மேற்கு நோக்கி எழுந்தருளியுள்ளார்.

மூன்று திருப்புகழ் பாடல்கள் கொண்ட தலம்.

## 39. கீரனூர்

மாயூரம் - திருவாரூர் பேருந்து வழித்தடத்தில் அமைந்த தலம். திருப்பறியலூருக்கு வடமேற்கே 5 கி.மீ.யில் அமைந்துள்ளது.

சிவலோகநாத சுவாமி திருக்கோவிலின் முதல் பிரகாரத்தில் முருகப் பெருமான் சந்நிதி உள்ளது. இவர் ஒரு திருமுகமும், இரு திருக்கைகளும் கொண்டு வள்ளி தெய்வயானை சமேதரராகக் கிழக்கு நோக்கி நின்ற

கோலத்தில் காட்சி தருகின்றார். உற்சவரும் மூலவரைப் போன்று காட்சி தருகின்றார்.

சோழ மன்னன் ஒருவன் உலா வரும் போது அவன் குதிரையின் காலில் இரத்தம் இருக்கக் கண்டு கீழே இறங்கிப் பார்த்தான். அங்குப் பூமியில் ஓரிடத்தில் இரத்தம் பெருகக் கண்டு வியப்புற்றான். அங்கு வந்த பசு ஒன்று அவ்விடத்தில் பாலினைச் சொறிய இரத்தம் பெருகுவது நின்றது. பசுவும் ஈசனை வழிபட்டது. பசுவாக வந்தது அன்னை பார்வதி தேவியே. அவ்விடத்தில் சிவலோகநாதராகப் பெருமான் காட்சி தந்தார். இறைவி பாலாம்பாள்.

தக்கன் வேள்வியில் கலந்து கொண்டதற்காகச் சிவபெருமான் சாபத்தினால் கிளி வடிவான அக்னி தேவன் பல தலங்களை வழிபட்டும் சாப விமோசனம் பெறாமல் பின் இத்தலம் வந்து வணங்கி சாபவிமோசனம் பெற்றார்.

சித்ரா பௌர்ணமி சிறப்புடையது. திருப்புகழில் ஒரு பாடல் இத்தலத்திற் குரியது.

## 40. கீரிமலை - அருக்கொணாமலை

இலங்கையைச் சேர்ந்த யாழ்ப்பாணம் மாவட்டத்தில் காங்கேசன் துறையிலிருந்து 5 கி.மீ.

ஜமதக்கினி (நகுல முனிவர்) வழிபட்டு சாபம் நீங்கப் பெற்றதால் 'நகுலேஸ்வரம்' எனவும் 'கீரிமலை' எனவும் பெயர் பெற்றது.

சிங்களத்தின் முதல் மன்னனாக விஜயன் கட்டுவித்த திருத்தம்பலேசுவரர் திருக்கோவிலில் கந்தபெருமான் ஒரு திருமுகத்துடன் வள்ளி, தெய்வயானை சமேதரராக எழுந்தருளியுள்ளார். உற்சவர் ஆறுமுகப் பெருமான்.

ஆடி அமாவாசை தீர்த்தவாரியும், கந்த சஷ்டி, திருக்கார்த்திகைத் திருநாட்களும் சிறப்பாகக் கொண்டாடப்படுகின்றன.

திருப்புகழில் ஒரு பாடல் உள்ளது.

## 41. கீழப்பழூர்

அரியலூரிலிருந்து திருச்சி, தஞ்சை செல்லும் வழியில் அமைந்த தலம். திருவையாறிலிருந்து 16 கி.மீ. தூரத்தில் உள்ளது. அம்பிகை தவம் செய்ததால், 'யோகபவனம்' என்ற பெயரும் உண்டு.

முருகப் பெருமான் ஒரு திருமுகமும், நான்கு திருக்கரங்களும் கொண்டு வள்ளி தேவசேனாதேவி சமேதரராகக் கிழக்கு நோக்கி நின்ற திருக்கோலத்தில் எழுந்தருளியுள்ளார். உற்சவர் மயில் மீது எழுந்தருளியுள்ளார்.

ஆலமரம் (பழு) தலமரம். எனவே இத்தலம் பழுவூர் எனப் பெயர்

பெற்றது. பழுவேட்டரையர் ஊரானதால் 'பழுவூர்' என்றாயிற்று என்பர். இத்தலச் சிவபெருமான்: ஆலந்துறையார், வடமூலநாதர். இறைவி: அருந் தவ நாயகி, மஹாதபஸ்வினி.

பரசுராமர் வழிபட்டுத் தன் தாயைக் கொன்ற பாவம் நீங்கப் பெற்றார். பரசுராமர் தீர்த்தம் உள்ளது.

கந்த சஷ்டி, பங்குனி உத்தரம் சிறப்பு விழாக்களாகும். திருப்புகழில் ஒரு பாடல் உள்ளது.

## 41. குடவாசல்

கும்பகோணம் திருவாரூர் பேருந்து வழியில் கும்பகோணத்திலிருந்து 19 கி.மீ. திருவாரூரிலிருந்து 20.5 கி.மீ. தூரத்தில் உள்ளது. கோச்செங்கட் சோழனால் கட்டப்பட்ட மாடக் கோவில்களுள் ஒன்று.

பிரளயத்தின் போது அமுதகலசம் (குடம்) மிதந்து வர வேடன் வடிவெடுத்து வந்த சிவபிரான் வில்லால் அக்குடத்தை உடைத்தார். அக்குடத்தில் இருந்த மண் சிவலிங்கமாயிற்று. அதுவே கும்பகோணம். அவரே ஆதிகும்பேசுவரர். குடத்தின் வாயில் விழுந்த தலமே குடவாயில் என்னும் குடவாசல்.

கருடன் தன் தாயை விடுவிக்க வேண்டி அமிர்தத்தைக் கொண்டு வந்து இத்தலத்தில் வைத்து விட்டு அசுரரை வென்று திரும்பும் போது மீண்டும் அமிர்தத்தை எடுத்துச் சென்றார். எனவே இத்தலத்தை 'அமிர்தக்ஷேத்திரம்' என்றும் கூறுவர். மேற்கு நோக்கிய திருக்கோவில்.

திருணபிந்து முனிவர் பூஜிக்க இறைவன் திருக்குடத்திலிருந்து வெளிப் பட்டு முனிவர் நோயினை நீக்கியருளிய தலம். அனுமன் வழிபட்ட தலம். அவர் திருவுருவங்கள் இங்குள்ளன.

இங்கு முருகப் பெருமான் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் உடையவராய் வேழ, வேட மங்கையருடன் மயிலருகே நின்ற திருக் கோலத்தில் கிழக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார். உற்சவரும் தேவியருடன் காட்சி தருகின்றார். சிவபெருமான்: கோணேசுரர், இறைவி: பெரியநாயகி. தீர்த்தம்: அமிர்த, சந்திர, பிரம்ம, அக்னி, சூரிய தீர்த்தங்கள். தல மரம்: பலா. திருப்புகழில் இரு பாடல்கள் உள்ளன.

## 43. குற்றாலம் - திருத்துருத்தி

மாயூரம் - கும்பகோணம் வழித்தடத்தில் அமைந்த தலம். மாயூரத்தில் இருந்து 9 கி.மீ. தூரத்தில் உள்ளது.

ஆற்றிடைக்குறையில் அமைந்த இடம் துருத்தி எனப்படும். அவ்வாறு இத்தலம் அமைந்த தினால் 'துருத்தி' எனவும், தலமரம் உத்தாலமரம் என்பதனால் 'குற்றாலம்' எனவும் பெயர் பெற்றது.

இத்தலத்தில் ஆறுமுகப் பெருமான் ஆறுமுகங்களும் பன்னிரு திருக்கரங்களும் கொண்டு வடக்கு நோக்கிய மயிலின் மீது இடதுகாலை மடக்கி வலது காலை தொங்கவிட்ட நிலையில் இருபுறமும் தேவியருடன் காட்சி தருகிறார்.

இத்தலச் சிவபெருமான்: உத்தவேதீச்சுவரர் (சொன்னவாறறிவார்), இறைவி: அமிர்தமுகிளாம்பிகை (அரும்பன்ன வனமுலையாள்) தீர்த்தம்: காவிரி, சுந்தர தீர்த்தம். திருப்புகழில் ஒரு பாடல் உள்ளது. கார்த்திகை, கந்த சஷ்டி விழாக்கள் சிறப்பானவை.

இத்தலத்தில் விக்கிரம சோழீஸ்வரர், ஓங்காரேஸ்வரம், சொன்னவாறறிவார் கோயில் என மூன்று சிவாலயங்கள் உள்ளன.

## 44. கும்பகோணம்

தஞ்சை மாவட்டத்தின் முக்கிய ஊர். இத்தலம் 'திருக்குட மூக்கு' என்றும் அழைக்கப்படும். காஞ்சியை அடுத்து கோயில்கள் நிறைந்த தலம்.

பிரளயத்தின் போது சிருஷ்டி பீடம் ஒரு குடத்தில் மிதந்து வர சிவபெருமான் வில் கொண்டு குடத்தை அடிக்க குடத்தின் மண் விழுந்து லிங்கமாயிற்று. இவரே ஆதிகும்பேஸ்வரர். குடத்தின் மூக்கு உடைந்த இடம் 'குடமூக்கு' என்றாயிற்று.

அமுத கும்பம் வந்து தங்கியதனால் கும்பேசம் என்னும் பெயர் பெற்றது. சிவபெருமான் கும்பேஸ்வரர் ஆகி தம்மைத் தாமே பூசித்தார். மணலும் அமுதமும் கலந்து உருவான திருமேனி. எனவே அபிஷேகம் கிடையாது. இறைவி: மங்களாம்பிகை. 64 சக்தி பீடங்களுள் ஒன்று. தலமரம்: வன்னி. ஏமரிஷி பூசித்த தலம். பன்னிரண்டு வருடங்கட்கு ஒரு முறை மாசி மகத்தின் போது காசி, கங்கை முதலிய புண்ணிய நதிகள் இங்குள்ள தீர்த்தத்தில் சேரும் என ஐதீகம். அப்போது மகாமக விழா நடைபெறுகின்றது.

கும்பேஸ்வரருக்குப் பின்புறம் முருகப் பெருமான் 'கார்த்திகேயன்' என்ற திருநாமத்துடன் எழுந்தருளியுள்ளார். ஆறு திருமுகங்களும் ஆறு திருக்கரங்களும் கொண்டு மயிலின் முன்னே தேவியர் இருபுறமும் இலங்க எழுந்தருளியுள்ளார். இரு உற்சவ மூர்த்திகள் உள்ளனர்.

கோவிலின் வெளிப்பிரகாரத்தில் தண்டபாணி சுவாமி தனிச்சந்நிதி உள்ளது. இம்மூர்த்தி தெய்வீகப் பொலிவுடன் காட்சி தருகின்றார். நடராஜப் பெருமானின் வலப்புறம் சோமசுந்தரர் சந்நிதி உள்ளது.

குடந்தைக் கீழ்க்கோட்டம் - ஸ்ரீநாகேஸ்வர சுவாமி கோவிலின் உட்பிரகாரத்தில் ஆறுமுகப் பெருமான் சந்நிதி உள்ளது.



திருப்புகழில் ஏழு பாடல்கள் உள்ளன. கந்த சஷ்டி, திருக்கார்த்திகை, பங்குனி உத்திரம் சிறப்பான விழாக்களாகும்.

ஆறு திருமுகமும் ஆறு திருக்கரங்களும் கொண்டு விளங்கும் முருகப் பெருமான் தமிழகத்தில் குடந்தையில் மட்டுமே காட்சி தருகிறார்.

## 45. கும்பகோணம் - சோமேஸ்வரர் திருக்கோவில்

மகாமகக் குளக்கரையில் அமைந்துள்ளது. இதனைக் குடந்தைக் காரோணம் என்பர். ஆறுமுகப் பெருமான் முன்புறம் ஐந்து திருமுகங்களும் பின்பக்கம் ஒரு முகமும், பன்னிரு திருக்கரங்களுடனும் மயில் மீது அமர்ந்த திருக்கோலத்தில் வேழமங்கை, வேடமங்கை இருவருடனும் கிழக்கு நோக்கி அருள்பாலிக்கின்றார். கந்தபெருமானின் திருப்பாதங்களில் காலணிகள் சிறப்பாக உள்ளன.

உற்சவர் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களுடனும் தேவியர் இருவருடன் எழுந்தருளியுள்ளார். இங்குள்ள சோமாஸ்கந்தர் திருமேனி அழகானது.

இங்குள்ள சிவபெருமான் வியாழச் சோமேசரர், சிக்கேசர். அ · · கும்பம் இருந்த சிக்கம் (உறி) இங்கு விழுந்து இலிங்கமாயிற்று. எலசே· இறைவன் சிக்கேசர் எனப் பெயர் பெற்றார். தேவி: தேனார்மொழியம்மை, சோமசுந்தரி.

உமையவள், மாந்தாதா, நவநதிகள், நவகன்னியர் பூசித்த தலம்.

திருப்புகழில் ஒரு பாடல் உள்ளது.

## 46. குளித்தலை - கடம்பந்துறை

திருச்சி - கரூர் பேருந்து வழித்தடத்தில் திருச்சியிலிருந்து 32 கி.மீ. தூரத்தில் உள்ளது. கடம்பம், கடம்பத்துறை, கடம்பவனம் என்ற பெயர்கள் தலமரமான கடம்ப மரத்தால் ஏற்பட்டது.

இத்தலச் சிவபெருமான்: கடம்பவன நாதேசுவர். கடம்ப மரத்தடியில் கண்ணுவ முனிவருக்கும், தேவர்களுக்கும் காட்சி கொடுத்தார். இறைவி: முற்றிலா முலையம்மை. தீர்த்தம்: காவிரி, அக்னி தீர்த்தம்.

கருவறையில் சிவபெருமானுக்குப் பின்புறம் சப்தகன்னியர் விளங்குகின்றனர்.

காலைக்கடம்பர், மதியச் சொக்கர், அந்தி திருஈங்கோய்நாதர் என ஒரே நாளில் மூவரையும் வணங்குவது சிறப்பாகும்.

இங்குள்ள முருகப் பெருமான் ஆறுதிருமுகமும் பன்னிரு திருக் கரங்களும் கொண்டு தேவியர் இருவருடன் கிழக்கு நோக்கி நின்ற கோலத்தில் எழுந்தருளியுள்ளார். உற்சவர் ஒரு திருமுகத்துடன் மயில் மீதமர்ந்து காட்சி தருகின்றார். மாதக் கார்த்திகை, சஷ்டி சிறப்பு.

கந்த சஷ்டி, மாசி மகம், தைப்பூசம் பெருவிழாக்களாகக் கொண்டாடப் பெறுகின்றது. திருப்புகழில் ஒரு பாடல் உள்ளது.



## 47. குன்றக்குடி

காரைக்குடிக்கு மேற்கே 11 கி.மீ. தூரத்தில் உள்ளது. மயில் போன்ற தோற்றமுடைய மலை மீது அமைந்த கோயில். மயில் குன்று வடிவில் இருந்து வழிபட்ட தலம்.

மலையடிவாரத்தில் உள்ள புஷ்கரணியில் நீராடி நர்த்தன விநாயகர், இடும்பனைத் தரிசித்து மலைமேல் ஏறிச் செல்ல வேண்டும்.

மலைக்கோவில், கீழ்க்கோவில் என இரு கோவில்கள் உள்ளன. கீழ்க்கோவிலில் அகத்தியர் வழிபட்ட சுயம்புலிங்கமான தேனாற்றுநாதர், அழகம்மை, அகத்தியர் சந்நிதிகள் உள்ளன. இங்கு மலையைக் குடைந்து ஐந்து லிங்கங்கள் உருவாக்கப்பட்டுள்ளன.

மலைக்கோவில் மலையைக் குடைந்து அமைக்கப்பட்டுள்ளது. 144 படிகள் ஏறி மலைக்கோயிலை அடைய வேண்டும்.



இங்கு முருகப் பெருமான் 6 அடி உயரத்தில் முன்னும் பின்னுமாக அமைந்த ஆறு திருமுகங்களுடன் 12 திருக் கரங்களுடன் மயில் மீது அமர்ந்த கோலத்தில் எழுந் தருளியுள்ளார். வள்ளி, தெய்வயானை இருவரும் தனித்தனியே மயில் மீது சண்முகரின் இருபுறமும் எழுந்தருளியுள்ளனர். மூவ ரும் தனித்தனியே மயில் மீது காட்சி தருகின்றனர். இது போன்ற காட்சி திருச்சி மாவட்டம் திண்ணியம் திருக்கோவிலிலும் காண லாம்.

திருமால், நான்முகன், இந்தி ரன், சூரியன், காமன், கரு டன், வசிட்டர், நாரதர், பாண்டவர் ஆகியோர் இங்கு முருகனை வழிபட்ட னர்.

மலையின் மேற்குப் பகுதி யில் பஞ்ச பாண்டவர் பாறைப் படுக்கைகள் உள்ளன. குன்று ஏறும் வழியில் இடும்பன் சந்நிதி யைத் தாண்டினால் சித்திர வேலைப்பாடுகளுடன் கூடிய நர்த்தன விநாயக ரைக் காணலாம்.

பால் காவடி, சந்தனக் காவடி, புஷ்பக் காவடி, சர்ப்பக் காவடி எனப் பலவகைக் காவடிகள் இங்கு எடுப்பது கண்கொள்ளாக் காட்சியாகும். பால் காவடியும் சர்ப்பக் காவடியும் இத்தலச் சிறப்பு. நினைத்த காரியம் கை கூட இங்குக் காவடி எடுக்க வேண்டும்.

முருகப் பெருமான் திருக்கை வேலினால் உருவாக்கப்பட்ட சரவணப் பொய்கை இங்கு உள்ளது. மலைப்படிக்கருகில் தோகையடி விநாயகர் காட்சி தருகிறார்.

மாதக்கார்த்திகை, புத்தாண்டு நாளன்றும், மலை தீப வழிபாடும் சிறப்பானது. திருப்புகழில் ஏழு பாடல்கள் பெற்ற தலம். குன்றுதோறாடும் தலங்களில் இத்தலமும் ஒன்றாகும். (குன்றத்தூருக்கு உரிய பாடல்கள் என்பாரும் உண்டு).

## 48. கூடலையாற்றூர்

விருத்தாசலத்திலிருந்து புவனகிரி (சிதம்பரம் செல்லும் வழியில் 22 கி.மீ. தூரத்தில் உள்ளது. மணிமுத்தா நதியும் நிவா நதியும் (வெள்ளாறும்) கூடுமிடத்தில் அமைந்த தலம். எனவே கூடலையாற்றூர் எனப் பெயர் பெற்றது. இதனைத் 'தட்சணப் பிரயாகை' என்பர்.

ஆறுமுகப் பெருமான் பன்னிரு திருக்கைகள் கொண்டு வள்ளி, தேவயானையுடன் மயில் மீது கிழக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார்.

சிவபெருமான்: நெறிக்காட்டு நாயகர், இறைவி: புரிகுழலாம்பிகை. தீர்த்தம்: மணிமுத்தாநதி, நிவாநதி. தலமரம்: கல்லால மரம். சுந்தரமூர்த்தி நாயனாரை அழைத்துப் பாடும்படி இத்தல இறைவன் அழைத்த தலம். பிரம்மாவுக்காக இத்தல இறைவன் நர்த்தனம் புரிந்தமையினால் நர்த்தன வல்லபேசுவரர் என்ற திருநாமம் பெற்றவர்.

மாதக் கார்த்திகை நாட்களும், கந்தர் சஷ்டி, மாசி மகம் சிறப்பான விழாக்களாகும்.

விபூதி அலங்காரமும் சந்தனக் காப்பும் முருகனுக்குச் சிறப்பு. திருப்புகழில் ஒரு பாடல் இத்தலத்திற்குரியது.

அருகே ஸ்ரீமுஷ்ணம் என்ற வைணவத் தலமும், அருகே முருகன் கோவிலும் உள்ளது.

## 49. கூந்தலூர்

கும்பகோணத்திற்குக் கிழக்கே 10 கி.மீ.யில் உள்ளது. இத்தலத்தை நரி வழிப்பட்டதனால் கம்பு (நரி) காரணியம் என்பர்.

ரோமரிஷி என்பவர் இத்தலத்தில் தவம் இருந்த சிவபெருமான் அருள் பெற்றார். தன் தாடி வழியே பொன் வரவழைத்து அனைவருக்கும் கொடுத்து வந்தார். ஒரு சமயம் தாடி வழியே பொன் வருவது நின்று விட்டது.

உடனே தாடியை நீக்கிவிட்டு இறைவனை வழிபட நீராடாமல் திருக்கோவிலை அடைந்தார். விநாயகரும் முருகப் பெருமானும் விரைந்து வந்து

அவரை உள்ளே வர விடாமல் தடுத்தனர். இதைக் கண்டு ரோமரிஷி வருந்தினார். பக்தரின் துன்பத்தைக் கண்ட சிவபெருமான் முனிவருக்குப் புறத்தூய்மையைவிட அகத்தூய்மையே இன்றியமையாதது எனக் காட்ட அவருக்கு அருள் புரிந்தார்.

கூந்தல் (ரோமம்) பற்றிய நிகழ்ச்சி நடந்த தலமாதலால் இத்தலம் கூந்தலூர் எனப் பெயர் பெற்றது. இறைவன்: ஜம்புகாரணீசுவரர். இறைவி: ஆனந்தவல்லி, தீர்த்தம்: குளம், சீதா தீர்த்தங்கள். தலமரம்: பன்னீர்மரம்.

முனிவரைத் தடுக்க வந்ததால் முருகப் பெருமான் சந்நிதி கோயிலின் முன்புறமே அமைந்துள்ளது. முருகப் பெருமான் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு இரு தேவியருடன் மயிலின் அருகில் நின்ற திருக்கோலத்தில் எழுந்தருளியுள்ளார். மயிலின் முகம் வலப்பக்கம் உள் ளது. சூரசம்ஹாரத்திற்கு முன்பே முருகனுக்கு உள்ள மயில் இது என்பர்.

உற்சவரும் ஒரு முகம் நான்கு திருக்கரங்களுடன் இரு தேவியர் சூழ ஒரு கால் மயில் மீது விளங்கக் காட்சி தருகிறார்.

திருப்புகழில் ஒரு பாடல் உள்ளது.

## 50. கொடுமுடி - திருப்பாண்டிக் கொடுமுடி

ஈரோட்டிற்குத் தென்கிழக்கே 37 கி.மீ. தொலைவில் உள்ளது. இதனைத் திருப்பாண்டிக்கொடுமுடி என்பர். ஈரோடு, திருச்சி புகைவண்டிப் பாதை யில் கொடுமுடி புகைவண்டி நிலையம் உள்ளது.

முருகப் பெருமான் ஆறு திருமுகங்களும் பன்னிரு திருக்கரங்களும் விளங்க இடப்பக்கம் தலையுடைய மயில் மீது அமர்ந்து கிழக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார். தேவியர் இருவர் அருகே எழுந்தருளியுள்ளனர்.

உற்சவரும் மூலவர் போன்றே எழுந்தருளியுள்ளார்.

இத்தலம் மும்மூர்த்தி தலமாகும். மூவருக்கும் தனித்தனியே இராஜ கோபுரங்கள் உள்ளன. திருமால், பிரம்மா, அனுமன், சனி பகவான் எழுந்தருளியுள்ளனர்.

இங்கு எழுந்தருளியுள்ள சிவபெருமான் கொடுமுடிநாதர் (மகுடேஸ் வரர்) சுயம்பு லிங்கம். இறைவி: வடிவுடைநாயகி (பண்மொழி நாயகி). இங்கு இறைவனும் இறைவியும் திருமணக் கோலத்தில் எழுந்தருளியுள்ள தாக ஐதீகம். தீர்த்தம்: காவிரி, தேவதீர்த்தம். தலமரம்: வன்னி. சுவாமியைப் பார்த்து வலப்புறம் சூரியனும் இடப்புறம் சந்திரனும் உள்ளனர். இறைவ னின் இரு கண்களாக இருவரும் திகழ்கின்றனர் என்பதே ஐதீகம். தலமரத்தின் கீழ் பிரம்மா காட்சி தருகின்றார்.



சித்திரை மாதம் தேர்த்திருவிழா. கந்தர் சஷ்டி, கார்த்திகை தீபம், விநாயக சதுர்த்தி, மார்க்கழித் திருவிழா, பதினெட்டாம் பெருக்கு சிறப்புடையது.



இரு பாடல்கள் திருப்புகழில் உள்ளன.

## 51. கொடும்பு - கொடும்பை

பாலக்காட்டிலிருந்து சித்தூர் செல்லும் வழியில் 5 கி.மீ. இல் உள்ளது. தமிழ்நாட்டு அமைப்பினைக் கொண்ட திருக்கோயில். இதற்குப் பாலபுரம் என்ற பெயரும் உண்டு.

இங்கு எழுந்தருளியுள்ள முருகப் பெருமான் கல்யாண சுப்பிரமணியர் என்ற திருநாமம் கொண்டவர்

காஞ்சியைச் சார்ந்த செங்குந்த முதலியார்கள் மாட்டின் மீது நூல் பொதி ஏற்றி இத்தலம் அருகே வந்த போது, ''நானும் வருகிறேன், அழைத்துச் செல்லுங்கள்'' என்ற அசரீரி கேட்டது. குரல் வந்த திசையில் ஒரு சிறு கல் இருக்க அதனையும் மாட்டின் மீது கட்டி எடுத்து வந்தனர். இத்தலம் வந்ததும் மாடு ஒரு குறிப்பிட்ட இடத்தில் படுத்து விட்டது. அங்கேயே அக்கல்லை பிரதிஷ்டை செய்து வேலையும் பிரதிஷ்டை செய்தனர். அந்தக் கல் மூலமூர்த்தியின் பீடத்தின் அடியில் வைக்கப்பட்டுள்ளது.

மந்திரவாதி ஒருவன் பிற பகவதிகளைத் தம் ஏவலுக்குப் பயன்படுத்தியது போல இம் முருகனையும் பயன்படுத்த எண்ண முருகப் பெருமான் அவனைச் சம்ஹாரம் செய்ததாக வரலாறு.

''பழனியில் பாதி கொடும்பு'' என்பது இத்தல வழக்கு.

'திருகுபொறி சிகண்டிக் குதிரை விடும் செட்டித் திறவர் கொடும்பு' என அருணகிரிநாதரால் பாடப் பெற்ற தலம்.

## 52. கொட்டையூர் - கொட்டை நகர்

கும்பகோணத்திலிருந்து சுவாமிமலை செல்லும் வழியில் 3 கி.மீ. தொலைவில் உள்ளது.

ஆமணக்குச் செடியினைத் தலமரமாகக் கொண்ட தலம். ஆமணக்கை கொட்டைச் செடி என்பர். இதை அடிப்படையாகக் கொண்டே இத்தலம் ''கொட்டையூர்'' எனப் பெயர் பெற்றது. ஹேரண்ட முனிவர் வழிபட்டதனால் 'ஹேரண்டபுரம்' எனப்படும்.

திருக்கோவிலின் நுழைவாயிலில் தண்டாயுதபாணி சந்நிதி உள்ளது. உட்பிரகாரத்தில் உள்ள முருகர் கோடி சுப்பிரமணியர் என்ற திருநாமம் கொண்டவர். இவர் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு மயிலின் அருகே தேவியர் இருவருடன் கிழக்கு நோக்கி நின்ற கோலத்தில் காட்சி தருகின்றார்.

இத்திருக்கோவில் கோடீச்சுவரம், சிவபெருமான் கோடீசுவரர், கோடி லிங்கம். இறைவி: பந்தாடு நாயகி. இங்குக் கோடி விநாயகர், கோடி முருகன், கோடி சண்டேசர், என 'கோடி' என்ற சிறப்புப் பெயர் பெற்றுள்ளன.

இத்தலத்தில் ஹேரண்ட முனிவருக்குச் சிவபெருமான் கோடியுருவமாகக் காட்சியளித்தார். எனவே இத்துணைச் சிறப்பு பெற்ற இத்தலத்தினை வழிபட்டால் கோடித் தலங்களை வணங்கிய பலன் கிட்டும்.

இத்தல இறைவியின் தோற்றம் பெயருக்கேற்ப பந்தாடும் தோற்றத்தில் ஒரு கால் கொஞ்சம் முன்னும் மற்றொரு கால் கொஞ்சம் பின்னுமாக அமைந்துள்ளது. இராமர், பத்திரயோகி, மார்க்கண்டேயர், ஆத்திரேயர்,

வழிபட்ட தலம். அஷ்டபுஜ துர்க்கையும், சதுர்புஜ துர்க்கையும், நவக்கிரகங்கள் தம் வாகனங்களுடன் எழுந்தருளியிருப்பதும் சிறப்பாகும்.

இங்கு மாதக் கார்த்திகை, சஷ்டி சிறப்பு. கந்த சஷ்டி, திருக்கார்த்திகை, பங்குனி உத்திரம் சிறப்பான விழாக்களாகும்.

திருப்புகழில் ஒரு பாடல் உள்ளது.

## 53. கொண்டல் - சூரியவனநகர்

சீர்காழிக்கு மேற்கே 5.5 கி.மீ. தூரத்தில் உள்ளது. 'சூரியவன நகர்' என்ற பெயரும் இத்தலத்திற்குரியதாகும். அழகிய சிறு கோயில்.

இத்தல முருகப் பெருமான் தனிக்கோயிலில் ''குமார சுப்பிரமணியராக'' எழுந்தருளியுள்ளார். இவர் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு தேவியர் இருவருடன் கிழக்கு நோக்கி நின்ற திருக்கோலத்தில் எழுந்தருளியுள்ளார். மயில் முருகப் பெருமானின் பின்புறம் முகம் தெற்கு நோக்குமாறு உள்ளது. உற்சவர் மூலவர் போன்ற திருக்கோலத்தில் எழுந்தருளியுள்ளார்.

தன்னை மதிக்காத பிரமனை அழைத்து பிரணவப் பொருள் கேட்க விடை அளிக்காத பிரமனைச் சிறையில் அடைத்தார் குமரப் பெருமான். தேவர்கள் சிவபெருமானிடம் முறையிட, சிவபெருமானும் திருமாலும் கந்த பெருமானிடம் வந்து பிரமனை விடுவிக்கக் கோரிய தலம் இது.

தீர்த்தம்: திருக்குளம், கழுமலநதி. தலமரம்: பலா. இடும்பன் சந்நிதி தென்மேற்கு மூலையில் உள்ளது. இது சிறப்பாகும். இவருக்கு உற்சவரும் உண்டு.

சஷ்டி, கிருத்திகை சிறப்பு. கந்த சஷ்டி, கார்த்திகை விழா, தைப்பூசம், சித்ரா பௌர்ணமி விழாக்கள் சிறப்பாகக் கொண்டாடப்படுகின்றன.

திருப்புகழில் ஒரு பாடல் இத்தலத்திற்குரியது. தணிகைமணி வ.சு.செங்கல்வராய பிள்ளை அவர்கள் திருப்புகழில் வரும் 'கரிய வள நகர்' இத்தலமே என்பர்.

## 54. கொரட்டி - குரட்டி

திருப்பத்தூரிலிருந்து ஊத்தங்கரை செல்லும் வழியில் 8 கி.மீ. தொலைவில் உள்ளது.

கருவறையில் முருகப் பெருமான் ஆறு திருமுகங்களும் பன்னிரு திருக்கரங்களும் கொண்டு மயில் மீது அமர்ந்த திருக்கோலத்தில் தேவியர் இருவர் இருபுறமும் விளங்கக் காட்சி தருகிறார்.

இங்கு எழுந்தருளிய சிவபெருமான்: காளத்தீசுவரர், இறைவி: ஞானப் பூங்கோதை, தீர்த்தம்: ஐம்புநதி, தலமரம்: வில்வம்.

அருகில் பசலிக்குட்டை என்ற சுப்பிரமணியர் கோவில் உள்ளது. கொரட்டியில் பிரசன்ன வேங்கடரமண சுவாமி ஆலயம் உள்ளது. ஆடிக் கிருத்திகை, பங்குனி உத்திரம் சிறப்பான விழாக்கள். இத்தலத்தில் அலகு குத்தல், காவடி எடுத்தல் சிறப்பாகும்.

திருப்புகழில் இருபாடல்கள் உள்ளன.

## 55. கொல்லிமலை

நாமக்கல்லிலிருந்து 24 கி.மீ. தூரத்தில் அமைந்த தலம். இதனைப் 'பழனியப்பர் கோவில்' என்பர். கொல்லிமலைச் சாரலில் ஒரு குன்றின் மீது அமைந்துள்ளது.

இத்தலத்தில் ஆறுமுகப் பெருமான் பன்னிரு திருக்கரங்களுடன் தேவியர் இருவர் உடனிருக்க மயில் மீது அமர்ந்து தெற்கு நோக்கி எழுந்தருளியுள் ளார்.

இங்கு முருகப் பெருமான வேடுவக் கோலத்தில் தலையில் வேடன் கொண்டையும், வலக்கையில் தண்டும், இடக்கையில் கோழியும் விளங்கக் காட்சி தருகின்றார். இக்கோலத்திலேயே வள்ளியை மணம் செய்ய வந்ததாகவும் கூறுவர்.

கருவறையில் கந்த பெருமான் திருவாசியுடன் ஒரே கல்லில் உருவாக்கப் பட்டுள்ளார். ஒரு திருமுகமும் இரு திருக்கைகளுடன் வலக்கையில் படைக்கலனும் இடக்கை ஊரு முத்திரையுடனும் சேவல் கொடியுடனும் காட்சி தருகின்றார். கைகளில் கடகம், கால்களில் கழல், மார்பில் மாலை யுடன் தலையில் கொண்டையுடன் அழகு தவழக் காட்சி தருகின்றார்.

இங்குள்ள தீர்த்தச் சுனையிலுள்ள மீன்களுக்கு மூக்குக் குத்தி விட்டால் பிள்ளைப் பேறு கிட்டும் என்பது ஐதீகம். தலமரம்: பலா, இத்தலச் சிவபெருமான்: அறப்பளீசுரர். இறைவி: தாயம்மாள்.

ஆடிப்பெருக்கு, கார்த்திகை தீபம் சிறப்பான விழாக்களாகும். திருப் புகழில் இரு பாடல்கள் உள்ளன.

## 56. கோடிக்கரை - கோடிநகர்

தஞ்சை மாவட்டம் வேதாரண்யத்திற்குத் தெற்கே 10 கி.மீ. தொலைவில் உள்ளது.

தேவர்களும், அசுரர்களும் பாற்கடலைக் கடைந்து அமுதம் எடுத்தனர். அதில் நஞ்சும் தோன்றியது. நஞ்சைத் தாம் உண்டு அமுதத்தைத் தேவர்களி டம் கொடுத்தார் சிவபெருமான். தேவர்கள் அமுதத்தை உண்டு மீதியை வாயு தேவனிடம் கொடுத்தனர். வாயு தேவன் அதை எடுத்துச் செல்லும் வழியில் அசுரர்கள் அதைக் கைப்பற்ற முயல வாயுதேவன். ''முருகா''

என அழைத்து அமுதக் கலசத்தினைக் கீழே விட்டார். குமரப் பெருமான் அமுதக் கலசத்தினைத் தம் கையில் ஏந்திக் கொண்டார். இவர் 'அமிர்தகர சுப்பிரமணியர்' ஆவார்.

இங்குள்ள கோடிக் குழகர் கருவறையின் பின்புறம் முருகப் பெருமானின் திருச்சந்நிதி உள்ளது. முருகப் பெருமான் தன் இரு துணைவியருடன் எழுந்தருளியுள்ளார். மயில் மீது முருகப் பெருமான் சுகாசனத்தில் எழுந்தருளியுள்ளார்.



திருவாசி, மயில், முருகன் மூன்றும் ஒரே கல்லில் உருவானது. ஒரு திருமுகமும் ஆறு திருக்கரங்களும் கொண்டவர். இவர் வலக்கை இரண்டில் தாமரையும் சக்தியும் இருக்க, முன் வலக்கை அபய முத்திரையில் உள்ளது. இடக்கையில் வச்சிரம், நீலோற்பலமலர், அமுத கலசம் உள்ளது. இவருக்குக் 'குழகேசர்' என்ற பெயரும் உண்டு. அமுத கலச முருகப் பெருமானை வேறு எங்கும் காண முடியாது.

இத்தலம் கோளிலித் தலமாதலின் நவக்கிரகங்கள் வரிசையாக உள்ளன. நவகோடிக் கட்டம் சிறப்பு.

இங்குள்ள ஈசனின் திருநாமம் அமிர்தகடேசுவரர், இறைவி: மையார் தடங்கண்ணி (அஞ்சனாட்சி). காடுகிழாள் என்ற அம்பிகையும் உண்டு. கோயிலின் உள்ளே அமுத தீர்த்தம் (கிணறு) உள்ளது. இங்குள்ள ருத்ரகோடி தீர்த்தத்தில் - கடலில் ஆடி, தை அமாவாசைகள், மாசிமகம், அர்த்தோதய மகோதய காலங்களில் நீராடுவது சிறப்பாகும்.

முருகப் பெருமானுக்கு வைகாசி விசாகப் பெருவிழா பத்து நாட்கள் நடைபெறும். பங்குனிக் கார்த்திகை விழாவும் சிறப்பு. திருப்புகழில் ஒரு பாடல் உள்ளது.

## 57. கோயம்பேடு - கோசைநகர்

சென்னையிலிருந்து பூவிருந்தவல்லி செல்லும் வழியில் 14 கி.மீ. தூரத்தில் உள்ளது. இத்தலத்திற்குக் கோயம்பேட்டை, கோசை நகர் என்ற பெயர்களும் உண்டு.

முருகப் பெருமான் ஒரு திருமுகமும், நான்கு திருக்கரங்களும் கொண்டு இருபுறமும் தேவியர் சூழ மயிலின் முன்புறம் கிழக்கு நோக்கி நின்ற திருக்கோலத்தில் எழுந்தருளியுள்ளார்.

உற்சவப் பெருமான் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு இருபுறமும் தேவியர் விளங்க அமர்ந்த கோலத்தில் எழுந்தருளியுள்ளார். பாலசுப்பிரமணியர் ஜபமாலை, கிண்டியுடன் எழுந்தருளியுள்ளார். அற்புதக் கோலத்துடன் அதிகார நந்தி காணப்படுகின்றது.

இத்தலச் சிவபெருமான்: குசலவாபுரீசர். இறைவி: தருமசம்வர்த்தினி (அறம் வளர்த்த நாயகி). இத்தலத்தில் வால்மீகி, குசலவர் பூசித்தனர்.

திருப்புகழில் ஒரு பாடல் உள்ளது.

## 58. கோயில் பத்து - திலதைப்பதி

தஞ்சை மாவட்டம் பூந்தோட்டம் கிராமத்திற்கு வடமேற்கே, 1.5 கி.மீ. தூரத்தில் உள்ளது. இத்தலம் திலதைப்பதி, ஹரிக்ஷேத்திரம், மதிமுத்தம், செதலைப்பதி என்ற பெயர்களும் பெற்றது.

முருகப் பெருமான் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு இரு தேவியருடன் நின்ற திருக்கோலத்தில் கிழக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார்.

இராம லெட்சுமணர்கள் தங்கள் தந்தைக்கும் சடாயுவுக்கும் பிதிர்க்கடன் செய்த தலம். எள் (திலம்) கொண்டு பிதிர்க்கடன் செய்ததனால் 'திலதைப் பதி' என்றும், திருமால் சிவனை வழிபட்டதனால் 'ஹரிக்ஷேத்திரம்' எனவும் சந்திரன் சிவனை வழிபட்டதனால் 'மதிமுத்தம்' என்றும் வழங்கப்படுகின்றது.

திருப்புகழில் ஒரு பாடல் உண்டு.



# 59. சிக்கல்

நாகப்பட்டினத்திற்கு மேற்கே 4.8 கி.மீ. தூரத்தில் உள்ளது. இத்தலம் மல்லிகை வனம், வசிட்டாச்சிரமம், தேவசாந்நித்தியபுரம், கயாசரஸ் என்ற பெயர்களும் உடையது. இங்குச் சிவன் கோவிலும் திருமால் கோயிலும் ஒருங்கே அமைந்துள்ளது தனிச்சிறப்பாகும்.

கோச்செங்கோட்சோழன் எடுத்த 70 மாடக்கோவில்களில் ஒன்று. 12 படிகள் ஏறி திருக்கோவிலை அடைய வேண்டும்.



[illegible]

சிங்காரவேலன் என்னும் திருநாமம் பூண்டு இங்கு எழுந்தருளித் திருவருள் புரிகின்றார் முருகப் பெருமான். 3 அடி உயரத்தில் நல்ல கம்பீரமான தோற்றமுடையவர். வேலன் சூரபத்மனைச் சம்ஹாரம் செய்யப் புறப்பட்ட போது அம்பிகை தன் மைந்தனை ஆசீர்வதித்து வேல் கொடுத்த தலம். இதனாலேயே 'சிக்கலில் வேல் வாங்கிச் செந்தூரில் சங்காரம்' என்பர். இங்கு வேல் வாங்கும் விழா சஷ்டியின் முதல் நாளன்று நடைபெறும்.

முருகப் பெருமான் வேகமாகச் சென்று அன்னையிடம் வேல் பெறுவது கண்கொள்ளாக் காட்சியாகும். அப்போது வேகமாகச் செல்வதனால் முருகனின் திருமுகத்தில் வியர்வை ததும்பும் காட்சி ஓர் அற்புதக் காட்சியாகும். எனவே இவரை 'வியர்வை சிந்தும் வேலவர்' என அழைப்பர். இவ்வற்புதத்தினை இன்றும் காணலாம்.

முருகப் பெருமான் ஆறு திருமுகங்களும் பன்னிரு திருக்கரங்களும் கொண்டு வேடமங்கை, வேழமங்கையர்களுடன் மயில் மீது அமர்ந்த திருக்கோலத்தில் காட்சி தருகின்றார்.

வசிஷ்ட முனிவர் காமதேனுவின் பாலிலிருந்து வெண்ணெய் எடுத்து லிங்கம் செய்து வழிபட்டார். பின் லிங்கத்தைத் தனித்து எடுக்க முயல லிங்கம் கைகளில் சிக்காமல் போனதனால் இத்தலம் சிக்கல் எனப் பெயர் பெற்றது. இதனால் இத்தலச் சிவபெருமான் வெண்ணெய்பிரான் எனப்

பெயர் பெற்றார். இறைவி: வேல் நெடுங்கண்ணியம்மை. தீர்த்தம்: பாற் குளம். தலவிருட்சம்: மல்லிகை. திருமால் நவநீதேசுவரர் என்ற திருநாமத்துடன் எழுந்தருளியுள்ளார்.

சஷ்டி, கார்த்திகை நாட்கள் சிறப்பு. கந்த சஷ்டி, திருக்கார்த்திகை, சிறப்பு விழாக்களாகும். தங்க வாகனத்தில் சிங்காரவேலன் எழுந்தருளுவது காண வேண்டிய ஒன்றாகும். சிக்கல் சிங்காரவேலனைச் சிந்தை குளிர வாழ்த்தி வணங்கி வழிபட்டால் எல்லாக் காரியமும் வெற்றி பெறுவது திண்ணம்.

திருப்புகழில் இருபாடல்கள் உள்ளன.

அருகில் பொரவாச்சேரி கீழ் வேளூர் என்னும் முருகன் தலங்கள் உள்ளன.

## 60. சிதம்பரம் - தில்லை



''கோயில்'' என்றாலே சிதம்பரம் என்றே பொருள் தரும். இத்தலம் 67 திருப்புகழ்ப் பாடல் பெற்றது. கோபுரங்களில் எழுந்தருளியுள்ள முருகப் பெருமான் மீது பாடப் பெற்றதாகும்.

ஆடல் வல்லானின் சிறப்புத் தலமாகும். புருஷ வடிவமான உலகில் சிதம்பரமே இருதயம் ஆகும். உலகின் மையப்பகுதி இத்தலம் எனச் சாத்திரங்கள் கூறுகின்றன. பஞ்சபூதத் தலங்களில் இத்தலம் ஆகாயத்தலம். பஞ்ச சபைகளில் இது பொன்னம்பலம். தில்லைச் செடி தலவிருட்சமானதனால் 'தில்லை' எனப் பெயர் பெற்றது.

முருகப் பெருமானின் திருவுருவங்களை விளக்கும் 'குமார தந்திரம்' அத்திருவுருவங்களில் ஒன்றான கஜவாகனர் திருவுரு ஒரு திருமுகமும் இரு கண்களும் நான்கு திருக்கரங்களில் இடக்கை ஒன்றில் வரத முத்திரை யுடனும் மற்றொன்று கோழியுடனும் வலக்கை ஒன்றில் அபய முத்திரையுடனும்

மற்றொன்று சக்தியுடனும் விளங்குவதாகக் குறிப்பிடுகின்றது.

இங்குக் கீழ்க்கோபுரத்தில் வெளிப்புற வாயிலின் வலப்புறம் உள்ளடங்கிக் காணப் பெறும் கஜவாகனர் கோஷ்டிக்குப் பதில் வச்சிரம் கொண்டு காணப்படுகின்றார். இது அரிய படைப்பாகும்.

மேலக்கோபுர வாயிலில் சிற்ப சாஸ்திரம் கூறும் 'கிரௌஞ்ச பேதனர்' என்ற வடிவில் ஆறு திருமுகங்களும் பத்துத் திருக்கரங்களும் கொண்டு ஒரு கரத்தில் வேலினை ஏந்தி போர் செய்யும் வீரத்திருக்கோலத்தில் காட்சி தருகின்றார். அசுரர்களுடன் போரிடும் இக்காட்சி ஓர் அரிய காட்சியாகும்.



மேலக் கோபுரத்தில் வேலாயுதப் பெருமான் வேல் தாங்கி ஆறு திருமுகங்களும் பன்னிரு திருக்கரங்களும் கொண்டு மயில் மீது அமர்ந்து கிழக்கு நோக்கி காட்சி தருகின்றார். இது சூர்மா தடிந்த கோலமாகும். இதன் வலப்பக்கம் ஆறு திருமுகங்களில் மூன்று முகங்கள் மட்டுமே விளங்க 10 திருக்கரங்களுடன் போர்க்கலன்கள் தாங்கிய அரிய வடிவம் உள்ளது.

தெற்கு உள் கோபுரத்தில் உள்ள கார்த்திகேயர் ஒரு திருமுகம் கொண்டவர். முத்துக்குமாரசாமி இரு தேவியருடன் கிழக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார். வீரசுப்பிரமணியர் என்ற திருநாமமும் பெற்றவர். இவருக்கு உற்சவர் உள்ளார்.

பாண்டிய நாயகக் கோவிலில் வள்ளி தெய்வயானை சமேதரராக ஆறுதிருமுகங்களும் பன்னிரு திருக்கரங்களும் கொண்டு மயில மீது விளங்குகின்றார்.

வெளிப்பிரகாரத்தில் தூணில் தண்டாயுதபாணியாய் கௌபீனாதாரியாய் மயிலுடன் கையில் தண்டம் தாங்கிக் குமரனாகக் காட்சி தருகின்றார்.

## 61. சிவபுரம்

கும்பகோணத்திற்குத் தென் கிழக்கே 5 கி.மீ. தொலைவில் உள்ளது. 'சிவபுரம்' எனச் சிவபெருமான் திருநாமத்தினைக் கொண்டு அழைக்கப்படும் சிறப்பினைப் பெற்ற ஒரே தலம் இதுவேயாகும். மங்களபுரம் என்ற பெயருமுண்டு.

இத்தல ஆடல்வல்லான் மிக அழகிய திருவுரு. இவர் திருவுரு வெளிநாட்டிற்குக் கடத்தப்பட்டதும், பெரும் வழக்குகளுக்குப் பின் மீண்டும் கிடைத்ததும் உலகப் புகழ் பெற்ற செய்தியாகும்.

இங்கு முருகப் பெருமான் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு மயிலுடன் நின்ற திருக்கோலத்தில் இருதேவியருடன் எழுந்தருளியுள்ளார். இங்குத் தேவியர் இருவர் காலணிகளுடன் விளங்குவது மிகவும் சிறப்பானதாகும்.

இத்தலச் சிவபிரான் சிவபுரநாதர், பிரமபுரிநாதர், பெரியபுரீசர் என்ற திருப்பெயர்களால் அழைக்கப்படுகின்றார். இறைவி: சிங்காரவல்லி, பெரியநாயகி. தீர்த்தம்; சூர்ய, சந்திர தீர்த்தம். தலமரம்: சண்பகமரம்.

கார்த்திகைச் சோமவாரத்தில் சந்திர புஷ்கரணியில் தீர்த்தமாடுவது சிறப்பு. திருப்புகழில் ஒரு பாடல் உள்ளது. இத்தலத்தில் திருமால் சுவேத வராஹமாய் வழிபட்டார். குபேரன் வழிபட்ட தலம்.

## 62. சிவபுரி - திருநெல்வாயில்

சிதம்பரத்திற்குத் தென் கிழக்கே 5 கி.மீ. தூரத்தில் உள்ளது. இதற்கு நெல்வயல் என்ற பெயரும் உண்டு.

இத்தல முருகப் பெருமான் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு வள்ளி, தெய்வயானை உடனிருக்க எழுந்தருளியுள்ளார்.

இத்தலச் சிவபிரான் உச்சிநாதேசுவரர்; இறைவி: கனகாம்பிகை. லிங்கத்தின் பின்னே சிவபெருமான் உமையம்மையுடன் காட்சி தருகிறார்.

திருக்கழிப்பாலை திருக்கோவில் வெள்ளத்தினால் பாதிக்கப்பட்டமை யினால் அத்தலப் பெருமான் பால்வண்ணரும் வேதநாயகியும் இங்கு ஒரு புதிய கோவிலில் எழுந்தருளியுள்ளனர்.

திருப்புகழில் ஒரு பாடல் உள்ளது.

## 63. சிவன்மலை - பட்டாலியூர்

காங்கேயத்திலிருந்து திருப்பூர் செல்லும் வழியில் 4.8 கி.மீ.யில் உள்ளது.

இத்தலத்தினைச் சிவமலை, சேய்மலை, சேமலை என்றும் அழைப்பர். பட்டாலியூர் என்ற கிராமத்தில் உள்ளது. இங்கு மலைவலம் வருதல் சிறப்பு.

மலைவலம் வரும் பாதி வழியில் பரமேஸ்வரன் திருக்கோவில் உள்ளது. அனுமார் சிவனை வழிபட்டதனால் அவருக்கும் தனிச் சந்நிதி உள்ளது. இதனால் இதனை அனுமன் கோவில் என்பர். இங்குள்ள பழைய தாழியில் இருக்கும் பழைய நெய் தீராத நோய்களைத் தீர்க்கும் சக்தி வாய்ந்தது.

மலை ஏற 478படிகள் உள்ளன. வழியில் இடும்பன் சந்நிதியும் பல மண்டபங்களும் உள்ளன. கோவிலின் முகப்பில் கொடிமரத்தின் அருகில் பல பழைய வேல்கள் நிறுத்தப்பட்டுள்ளன. இத்தலம் பழனியைப் போன்ற அமைப்பினை உடையது.

தலமரமான கொட்டி மரத்தின் அருகில் நஞ்சுண்டேஸ்வரர் பர்வதவர்த் தினி சந்நிதிகள் உள்ளன.

கருவறையில் காட்சி தரும் முருகப் பெருமானின் திருப்பெயர் சிவாசல பதி. இம் மூலவர் 3 அடி உயர அழகிய திருவுருவமுடையவர். ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டவர். அருகில் வள்ளி நாயகியும் கிழக்கு நோக்கி காட்சி தருகிறார். வள்ளிதேவியும், தேவசேனா தேவியும் ஒரே சந்நிதியில் காட்சி தருகின்றார். ஊதிமலை, வட்டமலையி லும் இதே அமைப்பினைக் காணலாம்.

பட்டாலியூரில் அறுமுகப் பெருமான் பன்னிரு திருக்கரங்களுடன் இரு தேவியர் சூழ நின்ற திருக்கோலத்தில் கிழக்கு நோக்கி காட்சி தருகின்றார். மயில் முருகவேளின் பின்புறம் உள்ளது.

வள்ளியைக் கவர்ந்து வந்த முருகப் பெருமானைப் பின் தொடர்ந்த வேடர்களை முருகன் போரில் மாய்த்தார். பின் வள்ளியின் வேண்டு கோளின் பேரில் மீண்டும் அவர்களை உயிர்ப்பித்தார். எனவே இக்கருத்தி னைத் தரும் 'பட்டாலியூர்' என்ற பெயர் இத்தலத்திற்கு வந்தது.

தனியாக வள்ளி, தெய்வயானை சந்நிதி உள்ளது. முருகப் பெருமானுக் கும் தேவியர் சந்நிதிக்கும் இடையே சுரங்கவழி ஒன்றுள்ளது. இதில்தான் இக்கோவிலை எழுப்பிய சிவவாக்கியர் தவம் இருந்ததாக ஐதீகம்.

சஷ்டி, கார்த்திகை, அமாவாசை சிறப்பு நாட்கள். கந்த சஷ்டியும்

தைப்பூசமும் பங்குனி உத்திரமும் சிறப்பு விழாக்களாகும். தைப்பூசத்தன்று தேர்த்திருவிழா நடைபெறும்.

காவடி, அபிஷேகம், பொப்லி போன்ற பிரார்த்தனைகள் செலுத்து கின்றனர். திருப்புகழில் ஐந்து பாடல்கள் உள்ளன. இங்குள்ள அனுமன் மீதுள்ள வெண்ணெய் தீராத நோய்களைத் தீர்க்கும் மருத்துவ குணமுடை யது.

## 64. சிவாலயமலை - இரத்தினகிரி

திருச்சி - குளித்துறையிலிருந்து மணப்பாறை செல்லும் வழியில் உள்ளது. சிவாலயமலை, சிவதைப்பதி, அரதனாசலம், இரத்தின வெற்பு, சிவாயம், வாட்போக்கி, மணிக்கிரி, மாணிக்கமலை, ஐவர்மலை எனப் பல பெயர்களைக் கொண்டது.

1017 படிகளைக் கொண்ட மலை மீது அமைந்த தலம். இங்கு எழுந்தருளிய சிவபெருமான் இரத்தினகிரீசுவரர். இறைவி: சுரும்பார் குழலி. தலமரம்: வேம்பு, தீர்த்தம்: புண்ணியப்புனல். இந்திரன், சூரியன், வீரசேன்ன், ஆதிசேஷன், துர்க்கை, அகத்தியர் வழிபட்டுப் பேறு பெற்ற தலம்.

12 ஆண்டுகட்கு ஒரு முறை இடி பூஜிப்பதாக ஐதீகம். மேற்கு நோக்கிய சந்நிதி. மாசிமாதம் சிவராத்திரி, வைகாசி மாதம் விசாகம் காலங்களில் சூரியன் இவ்விறைவனின் பாதத்திலும் பின் மேல் நோக்கியும் ஒளியினைப் பாய்ச்சி வணங்குகின்றான்.

இங்கு இறைவன் மீது அபிஷேகம் செய்யும் பால் உடனே தயிராக மாறிவிடுகின்றது. பக்தன் ஒருவன் இறைவனுக்குப் பால் எடுத்து வரும் வழியில் காகம் கவிழ்த்தது. அதனால் அவ்விடத்திலேயே காகம் எறிந்து விட்டது. அப்படிக் கவிழ்த்த இடத்திற்கு மேல் இன்றும் காகம் பறப்ப தில்லை. எனவே இம்மலையினைக் 'காகம் பறவா மலை' என்பர். ஆரிய மன்னன் ஒருவன் இறைவன் திருமுடி மீது வாளினை வீச வாளை இறைவன் காணாமல் போக்கினார். எனவே இத்தலம் 'வாட்போக்கி' எனப் பெயர் பெற்றது.

இங்கு முருகப் பெருமான் ஆறு திருமுகங்களும் பன்னிரு திருக்கரங் களும் கொண்டு தேவியர் இருவர் சூழ மயில் மீது அமர்ந்து கிழக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார்.

திருப்புகழில் மூன்று பாடல்களைப் பெற்றதலம். சித்திரை விழா, தைப்பூசம், பங்குனி விழா சிறப்பானவை. 2.5 கி.மீ. தூரத்தில் 'சிவாயம்' என்ற தலம் உள்ளது. அருணகிரிநாதரின் திருப்புகழ் வைப்புத்தலம் ஆகும்.

## 65. சிறுவரம்பேடு - சிறுவாபுரி

பொன்னேரிக்கு மேற்கே 6 கி.மீ., சென்னை - நெல்லூர் சாலையில் 20 கி.மீ. தூரத்தில் உள்ளது. சின்னம்பேடு, சிறுவரம்பேடு என இப்போது வழங்கப்படுகிறது.



லவன், குசன் இருவரும் ராமரைத் தம் தந்தை என அறியாது வில் ஏந்திப் போரிட்டு வெற்றி கண்ட தலம். அதனால்தான் சிறுவர், அம்பு, எடு என்பது 'சிறுவரம்பேடு' என்றாயிற்று.

இங்குள்ள முருகப் பெருமான் ஒரு திருமுகத்துடன் நான்கு திருக்கரங்கள் கொண்டு பாலசுப்பிரமணியராகக் காட்சி தருகின்றார்.

உற்சவரான சுப்பிரமணியர் மயில் மீது அமர்ந்து வலக்காலைப் பாம்பின் தலை மீது வைத்தும் இடக்காலை மடித்தும் அமர்ந்துள்ளார். இருபுறமும் தேவியர் இருவர் எழுந்தருளியுள்ளனர். ஷண்முகரும் தேவியருடன் காட்சி தருகிறார்.

அண்ணாமலைப் பெருமானும் உண்ணாமுலையம்மையும் தனித்தனிச் சந்நிதிகளில் காட்சி தருகின்றனர்.



மயில் மண்டபத்தில் உள்ள மயில் அழகிய கண்கவர் வனப்புடையது. நான்கு திருப்புகழ்ப் பாடல்கள் பெற்ற தலம்.

இங்குள்ள மயில், நந்தி, விநாயகர், சுவாமி, அம்மன் அனைத்தும் பச்சைக் கல்லால் ஆனவை.

புதியதாக வீடுகட்டிக் கிரகப் பிரவேசம் செய்பவர்கள் சிறுவாபுரி பாலசுப்பிரமணியருக்கு அபிஷேகம் செய்வித்து பின் புது வீடு புகுந்தால் சகல செல்வங்களும் பெருகும் என்பது ஐதீகம்.

ஸ்ரீ அகஸ்தீசுவரப் பெருமான் திருக்கோவில் இத்தலத்தில் உள்ளது. ''திருவூரகமால்'' என இப்பெருமானையும் திருப்புகழில் குறிப்பிட்டு உள்ளார்.

## 65. சின்னத்தடாகம் - குருடிமலை

கோவையை அடுத்த துடியலூரிலிருந்து 5 கி.மீ.தொலைவில் உள்ளது. மலை மேல் அமைந்த கோவில். அருள்மிகு அரங்கநாதர் கோவில் உள்ளது. அங்குச் செவ்வகக் கல் ஒன்றினை முருகனாக அவனின் அருவத் திருவுருவாக எண்ணி வணங்கி வருகின்றனர்.

விநாயகர், கன்னியம்மன் திருவுரு உள்ளது.

''கருடன் மிசைவரு கரியபுயல்' என்ற திருப்புகழ்ப் பாடல இத்தலத்திற்கு உரியதாகும். திருப்புகழில் ஒரு பாடல் உள்ளது.

## 67. சீர்காழி

சிதம்பரம் - மயிலாடுதுறை வழியில் சிதம்பரத்திலிருந்து 17 கி.மீ. தொலைவில் உள்ளது. ஞானசம்பந்தர் அவதாரத்தலம், தேவியிடம் ஞானப் பால் உண்டு 'தோடுடைய செவியன்' என்னும் தேவார முதல் பதிகம் பாடிய தலம்.

பிரமபுரம், வேணுபுரம், புகலி, சண்பை நகர், காழி, கொச்சைவயம், கழுமலம், வெங்குறு, தோணிபுரம், பூந்தராய், சிரபுரம், புறவம் எனப் பன்னிரு திருப் பெயர்கள் கொண்ட தலம். பிரமன் பூசித்ததினால் பிரமபுரம் எனவும், அமரர்கள் புகலிடமாய்ப் புகுந்ததால் புகலி எனவும், பிரளய காலத்தில் தோணி போல் மிதந்ததனால் தோணிபுரம் எனவும் பெயர் பெற்றது.

இத்தல முருகப் பெருமான் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு இரு தேவியர் புடை சூழ நின்ற திருக்கோலத்தில் கிழக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார்.

தனிக் கோவிலான குமர கோவில் முருகப் பெருமான் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு தேவியருடன் காட்சி தருகின்றார்.

அம்மன் சந்நிதியின் பின்புறம் ஒரு முருகன் சந்நிதி உள்ளது. தெற்குத் திருக்கோபுர வாயிலிலும் ஒரு முருகப் பெருமான் சந்நிதி உள்ளது. இவ்விரண்டிலும் முருகப் பெருமான் தேவியர் அருகே நிற்க மயில் மீது அமர்ந்து காட்சி தருகின்றார்.

கார்த்திகை சிறப்பாகும். கந்த சஷ்டி சிறப்பான விழாவாகக் கொண்டா டப்படுகின்றது.

பதினான்கு திருப்புகழ் பாடல்கள் கொண்ட தலம்.

## 68. சுவாமிமலை - திருஏரகம்

கும்பகோணத்திற்கு மேற்கே 8 கி.மீ தொலைவில் உள்ளது. திருஏரகம்,



குருகிரி, குருமலை என்னும் பெயர்களை உடைய திருத்தலம். தலமரம் நெல்லிமரம் ஆகும். எனவே நெல்லிமலை என்றும் கூறுவர்.

அடியவர்தம் மனதை அருள் என்னும் ஏர்கொண்டு உழுது அன்பு என்னும் பயிரை வளர்க்கும் முருகப் பெருமான் அமர்ந்த இடமாதலால் ''ஏரகம்'' எனப் பெயர் பெற்றது என்றும் கூறுவர். இது நான்காவது படைவீடாகும்.



ஸ்ரீசுவாமிநாதசுவாமி
சுவாமிமலை.

சுவாமியாகிய சிவனுக்குக் குருவாக இருந்து 'ஓம்' என்னும் பிரணவ மந்திரத்திற்குப் பொருள் கூறினமையால் ''சுவாமிமலை'' எனப் பெயர் பெற்றது.

தந்தைக்கு உபதேசம் செய்தமையால் முருகன் 'தகப்பன் சாமி' எனப் பெயர் பெற்றார். கட்டுமலை மேல் அமைந்த திருக்கோவில். 60 படிகள் உள்ளன. அறுபது தமிழ் வருடங்களைக் குறிக்கும் 60 அதி தேவதைகள் இப்படிகள் உருவில் உள்ளதாக ஐதீகம். ஒவ்வொரு படிக்கும் ஒவ்வொரு தமிழாண்டின் பெயர்களை எழுதியுள்ளனர்.

பார்வதி தேவியின் சாபத்திற்கு ஆளான பூமாதேவி இங்குச் சுவாமி

நாதனை வழிபட்டு சாபவிமோசனம் பெற்றார். முருகப் பெருமானைப் பிரிய மனமின்றி நெல்லி மரமாக (தலவிருட்சம்) நிற்கின்றார்.

ஸ்ரீ சுவாமிநாதன் குருவாக இருந்து உபதேசிப்பதனால் செய்குன்றின் மீதும் சிவபெருமான் சீடராக இருந்து உபதேசம் கேட்பதனால் செய்குன்றின் கீழும் உள்ளனர்.

முருகப் பெருமான் கட்டுமலை மீது கிழக்கு நோக்கி நின்ற திருக்கோலத்தில் வலக்கையில் தண்டம் பிடித்து இடத்திருக்கரத்தைத் தொடையில் அமைத்து 6 அடி உயரத் தோற்றத்துடன் கம்பீரமாகக் காட்சிதருகிறார். ஸ்ரீசுவாமிநாதனின் முன்பு மயில் இல்லை. யானை உள்ளது.

ஒரு திருமுகமும், இரு திருக்கரங்களும் கொண்ட சுவாமிநாதன் சக்திவேல் தரித்துக் காட்சி தருகின்றார். தங்கக் கவசம் சார்த்தி வைர வேலுடன் காணும்போது காண்போரின் மெய்சிலிர்க்கும்.

உற்சவர் ஆறுமுகப் பெருமானாக இருதேவியருடனும் மற்றொருவர் வில்லேந்திய வேட்டுவக் கோலத்திலும் காட்சி தருகின்றார்.

இக்கோயில் மூன்று பிரகாரங்களுடனும் மூன்று திருக்கோபுரங்களுடனும் விளங்குகின்றது. மலையடிவாரத்தில் தலமரம் நெல்லிமரம் உள்ளது. படிக்கட்டு விநாயகரை வணங்கி மேலே செல்லும் போது நேத்திர விநாயகரை வணங்கிச் செல்ல வேண்டும்.

சுவாமிநாதப் பெருமான் திருக்கை வேலினால் உருவாக்கப்பட்டது நேத்திரத் தீர்த்தம் என்னும் சுவாமி தீர்த்தம்.

வியாழக்கிழமை, சஷ்டி, கிருத்திகை, விசாகம் சிறப்பு. சித்திரைப் பெருவிழா, கந்த சஷ்டி விழா, திருக்கார்த்திகை விழா, பங்குனிப் பெருவிழா சிறப்பாகும்.

தீர்த்தம்: வச்சிர, குமார தாரை, சரவண தீர்த்தம், நேத்திர புஷ்கரணி, பிரம்ம தீர்த்தம். அருணகிரிநாதரின் 38 திருப்புகழ்ப் பாடல்கள் பெற்ற தலம்.

அருகிலுள்ள திருவலஞ்சுழி சிறப்பான தலம். காவிரி இத்தலத்தை வலமாகச் சுற்றிச் செல்கின்றது. இங்குள்ள வெள்ளைப் பிள்ளையாரை வேறு எங்கும் காண முடியாது.

## 69. செஞ்சேரிமலை - தென்சேரிகிரி

பல்லடம் - உடுமலைப்பேட்டை பாதையில் 18 கி.மீ. தூரத்தில் உள்ளது. சுமார் 150 அடி உயரம் கொண்ட சிறு குன்றின் மீது அமைந்த திருக்கோவில். மந்திரகிரி என்பர். தென்சேரிகிரி என்பது செஞ்சேரி என மருவிற்று.

300 படிகள் ஏறிச் சென்று முருகன், சிவாலயங்களை அடைய வேண்டும்.

அறுமுகப் பெருமான் 'மந்திராசல வேலாயுத மூர்த்தி', 'மந்திரகிரி ஆண்டவன்' என்ற திருநாமம் கொண்டவன்.

சுமார் நான்கு அடி உயரத் திருவுருவுடன் சுற்றிலும் அமைந்த ஆறு திருமுகங்களும் பன்னிரு திருக்கரங்களும் கொண்டு வள்ளி, தெய்வயானையுடன் எழுந்தருளியுள்ளார். மூலவர் ஆறு திருமுகங்களுடன் எழுந்தருளியிருப்பது தனிச் சிறப்பு. ஆறு திருமுகங்களும் சுற்றிலும் அமைக்கப்பட்டுள்ளது. மயில் முருகப் பெருமானின் பின்னால் வடக்கு நோக்கி உள்ளது.

முன் இரு கைகளில் அபய, வரத முத்திரைகளும், பிற வலக்கைகளில் சக்தி, கதை, அம்பும் இடக்கைகளில் வில், வச்சிரம், தாமரைமலர், கடக முத்திரை கோழி, சூலம் முதலியன காணப்பெறுகின்றன. கோழியும், சேவற்கொடியும் காணப்பெறுவது தனிச்சிறப்பாகும்.

மலை அடிவாரத்தில் சந்தன விநாயகரும், மலைமேல் செல்லும் வழியில் இடும்பன் சந்நிதியும் உள்ளன.

திருப்பரங்குன்றத்தில் மணம் முடித்து திரும்பும் வழியில் முருகப் பெருமான் இம்மலையில் தங்கியதாக ஐதீகம். சூரபத்மனது மாயங்களை அழிக்கும் மந்திரங்களை முருகப் பெருமான் தன் தந்தையிடம் இங்குப் பெற்றதனால் 'மந்திரகிரி' என அழைக்கப்படுகின்றது.

இத்தலத்தில் தங்கி ஞானதீர்த்தத்தில் நீராடி அறுமுகனை ஒரு மண்டலம் வணங்கினால் எண்ணியவை ஈடேறும்; பிணி நீங்கும்.

தை மாதம் பிரமோற்சவம், தைப்பூசத்தன்று தேர்த்திருவிழா. கந்தர்சஷ்டி சிறப்பு. திருப்புகழில் இரு பாடல்கள் இத்தலத்திற்குரியன.

## 70. சென்னிமலை

ஈரோடு, திருப்பூர் மார்க்கத்தில் ஈங்கூர் புகைவண்டி நிலையத்தில் இருந்து 8 கி.மீ. தூரத்தில் உள்ளது. இத்தலம் சிறுகிரி, சிகரகிரி, சென்னியங்கிரி, புஷ்பகிரி எனப் பல பெயர்கள் பெற்றது.

காங்கேயத்தை மையமாகக் கொண்டு சென்னிமலை, ஊதிமலை, வட்டமலை, சிவன்மலை, திருமுருகன் பூண்டி உள்ளன. இவை எல்லாவற்றிற்கும் முதன்மையாக தலைமையானதாகக் கருதப்படுவதனால் இது சென்னிமலை (சென்னி - தலை) எனப் பெயர் பெற்றதாகக் கருதலாம். இங்குள்ள எல்லா மலைகளையும் விட பெரிய மலையும் இதுவே.

1300 படிகள் ஏறும் போது வள்ளிபாதம், இடும்பன் சந்நிதி, புளிய மரத்தடியில் எழுந்தருளியுள்ள புளியடிப் பிள்ளையார் ஆகியோரைத் தரிசிக்கலாம்.

கடல் மட்டத்திலிருந்து 1279 அடி உயரம் கொண்ட மலையில் 1320 படிகள் ஏறி திருக்கோயிலை அடைய வேண்டும். கார் செல்ல சாலை வசதியும் உள்ளது.

மலையடிவாரத்தில் இடும்பன் சந்நிதி உள்ளது. மலைக்குச் செல்லும் வழியில் 'மலைவிழி விநாயகர்' உள்ளார். கொங்கேழ் தலங்களுள் ஒன்று.

மாமங்கத் தீர்த்தம், குமார தீர்த்தம், சரவணப் பொய்கைத் தீர்த்தங்களா கும். ஞானிகள் மட்டுமே காணும் 'கண்டு காணாச்சுனை' ஒன்றுள்ளதாகப் புராணம்.



கிழக்கு நோக்கிய சந் நிதியில் தண்டாயுதபா ணியாகக் காட்சி தருகி றார் முருகப் பெருமான். இவரை வலம் வரும் வழியில் அமிர்தவல்லி, சுந்தரவல்லி என்ற திரு நாமங்களுடன் வள்ளி, தெய்வயானை எழுந்தரு ளியுள்ளனர்.

சிரகிரி வேலாயுதர் ஆறு திருமுகங்களும் பன்னிரு திருக்கரங்க ளும் கொண்டு அவைக ளில் வச்சிரம், வேல், இருதலைச்சூலம், தண்டு, வாள், கேடயம், வில், அம்பு, கோழி, சக்க ரம், வரதம், அபயம் கொண்டு காட்சி தருகி றார். கடம்ப மலர் மாலை பூண்டு, தோள்க ளும் வாகுவலயமும், நீற ணிந்த மார்பும் உதரபந்த மும், இடையில் கட்டிய செம்பட்டு ஆடையும், அரைநாணும், தண்டை யும், சிலம்பும் திருவடி கள் இரண்டும் காட்சிதர விளங்குகின்றார். உயரம் சுமார் நான்கு அடி.

சித்தர் சமாதியும் பழ னிப் போகர்ச் சந்நிதி

க்குச் செல்லும் குகையும் உள்ளது. கருவறையின் தென்புற வெளிப்புரையில் அக்னி ஜாத சுப்பிரமணியர் காட்சி தருகிறார். இரு திருமுகமும், எட்டு திருக்கரங்களும் கொண்டு தலையில் கிரீடம் தாங்கி இடக்கை மூன்றில் நெய்யுடன் கலம், கேடயம், கத்தியும் வலக்கையில் அபய முத்திரையும் முன் இடக்கையில் உருமுத்திரையும் உள்ளது. அக்கமாலை, கோழிக்குப் பதில் கத்தியும் சுவஸ்திக் முத்திரைக்கு பதில் அபய மற்றும் உருமுத்திரையும் உள்ளன. மூர்த்தி சிறந்த அழகு. இவர் இருதலைக் கொண்ட அக்னிஜாத சுப்பிரமணியர். இத்திருவுரு வேறு எங்கும் காண முடியாத ஒன்று. இங்கு 16 முருக பேதங்களும் உள்ளன. முருகன் இத்தலத்தில் அருணகிரியாருக்குப் படிக்காசு வழங்கியருளினார். திருப்புகழில் மூன்று பாடல்கள் உள்ளன. சிலர் இவை திருச்சிக்குரியன என்பர்.



மாதக்கார்த்திகை, சஷ்டி, தைப்பூசம் சிறப்பாகும். குன்றுதோறாடலைச் சேர்ந்ததலம்.

அருணகிரிநாதர் இத்தலத்தை சிரகிரி என்று குறிப்பிடுகிறார். கந்தர்சஷ்டி கவசம் ''சிரகிரி வேலவன்'' சீக்கிரம் வருக எனக் குறிப்பிடுகிறது.

இத்தலச் சிவபிரான் கைலாய நாதர். இறைவி - பெரியநாயகி. வள்ளி தெய்வயானை இருவருக்கும் தனிக்கோயில் சிறிது தொலைவில் உள்ளது. வள்ளியும் தெய்வயானையும் மத்தியில் உள்ள சுயம்பு லிங்கத்தின் இருபுறமும் காட்சி தருகின்றனர். இச்சுயம்பு லிங்கத்தை அகத்தியர் என்பர். சிலர் அகத்தியரால் பிரதிஷ்டை செய்யப்பட்டது என்பர்.

அருகே உள்ள குகையில் புண்ணாக்குச் சித்தர் இருந்ததாகக் கூறுவர். அருகில் சரணவ முனிவர் சமாதி உள்ளது. எனவே இது சன்னியாசி குகை (தன்னாசி குகை) என வழங்கப்படுகின்றது.

கவிகாளமேகப் புலவர் இத்தலம் பற்றிச் சிலேடையாகப் பாடிய பாடல் ஒன்றுண்டு.

''சென்னிமலை வேலவருக்குச் சேர்ந்த கொம்பு இரண்டுண்டு
கன்னிகுற வள்ளிக்குக் காலில்லை - முன்னமே
ஆட்டுக்குக் கொம்பில்லை ஆனைக்குக் காலில்லை
பாட்டுக்குள் ஆராய்ந்து பார்''

இதில் 'சென்னிமலை' என்பதில் "ெ" ஒரு கொம்பு. வேலவருக்கு "ே" இரண்டு கொம்பு. கன்னிகுறவள்ளி என்பதில் "ா" இல்லை. ஆட்டுக்கு என்பதில் "ெ ே" என்ற கொம்புகள் இல்லை. ஆனைக்குக் "ா" கால் இல்லை என்று பொருள்.

## 71. சேயூர் - வளவாபுரி

மதுராந்தகத்திற்குக் கிழக்கே 26 கி.மீ. தொலைவில் உள்ளது. செய்கையம் பதி, வளவநகர், செய்யூர் என்றும் பெயர் பெற்றது.

ஊரின் நடுவில் முருகப் பெருமானின் திருக்கோவில் அமைந்துள்ளது. உட்பிரகாரத்தில் தென்மேற்கு மூலையில் ஸ்ரீமுத்துக்குமார சுவாமி சந்நிதி உள்ளது. இவர் 'சம்ஹாரமூர்த்தி' என்னும் பெயர் கொண்டழைக்கப்படுகின் றார். வடக்குப் புறத்தில் ஆறுமுகர் வெள்ளிக் கவசம் பூண்டு அழகு மிளிரக் காட்சி தருகின்றார்.

கர்ப்பக்கிரகத்தில் எழுந்தருளியுள்ள முருகப் பெருமான் செய்கைக் கந்தன், கந்தசுவாமி என்று வழங்குகின்றார். சுமார் 2.5 அடி உயரத்துடன் நான்கு திருக்கரங்களுடன் நின்ற திருக்கோலத்தில் இருபுறமும் இரு தேவியர் விளங்க வேலும் மயிலும் கொண்டு காட்சி தருகின்றார்.

இத்தலச் சிவபிரான் ஸ்ரீ சோமநாதஸ்வாமி, இறைவி: மீனாட்சியம்மை.

கந்தர் சஷ்டியும், பங்குனிப் பிரமோற்சவமும் சிறப்பாகும். திருப்புகழில் ஒரு பாடல் இத்தலத்திற்குரியது.

## 72. சேலம்

சேலம் நகரின் மரவனேரி என்னுமிடத்தில் ஸ்ரீசுகவனேசுவரர் திருக்கோ யில் உள்ளது.

சுக முனிவர் வழிபட்டதனால் 'சுகவனம்' எனவும், காமதேனு வழிபட்ட தனால் 'பட்டீசுவரம்' எனவும், வேதங்கள் பூசித்து தேவர்களின் பாவங் களைப் போக்கியதனால் 'பாபநாசம்' எனவும் ஆதிசேஷன் வழிபட்டதால் 'நாகேசம்' எனவும் பெயர் பெற்றது இத்தலம்.

இத்தலச் சிவபிரான்: சுகவனேசுவரர், சுயம்பு மூர்த்தி. இறைவி: சுவர் ணாம்பிகை. தீர்த்தம்: ஆமண்டுத் தீர்த்தம். தலமரம்: வில்வம். பாண்டியர் திருப்பணி.

இங்கு எழுந்தருளியுள்ள 'சுகவன சுப்பிரமணியர்' ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு இரு தேவியருடன் கிழக்கு நோக்கி நின்ற கோலத்தில் காட்சி தருகிறார். உற்சவர் ஆறுமுகங்கொண்டு தேவியர் சூழ எழுந்தருளியுள்ளார்.

சித்திரை வருடப் பிறப்பு, வைகாசியில் தேர்த்திருவிழா, கார்த்திகை

விழா, தைப்பூசம், பங்குனி உத்திரம் சிறப்பாகும். திருப்புகழில் ஒரு பாடல் உள்ளது.

## 73. தஞ்சாவூர்

தஞ்சைப் பெருவுடையார் சந்நிதிக்குத் தென்மேற்கில் முருகப் பெருமான் தனிக்கோவிலில் எழுந்தருளியுள்ளார்.

ஆறுமுகப் பெருமான் பன்னிரு திருக்கரங்களுடன் மயில் மீது அமர்ந்து கிழக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார். வள்ளி, தெய்வயானை இருவரும் அருகே எழுந்தருளியுள்ளனர். மயிலின் முகம் வடக்கு நோக்கியுள்ளது.

ஆறுமுகப் பெருமான் மயில் திருவாசியுடன் காட்சி தருவது மிக்க அழகானது. உற்சவர் ஒரு முகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு தேவியர் இருவருடன் காட்சி தருகின்றனர்.

இராசராஜன் திருவாயிலின் இடதுபுறம் மேல் பகுதியில் யானை மீது அமர்ந்த 'தாரகாரி' என்ற முருகனின் திருவுருவம் உள்ளது. ஒரு திருமுக மும் பன்னிரு திருக்கரங்களும் உள்ளன. இது ஒரு அரிய படைப்பாகும்.

மூன்று திருப்புகழ்ப் பாடல்கள் பெற்றது.

இத்தலச் சிவபிரான் பிரகதீசுவரர், இறைவி பெரிய நாயகி. தீர்த்தம்: சிவகங்கை - இந்தியாவிலேயே மகோன்னதமான கோயில் எனப் பல்க லைக் களஞ்சிய நூல் குறிப்பிடுகின்றது. இங்குள்ள விமானம் தனிச்சிறப்பு டையது. உயரம் 216 அடி. 13 மாடங்கள். சதுர வடிவம் கொண்டது. கோபுரத்தின் மேலே உள்ள பிரமந்திரக்கல் 80 டன் எடை கொண்ட ஒரே கல்லாகும். இக்கோயிலைத் 'தக்ஷிணமேரு' என்பர்.

இங்குள்ள நந்தி 12.5 அடி உயரம், 19.5 அடி நீளம், 8.25 அடி அகலம் கொண்டது. இது வளர்ந்து கொண்டே சென்றதாகவும் முதுகில் ஆணி அடித்து வளர்ச்சியைத் தடுத்ததாகவும் கூறுவர். இங்குள்ள லிங்கத்தின் ஆவுடையார் 54 அடி சுற்றளவும் 6 அடி உயரமும் பாணம் 23.5 அடி சுற்றளவும் கொண்டது. இதற்கு ஒப்பு வேறு இல்லை.

## 74. தனிச்சயம்

மதுரையிலிருந்து 16 கி.மீ. தூரத்தில் உள்ள சோழவரத்திலிருந்து 2 கி.மீ. தூரத்தில் உள்ளது. இதனை 'ஜெயங்கொண்ட தனிச்சயம்' என்பர்.

இங்குள்ள முருகப் பெருமான் ஆலயத்தில் முருகப் பெருமான் பாலவடி வில் எழுந்தருளியுள்ளார். அருணகிரிநாதர் 'பிள்ளைப் பெருமாளே' என இம் முருகனைப் போற்றியுள்ளார்.

இரு திருப்புகழ்ப் பாடல்கள் உள்ளன. திருப்புகழ் தணிகைமணி அவர் கள் இதனையே திருப்புகழ்த் தலமாகக் குறிப்பிடுகிறார்கள்.

''கொங்கிற் தனிச்சயந் தன்னிலுறை கந்த பெருமாளே'' என்பதனால் இதனைக் கொங்கு நாட்டில் உள்ள தலம், இடம் விளங்காத தலம் என்பாரும் உளர்.

## 75. திருக்கயிலாயம் - கயிலைமலை

திருநொடித்தான் மலை என்பர். இமயமலை முடிகளில் ஒன்று.

சிவபெருமான் இருப்பது இம்மலையிலேதான். கந்தன் அருகிலுள்ள 'கந்த வெற்பு' என்னும் மலை மீது எழுந்தருளியுள்ளார்.

திருப்புகழில் இம்மலையில் வாழ் கந்தவேளை ஐந்து பாடல்களில் பாடியுள்ளார் அருணகிரிநாதர்.

## 76. திருக்கழுக்குன்றம்

செங்கல்பட்டிற்குத் தென்கிழக்கே 15 கி.மீ. தூரத்தில் உள்ளது. இத்தலம் வட நாட்டவர்களால் 'பக்ஷி தீர்த்தம்' என்று அழைக்கப்படுகின்றது. 12 ஆண்டுகட்கு ஒருமுறை இந்திரன் இடி பூஜை செய்யும் தலம். தினமும் மதியம் இரு கழுகுகள் வந்து அர்ச்சகரால் கொடுக்கப்படும் சர்க்கரைப் பொங்கலையும் நெய்யையும் புசித்து மலையை வலமாகச் சுற்றிச் செல் கிறது.

12 ஆண்டுகட்கு ஒரு முறை சங்கு பிறப்பதால் இங்குள்ள தீர்த்தக்குளம் 'சங்கு பிறந்த குளம்' என வழங்கப்படுகிறது. இக்குளத்தில் தீர்த்தமாடி கிரிப்பிரதக்ஷணம் நியமமாகச் செய்தால் எல்லா பிணிகளும் நீங்கும்.

வேதங்களே மலைகளாக நிற்பதனால், 'வேதகிரி' என்றும் 'கதலிவனம்' என்றும் பெயர் உண்டு. குருவடிவாகச் சிவபெருமான் மாணிக்கவாசகருக் குக் காட்சி தந்த தலம். மலையின் மேலும் கீழும் கோவில்கள் உள்ளன. 1030 படிகள் உள்ளன. வேதகிரீஸ்வரர் சுயம்பு மூர்த்தி. மலைமேல் சொக்க நாயகியம்மை திருக்கோவில் குகை போன்ற இடத்தில் உள்ளது. கீழே சுவாமி: பக்தவச்சலர், தேவி: திரிபுர சுந்தரி. தீர்த்தம்: நந்தி தீர்த்தம். இத்தலச் சிவபிரான்: வேதகிரீசுவரர், மலைமருந்தீசர். இறைவி: பெண்ணினல்லா ளம்மை.

மலை மீது முருகப் பெருமான் ஆறு திருமுகங்கள் கொண்டு மயில் மீது அமர்ந்த நிலையில் தேவியர் இருவருடன் காட்சி தருகிறார். மயிலின் திருமுகம் வடக்கு நோக்கியுள்ளது.

மற்றொரு சந்நிதியில் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு நின்ற கோலத்தில் இருபுறமும் தேவியர் இருக்கக் காட்சி தருகிறார். மயில் முருகப் பெருமான் பின்புறம் உள்ளது. மயிலின் முகம் வலப்புறம் உள்ளது.

திருப்புகழில் கதலிவனம், கதலிக் கானம், வேற் வெற்பு, தமிழ் வேத வெற்பு, திருக்கழுக்குன்றம் என நான்கு பாடல்களில் இத்தலம் போற்றப் பெறுகின்றது.

## 77. திருக்கடையூர் - திருக்கடவூர்

மாயூரத்திற்குக் கிழக்கே தரங்கம்பாடி செல்லும் வழியில் 21 கி.மீ.



தொலைவில் உள்ளது. இத்தலம் கடவூர் என்றும் அழைக்கப் பெறும். அட்டவீரட்டத் தலங்களில் ஒன்று. மேற்கு நோக்கிய சந்நிதி. மார்க்கண்டேயனுக்காக யமனைச் சிவபிரான் உதைத்த தலம்.

அமுதம் நிறைந்த கடம் (குடம்) இலிங்கமானதால் 'கடவூர்' ஆயிற்று. இறைவன்: அமிர்தகடேசுவரர், இறைவி: அபிராமியம்மை. தீர்த்தம்: சிவ கங்கை, தலவிருட்சம்: முல்லை.

இங்கு முருகப் பெருமான் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு தேவியருடன் காட்சி தருகின்றார். இங்கு முருகப் பெருமான் சிறு பாலகன் வடிவில் பார்வதியின் வலப்பக்கம் தாயைத் தழுவியவாறு காட்சிதருவது காண வேண்டிய ஒரு காட்சியாகும்.

கார்த்திகைச் சோமவாரம், 1008 சங்காபிஷேகம் சிறப்பு. கந்தர் சஷ்டி விழா சிறப்பானது. இரு திருப்புகழ்ப் பாடல் பெற்ற தலம்.

## 78. திருக்குறுக்கை

மாயூரத்திலிருந்து 16 கி.மீ. தூரத்தில் உள்ளது. திருமண்ஞ்சேரிக்கு வடக்கே 5 கி.மீ. தூரத்தில் உள்ளது.

தீர்க்கவாகு என்னும் முனிவர் அபிஷேகம் செய்யத் தம் நீண்ட. கைகளை உயரத் தூக்க அவை இங்கு குறுகின. ஆதலால் இத்தலம் 'குறுக்கை' ஆயிற்று. கடுவனம், யோகீசபுரம், காமதகனபுரம், கம்பகரபுரம் என்ற பெயர்களும் உண்டு.

இத்தலத்தில் முருகப் பெருமான் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங் களும் கொண்டு இரு தேவியருடன் நின்ற திருக்கோலத்தில் காட்சி தருகின்றார். உற்சவர் வில்லேந்திய கோலத்தில் காட்சி தருகின்றார்.

அட்டவீரட்டத் தலங்களில் இத்தலம் காமனை எரித்த தலம். இத்தலச் சிவபிரான்: வீரட்டேசுவரர், யோகீசர், இறைவி: ஞானாம்பிகை. தலமரம்: கடுக்காய்மரம், தீர்த்தம்: திரிசூல தீர்த்தம்.

விநாயகரும் அவர் அருகில் தீர்த்தவாகு முனிவர் குறுங்கையுடனும் தலமரத்தின் எதிரில் உள்ளனர்.

காமனை எரித்த இடம் இப்போது 'விபூதிக்குட்டை' என வழங்குகின்றது. அவ்விடத்தில் உள்ள மண் வெண்மையாய் விபூதி போல் உள்ளது. இதனை அணிய தீராத நோய்களும் தீரும்.

கந்தர்சஷ்டி, கார்த்திகை, மாசி மாத பிரமோற்சவம் சிறப்பான விழாக் களாகும். திருப்புகழில் ஒரு பாடல் உள்ளது.



## 79. திருக்குற்றாலம்

தென்காசிக்குத் தென்மேற்கே 5 கி.மீ. தொலைவில் உள்ளது.

தல மரம் குறும்பலா வாதலால் இத்தலம் குறும்பலா, திரிகூடாசலம் மற்றும் பல பெயர்களைக் கொண்டு விளங்குகின்றது.

விஷ்ணு ரூபமாய் இருந்த மூர்த்தி அகத்திய முனிவரால் சிவலிங்க ரூபமான தலம். பஞ்ச சபைகளில் இத்தலம் சித்திர சபை. சக்தி பீடங்களில் இது தரணி பீடம்.

இத்தலச் சிவபிரான் குறும்பலா ஈசுவரர், இறைவி: குழல்வாய்மொழி அம்மை, தீர்த்தம்: சித்திரா நதி, தலமரம்: குறும்பலா.

பிரகாரத்தில் ஓரிடத்தில் பஞ்ச தரிசனமான விநாயகர், லிங்கம், கோபுரம், மலை, மலைவீழ் அருவி கிடைக்கின்றது.

சங்கு வடிவில் அமைந்த கோயில். நான்கு வேதங்கள் நான்கு வாயில்களாக அமைந்துள்ளன. குற்றாலநாதர் கோயில் நடுவிலும் வலப்பக்கம் குழல்வாய் மொழியம்மை சந்நிதியும் இடப்பக்கம் பராசக்தி சந்நிதியும் உள்ளன.

தலமரமான செண்பக மரத்தினைப் பாடியுள்ளார். வேறு எங்கும் தலமரத்திற்குப் பாடல் கிடையாது.

## 80. திருகோணமலை

ஸ்ரீ லங்காவில் கிழக்குக் கடற்கரையில் அமைந்த தேவாரப் பாடல் பெற்ற இரு தலங்களுள் ஒன்று. திருக்கோணேச பெருமாள் ஆலயம். இது 'தக்ஷிண கைலாயம்' என்பர். தேவேந்திரன் பூசித்த தலம். சிவபிரான்: கோணேசர். இறைவி: மாதுமையாளம்மை.

முப்புறமும் கடலால் சூழப்பட்ட இத்தலம் அழிந்து விட்டதனால் அம்மூர்த்தங்களைக் கொண்டு புதிய திருக்கோயிலை எழுப்பியுள்ளனர்.

இங்கு எழுந்தருளியுள்ள முருகப் பெருமான் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் விளங்க இரு தேவியருடன் எழுந்தருளியுள்ளார்.

ஒரு திருப்புகழ்ப் பாடல் பெற்ற தலம்.

## 81. திருக்கோயிலூர்

விழுப்புரம் - காட்பாடி புகைவண்டிப் பாதையில் திருக்கோயிலூர் புகைவண்டி நிலையம் உள்ளது. பெண்ணையாற்றின் தென் கரையில் அமைந்த தலம்.

அட்ட வீரட்டத் தலங்களுள் இத்தலம் அந்தகாசூரனைச் சங்கரித்தருளிய தலம். மேற்கு நோக்கிய கோவில். சிவபெருமான்: வீரட்டேசுவரர், இறைவி: சிவானந்தவல்லி, தீர்த்தம்: பெண்ணை நதி.

திருக்கோவிலின் உள்சுற்றில் முருகப் பெருமான் ஆறுமுகராக எழுந்

தருளியுள்ளார். ஆறு திருமுகங்களும் பன்னிரு திருக்கரங்களும் கொண்டு தேவியர் இருவருடன் மயில் மீது அமர்ந்து அருள்பாலிக்கின்றார். கிழக்கு நோக்கிய சந்நிதி.

உற்சவப் பெருமான் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு நின்ற திருக்கோலத்தில் காட்சி தருகின்றார்.

சஷ்டி, கார்த்திகை சிறப்பு நாட்களாகும். கந்தர் சஷ்டி, திருக்கார்த்திகை விழா, மாசிமகம் சிறப்பான விழாக்களாகும்.

மேலூரில் மங்களா சாசனம் பெற்ற பெருமாள் திருக்கோவில் உள்ளது. திருப்புகழில் ஒரு பாடல் இத்தலத்திற்குரியது.

## 82. திருச்சக்கரப்பள்ளி

கும்பகோணம் - தஞ்சை புகைவண்டிப் பாதையில் அமைந்த ஜயம் பேட்டை புகைவண்டி நிலையத்திற்கு மேற்கே 2 கி.மீ. தூரத்தில் உள்ளது.



திருமால் பூசித்து சக்கரம் பெற்றதனால் திருச்சக்கரப்பள்ளி எனப் பெயர் பெற்றது. இந்திரன் மைந்தன் ஜெயந்தனும் தேவர்களும் பூசித்த தலம்.

இத்தல இறைவரும் ஏழூர் பல்லக்கில் எழுந்தருளுபவர். ஸ்ரீசக்கரம் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளது.

இத்தலச் சிவபிரான்: சக்கரவாகீசுவரர், பசுபதி நாயகேசர், இறைவி: தேவநாயகி. சக்ரவாகப் பறவை பூசித்ததால் இறைவன் 'சக்கரவாகீசுவரர்' எனப் பெயர் பெற்றார்.

இங்கே முருகப் பெருமான் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு நின்ற திருக்கோலத்தில் கிழக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார். மயில் முருகப் பெருமானின் முன்புறம் உள்ளது. தேவியர் இருவரும் உடன் எழுந்தருளியுள்ளனர்.

மாதக் கார்த்திகை சிறப்பு. கந்த சஷ்டி, திருக்கார்த்திகை, பங்குனி உத்திரம் சிறப்பான விழாக்களாகும். திருப்புகழில் ஒரு பாடல் உள்ளது. அருகிலுள்ள ஐயம்பேட்டையில் தண்டபாணி திருக்கோயில் உள்ளது. சதாசிவ பிரம்மேந்திரரால் பிரதிஷ்டை செய்யப்பட்டது.

## 83. திருச்சத்திமுத்தம்

தாராபுரம் புகைவண்டி நிலையத்திலிருந்து 3 கி.மீ. தூரத்தில் உள்ளது.

உமையம்மை இறைவனை மணக்க வேண்டித் தவம் இருக்க அவளைச் சோதிக்க விரும்பிய பெருமான் ஜோதி வடிவெடுத்து தவத்திற்கு இடையூறு செய்தார். உமாதேவி பயந்து இறைவனைத் தழுவி முத்தமிட்டார். சக்தி முத்தம் இட்ட தலமாதலால் 'சத்திமுத்தம்' எனப் பெயர் பெற்றது.

இங்குச் சக்தி இறைவனைத் தழுவும் ஆலிங்க மூர்த்தி அற்புதத் திருவுருவாகும். இறைவன்: சிவக் கொழுந்தீசர். இறைவி: பெரிய நாயகி. தீர்த்தம்: சூலதீர்த்தம், தலமரம்: வில்வம்.

இங்கு முருகப் பெருமான் ஆறுமுகமும் பன்னிரு திருக்கரங்களும் கொண்டு மயில் மீது அமர்ந்த திருக்கோலத்தில் கிழக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார். தேவியர் இருவர் உடன் எழுந்தருளியுள்ளனர்.

உற்சவப் பெருமான் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு தேவியர் இருவருடன் எழுந்தருளியுள்ளார்.

திருப்புகழில் ஒரு பாடல் உள்ளது.

## 84. திருச்செங்கோடு - நாககிரி

நாமக்கல்லிலிருந்து 32 கி.மீ. ஈரோட்டிலிருந்த 20 கி.மீ. தூரத்தில் உள்ளது. கடல் மட்டத்திலிருந்து 1901 அடி உயரம். 1200 படிகள் உள்ளன.

இத்தலம் நாகாசலம், சர்ப்பகிரி, சுரபகிரி, நாககிரி, நாகமாமலை, இடபமலை, துர்க்கை மலை என்றும் அழைக்கப்படுகின்றது. தேவாரத்திலும் பெரிய புராணத்திலும் கொடிமாடச் செங்குன்றூர் என்றுள்ளது.

செம்மை நிறமாகக் காட்சி தருவதாலும் செங்குத்தாக அமைந்துள்ள தனாலும் செங்கோடு எனப் பெயர் பெற்றது.



திருச்செங்கோடு

மலையடிவாரத்தில் சுப்பிரமணியர் திருக்கோவில் உள்ளது. இங்கு ஆறுமுகப் பெருமான் பன்னிரு திருக்கரங்களுடன் தேவியர் இருவர் சூழ மேற்கு நோக்கி அமர்ந்த கோலத்தில் காட்சி தருகின்றார்.

இங்கு முடி இறக்குதல், காது குத்துதல், திருமணம் முதலிய பிரார்த்தனைகள் செய்வர். வருடப்பிறப்பு, பங்குனி உத்திரம், வைகாசித் தேர்த்திருவிழா, தைப்பூசம் சிறப்பாகும்.

மலைக்குச் செல்லும் வழியில் 20 அடி உயர 60 அடிநீள ஐந்து தலை நாகம் சிவலிங்கத்தை உடலில் தாங்கி ஐந்து தலையாலும் குடைபிடித்து நிற்பது போல செதுக்கப்பட்டுள்ளது.

ஆதிசேஷன் வாயு சண்டையில் ஆதிசேஷனின் ஆயிரம் தலைகளில் ஒன்றும், மகாமேருவின் ஆயிரம் முடிகளில் ஒன்றும் விழுந்த தலம்.

செங்கோட்டு வேலவர் சுமார் 3.5 அடி உயரத்துடன் ஒரு திருமுகமும், இரு திருக்கரங்களும் கொண்டு கையில் வேலும் சேவல் கொடியும் விளங்கக் கிழக்கு நோக்கி நின்ற திருக்கோலத்தில் வெண்ணிற மேனியுடன் காட்சி தருகின்றார். வேல் கல்லால் ஆனது. இவ்வாறு வேலன் தன் வடிவிலேயே வேல் கொண்டு விளங்குவது பிற தலங்களில் காண முடியாததாகும். இத்தல அம்மையப்பரும், முருகப் பெருமானும், பழனி முருகப் பெருமான் போல நவபாஷாணத்தால் ஆனவர் என்பர்.

இவர் செங்கோட்டையன், செங்கோடன், செங்கோட்டு வேலவர், நாகாசல வேலர் என அழைக்கப்படுகின்றார்.

இவ்வேலவருக்குப் பின்னால் அர்த்த நாரீசுவர மூர்த்தியாகச் சிவபெருமான் எழுந்தருளியுள்ளார். இவர் நவபாஷாணத்தால் ஆனவர். இவருக்குக் கீழே ஆகாச கங்கை நீரூற்றுள்ளது மிகச்சிறப்பு. மகாலிங்கமும் உள்ளது.

மேலே 400 படிகள் ஏறிச் சென்றால் பாண்டீசுவரர் என்னும் உச்சிப்பிள்ளையார் கோயிலை அடையலாம்.

கயிலாய நாதர் சுகந்த குத்தலாம்பிகை அம்மைக்கும் நடுவில் குமார சுப்பிரமணியர் சந்நிதி உள்ளது. இவர் ஒரு திருமுகமும் இரு திருக்கரங்களும் கொண்டு ஒரு கையில் வேலும், ஒரு சேவற்கொடியும் கொண்டு விளங்குகின்றார். தலமரம் வன்னி, தீர்த்தம்: நாகதீர்த்தம், கணபதி தீர்த்தம், குமார தீர்த்தம், பைரவ தீர்த்தம்.

27 திருப்புகழ் பாடல்கள் பெற்ற தலம். கந்தரனுபூதியில் இத்தலம் ஒன்றே குறிப்பிடப்பட்டுள்ளது. கந்தரலங்காரத்தில் 8 பாடல்கள் இத்தலம் பற்றியது. அமாவாசை, மகா சிவராத்திரி மிகச் சிறப்பாகும். குன்று தோறாடல் தலங்களில் ஒன்று.

அருணகிரிநாதர் இப் பெருமானை 4000 கண்களால் பார்க்க விரும்பினார்.

''மாயோன் மருகனை மன்றாடி மைந்தனை வானவர்க்கு
மேலான தேவனை மெய்ஞ்ஞான தெய்வத்தை மேதினியில்
சேலார் வயற்பொழில **செங்கோடனைச்** சென்று கண்டுதொழ
நாலாயிரம் கண் படைத்திலனே அந்த நான்முகனே''

எனக் கந்தரலங்காரத்தில் குறிப்பிடுகின்றார்.

## 85. திருச்செங்காட்டங்குடி

நன்னிலத்திலிருந்து 28 கி.மீ. தூரத்தில் உள்ளது.

கஜமுகசுரனைக் கொன்ற பாபம் நீங்க விநாயகர் சிவலிங்கம் ஒன்றை பிரதிஷ்டை செய்து பூசித்ததினால் 'கணபதீச்சுரம்' எனப் பெயர் பெற்றது. இங்கு விநாயகர் யானை முகத்துடன் எழுந்தருளாமல் மனித உருவில் எழுந்தருளியுள்ளார்.

சிறுத்தொண்ட நாயனார் தம் ஒரே மகனான சீராளனைப் பைரவ வேடம் பூண்டு வந்த சிவனுக்குக் கறி சமைத்து பின் இறைவன் திருவருளால் சீராளன் மீண்டும் உயிர் பெற்ற தலம்.

கஜமுகாசுரனைக் கொன்ற போது அவன் செங்குருதி காடாய்ப் பெருகியமையால் ''செங்காட்டங்குடி'' எனப் பெயர் பெற்றது.

இத்தலத்தில் முருகவேள் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு தேவியர் இருவருடன் கிழக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார்.

மாத சஷ்டி, கார்த்திகை நாட்கள் சிறப்பு வழிபாடாகும். கந்த சஷ்டி விழா கார்த்திகைப் பெருவிழாவாகக் கொண்டாடப் பெறுகின்றது.

இத்தலச் சிவபிரான்: கணபதீச்சுரர், உத்திராபதீசுவரர். இறைவி: சூளிகாம் பாள், திருக்குழல் நாயகி. உத்திராபதியார் திருவுரு இங்குத் தனிச்சிறப்பு பெற்றது. தீர்த்தம்: சூர்ய, இந்திர, அக்னி, யம, வருண, வாயு, சந்திர தீர்த்தங்கள். தலமரம்: அத்தி.

திருப்புகழில் ஒரு பாடல் உள்ளது.

## 86. திருச்செந்தூர்



திருச்செந்தூர் முருகன்

திருநெல்வேலிக்கு கிழக்கே 56 கி.மீ. தூரத்தில் உள்ளது. கடல் அலை

களால் வருடப்படும் இத்தலம் 'திருச்சீரலைவாய்' என்ற பெயர் உடையது. அலைவாய், செந்தில், செந்தி, செந்தூர் எனவும் பெயர் பெற்றது. அறுபடை வீடுகளில் இரண்டாவது தலம்.

முதன்முதலில் இங்குதான் முருகப் பெருமான் திருக்கோவில் அமைந்தது. பின்னரே திருப்பரங்குன்றம், திருவேரகம் போன்ற பிற கோயில்கள் அமைந்தன. முருகப் பெருமான் இங்கு மணல் குன்றின் மேல் கடலைப் பார்த்தவாறு கடற்கரையில் எழுந்தருளியுள்ளார்.

முருகப் பெருமான் சூரபத்மன் மீது படையெடுத்து வரும் வழியில் தாரகாசுரனையும் கிரௌஞ்ச மலையையும் அழித்து விட்டுத் தம் படையுடன் தங்கிய தலம். சூரபத்மனை அழித்து, தேவர்களை மீட்டு வந்து தேவர்களின் வழிபாட்டினை ஏற்ற தலம் இது. வியாழ் பகவான் வழிபட்ட தலம்.

குமரகுருபரரின் நாக்கில் தன் திருக்கைவேலினால் எழுதி அதுவரை ஊமையாய் இருந்த குமர குருபரரைப் பேச வைத்து கந்தர் கலிவெண்பா பாட வைத்த தலம்.

சந்தன சைலம் என்னும் மணலும் கல்லும் கலந்த நுரை மணற்கல்மலைக் குன்றைக் குடைந்து அமைந்த கருவறை. மூலவரான செந்தில் வேலவன் வள்ளி தேவசேனாதேவியருடன் கிழக்கு நோக்கி நின்ற திருக்கோலத்தில் எழுந்தருளியுள்ளார். மூலவர் தன் நான்கு திருக்கரங்களில் அபயம், வரதம், பூ, ஜெபமாலை முதலியன கொண்டு விளங்குகிறார். மூலவர் தீபாராதனை முடிந்ததும் பின் பக்கம் உள்ள பஞ்சலிங்கங்களுக்கும் தீபாராதனை நடக்கும். முருகப் பெருமான் பஞ்ச லிங்கங்களைப் பூசித்ததனைக் குறிக்கும் வகையிலேயே இவ்வாறு நடக்கிறது.

மூலவர் தண்டாயுதம் தாங்கிய வண்ணம் சூரசம்ஹாரம் செய்த பிறகு சிவபூஜை செய்வதாக ஐதீகம். இதன் அடையாளமாக மூலவரின் பின் பக்கம் சிவலிங்கம் உள்ளது. சுப்பிரமணியர் குகைக்குப் பின்புறம் தனியே குகைப் பிரகாரம் ஒன்றுள்ளது. குகைக்குள் சென்றால் மூலஸ்தானத்தின் பின்புறம் பஞ்சலிங்க சுயம்பு மூர்த்திகள் உள்ளனர். விடியற்காலம் இந்திரன் முதலிய தேவர்களும் நடுநிசியில் சப்தரிஷிகளும் பூசிப்பதாக ஐதீகம்.

உற்சவ மூர்த்தியான ஷண்முகர் ஆறு திருமுகங்களும், பன்னிரு திருக்கரங்களும் கொண்டு வள்ளி தெய்வயானை உடனிருக்க நின்ற திருக்கோலத்தில் தெற்கு நோக்கிக் காட்சி தருகின்றார். இவரை வழிபட்டே உள்ளே செல்ல வேண்டும்.

ஊரின் முகப்பிலிருந்து திருக்கோவில் செல்லும் வழியில் மூத்த பெருமானாம் விநாயகப் பெருமான் காட்சி தருகின்றார். குமரப் பெருமான் இருக்கும் இடத்தைத் தூண்டிக் காட்டும் வகையில் அமைந்துள்ளதனால் இவரைத் 'தூண்டி விநாயகர்' என்பர்.

நுழைவாயில் முதல் கோயில் வரை சுமார் 0.6 கி.மீ. மழை, வெயில் படாதவாறு அமைக்கப்பட்ட கல்மண்டபம் அழகுறக் காட்சி தருகின்றது.

தெற்கு நோக்கிய திருக்கோவிலில் மேற்கு திசையில் மட்டும் ராஜ கோபுரம் உள்ளது. 3 பிரகாரங்களைக் கொண்டது. 3வது பிரகாரத்திற்கு



வெளியே கடற்கரை ஓரத்தில் அமைந்த குடவரைக் கோவிலில் அர்த்த சித்திரவடிவில் வள்ளி நாயகி காட்சி தருகின்றார். இதை வள்ளி ஒளிந்த தகை என்பர்.

முதல் பிரகாரத்தில் ஜெயந்திநாதர் என்னும் குமரப் பெருமான் வள்ளி தேவசேனாதேவியுடன் காட்சி தருகின்றார். இப்பிரகாரத்தின் தென் மேற்குப் பகுதியில் வள்ளி நாயகிக்கும் வடமேற்குப் பகுதியில் தேவசேனா தேவிக்கும் பளிங்குக் கல்லால் ஆன சந்நிதிகள் உள்ளன.



முருகன் கை வேலால் அமைந்த தீர்த்தம் ''நாழிக்கிணறு'' எனறு அழைக்கப்படுகின்றது. கடற்கரையின் அருகில் சுமார் ஒரு அடி சுற்றளவு கொண்ட இதில் எடுக்க எடுக்கக் குறையாத தீஞ்சுவையுடைய தீர்த்த நீர் எப்போதும் கிடைக்கின்றது. நவக்கிரக சந்நிதி கிடையாது.

மாதக் கார்த்திகை, சஷ்டி, விசாகம் சிறப்பு. வைகாசி விசாகம், ஆவணித் திருவிழா, கந்தர்சஷ்டி, மாசிப் பெருவிழா முக்கிய திருநாட்களாகும்.

திருப்புகழில் 83 பாடல்கள் பெற்ற தலம்.

சித்திரை விழாவில் முருகப் பெருமானுக்கு அன்னாபிஷேகம் நடைபெறுகின்றது. இத்தலத்தில் இலை விபூதி என்னும் பிரசாதம் சிறப்பு.

இங்கு முருகப் பெருமானின் பிரசாதமான இலை விபூதியான பன்னீர்

இலையில் 12 நரம்புகள் உள்ளன. அவை முருகப் பெருமானின் 12 திருக்கரங்களைக் குறிப்பதாகும். இப்பிரசாதம் முருகப் பெருமானின் திருக்கரங்களால் அளிக்கப்படுவதாக நம்பிக்கை.

இக்கோயில் கடல் மட்டத்திற்கும் தாழ்வாகவே உள்ளது. சுற்றுப் பிரகாரத்தில் வள்ளி, தெய்வயானை சந்நிதிகள் உள்ளன.

சிவன் கோயில்களில் நடராஜப் பெருமான், ஏழாம் திருநாளன்று சிவப்பு சாத்தி, வெள்ளை சாத்தி, பச்சை சாத்தி என மூன்று முறை அழித்தல், மறைத்தல், அருளை உணர்த்தி எழுந்தருளியிருப்பது போல ஆறுமுகப் பெருமான் திருவிழாக்களில் ஏழாம் நாளன்று கருவறையிலிருந்து அதி காலை உருகு சட்டத்தில் வருவது தோற்றத்தையும் காலையில் அலங்காரத் துடன் பவனி வருவது காத்தலையும் குறிக்கும்.

சண்முகர் சந்நிதியில் பட்டர்கள் என்றும் சிவாச்சாரியார் பூசை செய்வர். சுப்பிரமணியர் சந்நிதியில் போற்றிமார் பன்னிருவர் மாறி மாறிப் பூஜை செய்வர். இவர்கள் தென் கன்னட நாட்டினர். முக்காணி என்னும் இடத்தி லுள்ள தீட்சிதர்கள் சண்முகர் சந்நிதி தவிர மற்ற சந்நிதிகளில் பூசை செய்வர்.

திருக்கோயிலின் முன் உள்ள கடலுக்கு வதனாரம்ப தீர்த்தம் எனப் பெயர். இதற்கு வடக்கே கடலிலேயே தெய்வயானை தீர்த்தம், லட்சுமி தீர்த்தம், சித்த தீர்த்தம், அட்டதிக் பாலர் தீர்த்தம், காயத்திரி தீர்த்தம், சாவித்திரி தீர்த்தம், சரசுவதி தீர்த்தம், ஐராவத தீர்த்தம், பைரவ தீர்த்தம் என்னும் 9 தீர்த்தங்கள் உள்ளன. வதனாரம்ப தீர்த்தத்திற்குத் தெற்கே வள்ளி நாயகி தீர்த்தம், துர்க்கா தீர்த்தம், ஞானதீர்த்தம், சத்திய தீர்த்தம், ரிஷி தீர்த்தம், தேவதீர்த்தம், பாபவிநாச தீர்த்தம், கந்தபுஷ்கரணி (நாழிக்கிணறு) சேஷ தீர்த்தம், தசகங்கா தீர்த்தம், கந்தமாதன தீர்த்தம், மாருதி தீர்த்தம், பிதுரு தீர்த்தம் என்னும் 13 தீர்த்தங்கள் உள்ளன. இவற்றில் நியமப்படி தீர்த்தமாடினால் எல்லா நலங்களும் கிட்டும்.

## 87. திருச்சி

தட்க்ஷிண கைலாயம் என்பர். இத்தலம் திரிசிராமலை, திரிசிரகிரி, திரிசிரபுரம், முத்தலை மலை, பிரமகிர், ரிஷபாலயம் எனவும் போற்றப் பெறும்.

தாயுமானவர் திருக்கோயில் குன்றின்மேல் அமைந்துள்ளது. இத்தலச் சிவபிரான் செட்டிப் பெண்ணுக்கு மகப்பேறின் போது தாயாக இருந்து உதவிய தனால் இப்பெருமான் 'தாயுமானவர்' எனப் பெயர் பெற்றார். திரிசிரன் வழிபட்டதனால் 'திரிசிராப்பள்ளி' எனப் பெயர் பெற்றது.

இத்தல முருகப் பெருமான் முத்துக்குமாரசாமியாக பன்னிரு திருக்கரங்க ளும் ஆறு திருமுகமும் கொண்டு மயில் மீது அமர்ந்து கிழக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார். வள்ளி தெய்வசேனா தேவியர் இருபுறமும் விளங்கு கின்றனர்.

மற்றொரு சந்நிதியில் முருகப் பெருமான் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு தேவியருடன் நின்ற திருக்கோலத்தில் காட்சி தருகின்றார்.

சித்திரைப் பெருவிழா, கந்தர் சஷ்டி விழா, பங்குனி விழா சிறப்பாகும்.

இத்தலச் சிவபெருமான் தாயுமானவர்; இறைவி: மட்டுவார் குழலம்மை. தீர்த்தம்: காவிரி, நன்றுடையான், தீயதில்லான், சிவகங்கை, சோமரோகிணி. தலமரம்: வில்வம்.

பங்குனி மாதம் 23,24,25 ஆகிய நாட்களில் சூர்ய பூசை நடக்கிறது. திருப்புகழில் 16 பாடல்கள் உள்ளன. இத்தலத்தில் எழுந்தருளியுள்ள உச்சிப் பிள்ளையார் சிறப்பு பெற்றவர்.

## 88. திருத்தணிகை

அரக்கோணத்திலிருந்து 12.8 கி.மீ., திருத்தணி புகைவண்டி நிலையத்திலிருந்து 1.6 கி.மீ. தூரத்தில் உள்ளது. அறுபடை வீடுகளில் குன்றுதோறாடலில் முதல் தலம் இது.

முருகப் பெருமான் வள்ளி நாயகியை மணம் புரிய வேண்டி வந்து தங்கிய தலம். சூரபத்மனுடன் போரிட்டு கோபம் தணிய தங்கிய தலம். எனவே 'செருதணி' என்பர். (செரு - கோபம்)

சாந்தாகிரி, ஸ்ரீபரிபூரணகிரி, அகோர கைவல்யப்ரதம், நாரதப்ரயம் கர்பஜித், மூலாத்ரி, க்ஷணிகாசலம், இந்திரநகரி, இந்திர நீலபர்வதம், கல்லாரகிரி, உற்பலகிரி எனப் பலப் பெயர்கள் இத்தலத்திற்கு உண்டு.

400 அடி உயரம் கொண்ட மலை 365 படிகள் உள்ளன. புத்தாண்டு அன்று நடைபெறும் படி உற்சவம் சிறப்பு.

மலையடிவாரத்தில் முருகப் பெருமான் சிவ வழிபாட்டிற்காக வரவழைத்த தீர்த்தமே சரவணப் பொய்கை என்னும் குமார தீர்த்தம். தென் பகுதியில் இந்திர நீலச்சுனை உள்ளது. நான்காம் பிரகாரத்தில் இந்திர நீலச்சுனை, விஷ்ணு தீர்த்தம், நாகதீர்த்தம் உள்ளன.

மலை ஏறிச் செல்லும் வழியில் பிரம்மச்சுனை என்னும் பிரம்ம தீர்த்தமும் அருகே விநாயகர், பிரமலிங்கம் கோவிலும் உள்ளன.

மேற்குப் பகுதியில் செங்கழுநீர் விநாயகர் கோயில் உள்ளது. இந்திரன் இவரை வழிபட்டதாக ஐதீகம். இந்திரநீலச் சுனையில் கருங்குவளையை வளர்த்து அம்மலர் கொண்டு முருகப் பெருமானை வழிபட்டதாக ஐதீகம்.

3 -ஆம் பிரகாரத்தில் விநாயகரையும் ஐராவதத்தையும் தென்பக்கம் உமாமகேஸ்வரரையும் மேற்குப் பக்கம் உச்சிப்பிள்ளையார் சந்நிதியைம் தரிசிக்கலாம்.

2 ஆம் பிரகாரத்தில் ஏகாம்பரேசுவரர், ஆறுமுகர், முருகப் பெருமான் பூசித்த குமரேசுவர லிங்கம், உருத்திராக்க விமானத்தில் வீற்றிருக்கும் பெரிய உற்சவர் சந்நிதிகளும் உள்ளன.



பஞ்சாட்சரப் படிகள் என்னும் 5 படிகள் ஏறி முதல் பிரகாரம் செல்ல வேண்டும். தென் பகுதியில் வள்ளி நாயகியும் வடபகுதியில் தேவசேனா தேவி சந்நிதியும் உள்ளன.

கருவறையில் தணிகைப் பெருமான் சுந்தரத் திருவுருவுடன் இடக்கரத்தைத் தொடையில் வைத்து வலக்கரத்தில் வேலினைத் தாங்கி தனித்து நின்று காட்சி தருகிறார். இவர் ஞான சக்தீதரர் ஆவார். மயிலுக்குப் பதில் யானை உள்ளது. வள்ளியை மணந்த தலம். வள்ளிமலை அருகில் உள்ளது.



பிரமன் முருகப் பெருமானை வழிபட்டு சிறை நீங்கி இத்தலத்தில் மீண்டும் படைப்புத் தொழிலைப் பெற்றார்.

புஷ்பக்காவடி, பால்காவடி, அங்கப்பிரதட்க்ஷணம் சிறப்பு. சித்திரையிலும் மாசியிலும் பிரம்மோற்சவம், மாசிமகம் தீர்த்தவாரி. விஷ்ணுக் கோயில் களில் சடகோபம் சாதிப்பது போல இங்கு முருகன் திருவடி சாதிப்பர்.

தணிகை முருகன் திருமார்பில் உள்ள குழியில் சாத்தப்படும் சந்தனம் தீராத நோய்களைத் தீர்க்கும் குணமுடையது. சப்தரிஷிகள் முருகனை வழிபட்டதால் இங்கு ஏழு சுனைகள் உள்ளன. தங்க, வெள்ளி ரதங்கள் உள்ளன.

64 திருப்புகழ்ப் பாடல் பெற்ற தலம்.

## 89. திருத்தளூர் - துறையூர்

விழுப்புரத்திற்கு வடக்கே 11 கி.மீ. தூரத்தில் உள்ளது. வீமன் பூசித்ததனால் ''வீமேசுவரம்'' என்ற பெயரும் இத்தலத்திற்கு உண்டு.

இத்தல முருகப் பெருமான் இரு தேவியருடன் கிழக்கு நோக்கியவாறு நின்ற திருக்கோலத்தில் காட்சி தருகின்றார்.

இத்தலச் சிவபிரான்: துறையூர்நாதர், இறைவி: பூங்கோதை நாயகி, மேற்கு நோக்கிய திருக்கோவில்.

திருப்புகழில் ஒரு பாடல் உள்ளது.

## 90. திருநள்ளாறு

காரைக்காலுக்கு மேற்கே 5 கி.மீ. தூரத்தில் உள்ளது. உளிபடாத மூர்த்தித் (சப்தவிடங்க) தலங்களுள் ஒன்று.

முசுந்த மாமன்னன் இந்திரனிடம் இலிங்கங்களைப் பெற்று வந்து நிறுவிய தலங்களில் ஒன்று. நகரவிடங்கர். உன்மத்த நடனம். நள மன்னன் வழிபட்டு கலி நீங்கி அருள் பெற்ற தலம்; எனவே ''திருநள்ளாறு'' எனப் பெயர் பெற்றது.

மதுரையில் சமணர்களோடு சொற்போரிட்ட ஞானசம்பந்தர் 'போக மார்ந்த' எனத் தொடங்கும் இவ்வூர் பதிகத்தை நெருப்பிலிட்டு வேகாதபடி எடுத்தார். எனவே இதற்கு 'பச்சைப் பதிகம்' எனப் பெயர்.

இலிங்கமூர்த்தியின் திருவுரு தர்ப்பைப்புல் சேர்ந்தனபோல் உள்ளது. பிரம்மதேவர் பூசித்ததலம். இத்தல விநாயகர் சொர்ண விநாயகர் ஆவார்.

சனி பகவான் சிறப்போடு விளங்கும் தலம். ஒரு மாடத்தில் சிறிய வடிவில் காகவாகனத்தில் காட்சி தருகின்றார். இதர கிரகங்கள் இவருடன் இல்லை. சனி திசை, புத்தி நடப்பவர்கள் இவரை வழிபட்டு துன்பம் நீங்கப் பெறுவர். சனிப் பெயர்ச்சி சிறப்பாகும்.

இங்கு நந்தியும் பலி பீடமும் வழியிலிருந்து விலகிக் காட்சி தருகின்றன.

மேற்குப் பிரகாரத்தில் கல்யாண சுப்பிரமணியர் சந்நிதி உள்ளது. இவர் ஒரு திருமுகமும் இரு திருக்கரங்களும் கொண்டு மயில் மீது அமர்ந்து காட்சி தருகிறார். ஒரு கையில் பழமும் மற்றொரு கையில் அபயமும் கொண்டு காட்சி தருகின்றார். இரு தேவியரும் அருகில் உள்ளனர். பெருமான் திருவடிகளில் காலணிகள் காணப்பெறுகின்றன.

இறைவன்: தர்ப்பாரண்யேஸ்வரர், இறைவி: பிராணேஸ்வரி. தல விருட்சம்: தர்ப்பை, தீர்த்தம்: நளதீர்த்தம்.

தல விருட்சம் பெயர் கொண்டு 'தர்பபாரண்யம்' என்றும் நளன் பூசித்ததால் 'நளச்சரம்' 'நள்ளாறு' என்றும் பிரமன் பூசித்ததால் 'ஆதிபுரம்'

எனவும் சப்தவிடங்கத் தலங்களில் நகரவிடங்கத் தலம் ஆதலால் 'ஏகவிடங்கபுரம்' எனவும் வழங்கப் பெறுகின்றது.

திருப்புகழில் ஒரு பாடல் உள்ளது.

## 91. திருநாகேஸ்வரம்

கும்பகோணத்திற்குக் கிழக்கே 6 கி.மீ. திருவிடைமருதூருக்குக் கிழக்கே 6 கி.மீ. தூரத்தில் உள்ளது.

சேக்கிழாரின் உள்ளன்பு பெற்ற தலம். சூரியன், சந்திரன், இந்திரன், ஐந்து தலைநாகம் பூசித்த தலம். பாதாள லோகத்திலிருந்து நாகராஜன் வந்து பூசித்ததால் 'நாகேஸ்வரம்' எனப் பெயர் பெற்றது.

இங்குள்ள ராகு பகவான் தலை மீது ஊற்றும் பால் தலையிலிருந்து வழிந்து உடல் மீது வரும் போது கருமை நிறமடைந்து விஷத்தன்மை பெறுகின்றது. இரு தேவியருடன் தனிக் கோவிலில் உள்ளார். ராகு கேது தோஷம் இங்கு வழிபட்டால் நீங்கும்.

இங்கு முருகப் பெருமான் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு நின்ற திருக்கோலத்தில் தேவியருடன் கிழக்கு நோக்கிக் காட்சி தருகின்றார். அருகே மயில் உள்ளது. மூலவரைப் போலவே உற்சவரும் காட்சி தருகிறார்.

மற்றொரு மூலவர் மயில் மீது அமர்ந்து காட்சி தருகின்றார். கிரிகுஜாம்பிகை கோவிலில் பாலசுப்பிரமணியர் காட்சி தருகின்றார்.

இத்தலச் சிவபிரான்: சண்புகாரணியேசுவரர், நாகராஜன், இறைவி: குன்றமுலைநாயகி, கிரிகுஜாம்பாள். தீர்த்தம்: நாகதீர்த்தம், சூர்ய புஷ்கரணி, தலமரம்: சண்பகம். கந்தசஷ்டி, திருக்கார்த்திகை, பங்குனி உத்திரம், சிறப்பான விழாக்களாகும்.

திருப்புகழில் ஒரு பாடல் உள்ளது.

## 92. திருநாமநல்லூர் - திருநாவலூர்

பண்ருட்டி புகைவண்டி நிலையத்திற்குத் தென்மேற்கே 16 கி.மீ. தூரத்தில் உள்ளது.

சுக்கிரன் பூசித்த தலம். சுந்தர மூர்த்தி நாயனார் அவதரித்த தலம். உமாதேவி, சந்திரன், கருடன் பூசித்த தலம்.

இங்குள்ள முருகப் பெருமான் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு தேவியர்களுடன் கிழக்கு நோக்கி நின்றவாறு காட்சி தருகின்றார். உற்சவரும் மூலவரைப் போலவே காட்சி தருகின்றார்.

இங்குத் திருமாலுக்கும் கோவில் உள்ளது. அவர் பக்தவத்சலப் பெரு

மாள் என்று அழைக்கப் பெறுகிறார். திருமாலின் சக்கரத்தால் தோற்றுவிக்கப்பட்ட சக்கர தீர்த்தம், கோமுக தீர்த்தம், சாம்பு நதி, கெடில நதி புண்ணிய தீர்த்தங்களாகும்.

ஊரின் அருகே தண்டபாணிக் கோயில் ஒன்றுள்ளது. திருப்புகழில் ஒரு பாடல் இத்தலத்திற்குரியது.

## 93. திருநெடுங்களம்

திருச்சி, திருவெறும்பூருக்குக் கிழக்கே 11 கி.மீ. தொலைவில் உள்ளது.

இத்தலச் சிவபெருமான்: நித்திய சுந்தரர். இறைவி: ஒப்பிலா நாயகி, தீர்த்தம்: சூர்ய தீர்த்தம்.

முருகப் பெருமான் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு வள்ளி, தெய்வயானையுடன் கிழக்கு நோக்கி நின்ற திருக்கோலத்தில் காட்சி தருகின்றார்.

''மறையுடையாய்'' என்னும் இத்தல பதிகம் படிப்பவரின் துன்பங்களை நீக்கும்.

கந்த சஷ்டி, திருக்கார்த்திகை சிறப்பாகும். திருப்புகழில் ஒரு பாடல் உள்ளது.

## 94. திருப்பரங்குன்றம்

மதுரை மாநகரின் தென்மேற்கே 9.6 கி.மீ. தூரத்தில் அமைந்துள்ளது. பராசர க்ஷேத்திரம் என்பர். பராசர முனிவரின் புதல்வர்களுக்கு முருகன் அருள்புரிந்ததால் இப் பெயர் பெற்றது.

இத்தலம் அறுபடை வீடுகளில் முதல் வீடாக அமைந்த சிறப்புப் பெற்றது. இந்திரன் புதல்வியான தெய்வயானையை மணம் புரிந்து புதுமணக் கோலத்துடன் காட்சி தருகின்றார். இந்திரனே முன்னின்று பங்குனி உத்திர நாளில் மணம் செய்வித்ததாக புராணம்.

கோபுர வாயிலுக்கு முன்பக்கம் அமைந்துள்ள சுந்தரபாண்டியன் மண்டபம் 66 தூண்களைக் கொண்டது. சிற்பக் கலைக்கு எடுத்துக் காட்டாக விளங்கும் வகையில் கலைச் சிறப்புடன் அமைந்துள்ளது.

ஏழு நிலைகளைக் கொண்ட ராஜகோபுரம் உள்ளது. அருகில் இலட்சுமி தீர்த்தமும், அடுத்து பிரமனால் உண்டாக்கப்பட்ட 'பிரம்மகூபம்' என்னும் சந்நியாசிக் கிணறும் உள்ளது. 'பிரம்மகூபம்' தீர்த்தம் நோய் தீர்க்கும் குணமுடையது. குமரன் அபிஷேகத்திற்கு இந்நீரே பயன்படுகிறது.

மயில், நந்தி, மூஷிகம் ஆகிய மூன்று வாகனங்கள் கொடி மரத்தின் முன் உள்ளது. இது இத்தலத்தின் தனிச்சிறப்பு.

மகாமண்டப வாயிலில் இரட்டை விநாயகர், நந்தி தேவர் காட்சி தருகின்றனர். மகாமண்டபத்தில் சோமாஸ்கந்தர், நடராஜர், சண்டிகேசர், நவவீரர், தட்சிணாமூர்த்தி, பைரவர், சந்திரன், சாயாதேவி, சமிதா தேவி சமேத சூரியன் சந்நிதிகள் உள்ளன.



கருவறை குடவரைக் கோயிலாகக் காட்சி தருகின்றது. மலையிலேயே குடைந்து வடிக்கப் பெற்ற அழகிய திருவுருவாக ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு வடக்கு நோக்கி அமர்ந்த கோலம். அருகில் தெய்வயானையும் அமர்ந்துள்ளார். சூரியன், சந்திரன், சித்தர், வித்யாதரர், பிரம்மா, இந்திரன், நாரதர், கலைமகள் தேவர்கள் முதலியோர் இத்திரும ணத்தைக் கண்டுகளிக்கும் வகையில் அனைத்து தெய்வங்களும் எழுந்தரு ளியுள்ளதாக ஐதீகம். இங்கு மூலவரின் வாகனமாக ஆடு, சேவல், யானை, மயில் ஆகிய நான்கும் கீழே காணப் பெறுகின்றன. படை வீடுகளில் இங்கு மட்டுமே பெருமான் இடக்காலை மடித்து வலக்காலை தொங்க

விட்டு இடப்பக்கம் தெய்வயானையும் வலப்பக்கம் நாரதரும் அமர்ந்துள்ள நிலையில் காட்சி தருகின்றார். பிற படைவீடுகளில் நின்ற திருக்கோலத்திலேயே காட்சி தருகின்றார்.

இம்மூலவருக்கு அபிஷேகம் கிடையாது. எண்ணெய்க் காப்பும், புனுகும் மட்டுமே சாத்துவர். வேலுக்குத் தான் எல்லாவித அபிஷேகமும் செய்கின்றனர். நவக்கிரகங்கள் கிடையாது. சனி பகவான் மட்டுமே உள்ளார்.

பிரம்மா, நான்முகன், திருமால், நாரணர் முதலியோர் சூழ சிவபெருமான், உமை, விநாயகர், முருகன் எழுந்தருளியிருப்பதால் இத்தலம் கயிலைக்கு அடுத்த சிறப்பான இடத்தைப் பெறுகின்றது.

மூலவர் சந்நிதியின் அருகே குடவரைக் கோயிலில் பெருமாள், மகாலெட்சுமியுடனும் மதங்க முனிவருடனும் காட்சி தருகிறார். வெளிப்புறச் சுவரில் பெருமாள் வராஹ மூர்த்தியாய் எழுந்தருளியுள்ளார்.

இம்மலை சிவலிங்க வடிவில் அமைந்ததனால் பரங்குன்று எனப் பெயர் பெற்றது. மேரு மலையின் சிகரங்களில் ஒன்று. வாயுவும் ஆதிசேஷனும் தங்களுள் யார் பலசாலி எனப் போட்டி போட்ட போது வாயு தேவன் மேருவின் 'ஸத்பம்' என்ற சிகரத்தைப் பிடுங்கி எறிந்தார். அதுவே பரங்கிரியாயிற்று என்பர்.

சிவபிரான் உமாதேவிக்குப் பிரணவப் பொருளினை உபதேசிக்கையில் தாயின் மடியில் இருந்த பாலமுருகன் அதைக் கேட்டு அறிந்து கொண்டார். குருவழி அறிய வேண்டியதை மறைமுகமாக அறிதல் பாபம் என்பதனால் அதற்குப் பரிகாரம் தேடி முருகன் இங்கு தவம் இருந்தார். சிவனும் உமையும் காட்சி தந்தனர். அவர்களே பரங்கிநாதர், ஆவுடைநாயகி எனப் பெயர் பெற்றனர். அவ்விருவரும் எழுந்தருளிய திருக்கோலம் இப்போது மீனாட்சி சுந்தரேஸ்வரர் ஆலயம் என வழங்கப்படுகிறது. அவர்களை தரிசித்த பின்னரே முருகப் பெருமானைத் தரிசிக்க வேண்டும் என்பது மரபு.

சுந்தரபாண்டியன் மண்டபம் நுண்வேலைப்பாடுகள் கொண்ட சிற்பங்களுடன் காட்சி தருகின்றது. சிவபிரானின் திரிபுரதகனம், நர்த்தன விநாயகர், தேவசேனாதேவி, வீரபாகு ஆகியோர் திருவுருவங்கள் மிக அழகு வாய்ந்தன. தேவசேனை திருமணச் சிற்பம் அழகு வாய்ந்தது.

மலையடிவாரத்தில் கிழக்கே சரவணப் பொய்கை உள்ளது. அதன் அருகே உள்ள பாறை பஞ்சாட்சரப் பாறை எனப்படும். நக்கீரரைக் காக்கும் பொருட்டு வேல் பாறையைப் பிளந்த அடையாளம் தென்பரங்குன்றில் உள்ளது. நக்கீரர் ஆலயம் உள்ளது.

புரட்டாசி மாதம் நவராத்திரிக்கு முன்பாக வேலாயுதத்தை மலை உச்சிக்குக் கொண்டு செல்வர்.

49 படிகள் உள்ளன. இங்கு நான்கு தீர்த்தங்கள் சத்திய கூபம், பிரமகூபம்,

இலட்சுமி தீர்த்தம், சரணவப் பொய்கை உள்ளன. மலைமேல் சரவணத் தீர்த்தம், காசிச்சுனை உள்ளன. இதில் நல்ல அழகிய மீன்கள் உள்ளன. கோயிலின் உள்ளே உள்ள சன்னியாசி தீர்த்தமே (கிணறு) அபிஷேகத்திற் குப் பயன்படுத்தப்படுகிறது.

இத்தலச் சிவபெருமான் சத்திய கிரீசுவரர் தனிச்சந்நிதி. அன்னபூரணி தேவி பரிவாரங்களுடன் குகைக் கோவிலில் காட்சி தருகிறார்.

மலையடிவாரத்தில் அமைந்த சரவணப் பொய்கை முருகப் பெருமான் திருக்கை வேலினால் உருவாக்கப்பட்டது.

லக்ஷ்மி தீர்த்தக்கரை விநாயகரை வணங்கி உப்பு, மிளகு முதலியவற்றை தீர்த்தத்தில் போட்டால் சர்ம நோய்கள் நீங்கும்.

தெய்வயானைத் திருமணம் நடந்த பங்குனி உத்திரத்தன்று மட்டும் மூலவருக்குத் தங்கக் கவசம் சாத்துவர்.

இங்குள்ள தூண் ஒன்றில் முருகப் பெருமான் தேவயானையின் திருக்கரத் தினைப் பற்றி மணக்கோலத்தில் விளங்க அருகில் தேவேந்திரன் தாரை வார்த்துக் கொடுக்கும் காட்சியுள்ளது. இதில் தேவி மணப்பெண் போல வெட்கத்துடன் தலை சாய்த்து ஓரக்கண் கொண்டு பெருமானைக் கண்டு களிக்கும் காட்சி ஒரு அரிய காட்சியாகும்.

இங்குள்ள குடவரைக் கோயிலில் கருவறையின் பின்புறச் சுவரில் சோமாஸ் கந்த வடிவம் காணப் பெறுகின்றது. முருகன் தனிக் கருவறையில் காட்சி தருகின்றார். இதில் உள்ள மூன்று வடிவங்களின் நடுவில் உள்ளது முருகப் பெருமான். வலப்புறம் தெய்வயானையும் இடப்புறம் நாரதரும் உள்ளார்.

கொற்றவை, விநாயகர், திருமால், சிவன், உக்கிர நரசிம்மர், வைகுந்த நாதன், வராகப் பெருமாள் சந்நிதிகள் உள்ளன.

இங்குள்ள உமையாண்டவர் கோயில் சிற்பக் கலைக்குச் சிறந்த இடமாக உள்ளது மலை மேல் பஞ்ச பாண்டவர் படுக்கையும் சுனையும் உள்ளது. மலை உச்சியில் இரு பாறைகட்கு இடையே சிக்கந்தர் பாவா என்னும் முகமதியரின் சமாதியும் மண்டபமும் உள்ளது.

முருகப் பெருமான் தேவசேனாதேவியை மணந்த பங்குனி உத்திரத்திரு நாள் மிகச்சிறப்பாக கொண்டாடப்படுகின்றது.

திருப்புகழில் 14 பாடல்கள் உள்ளன.



# 95. திருப்பதி

திருப்பதி மலைக்கோவிலுக்குச் செல்லும் பாதையில் கபிலேஸ்வரர் திருக்கோயில் உள்ளது. இதனைக் 'கபில தீர்த்தம்' என்றும் கூறுவர்.

இங்கு எழுந்தருளியுள்ள சிவபிரான்: கபிலேஸ்வரர். இறைவி: காமாட்சி யம்மை. இங்கு 'சுப்பிரமணிய சுவாமிவாரு' என முருகப் பெருமானை அழைப்பர்.



இவர் ஆறுதிருமுகங்களும் பன்னிரு திருக்கரங்களும் கொண்டு மயில் மீது அமர்ந்து அருகில் இரு தேவியருடன் காட்சி தருகிறார்.

மாமனாகிய திருமாலும் (வேங்கடவனுடன்) மருமகன் முருகனும் இத்தலத்தில் எழுந்தருளியிருப்பது சிறப்பு. கண்கண்ட தெய்வமாம் வெங்க டாசலபதி அருள் பெறவும் இத்தலம் சிறப்பானது.

இருவரும் கண்கண்ட தெய்வம். இருவரும் பெருமான் என்னும் பட்டம் உடையவர்கள். திருப்பதி தேவஸ்தான நிர்வாகத்திலேயே இத்தலம்

அமைந்துள்ளது. ''உலகீன்ற பச்சை உமையணன் வடவேங்கிடத்திலுறைப வன்'' என்று ஸ்ரீவாஞ்சியப் பாடலில் போற்றுகின்றார் அருணகிரிநாதர். ஒரு பாடல் இத்தலத்திற்குரியது.

## 96. திருப்பராய்த்துறை



திருச்சியிலிருந்து 18 கி.மீ. எலமனூர் புகைவண்டி நிலையத்திலிருந்து 2.5 கி.மீ. தூரத்தில் உள்ளது.

இந்திரன், குபேரன், சப்தரிஷி பூஜித்த தலம். காவிரியின் கரையில் அமைந்த தலம்.

இங்கு சிவபிரான்: தாருகாவனேசுவரர், பராய்த்துறை நாதர். இறைவி: ஹேமவர்ணாம்பிகை, பொன்மயிலம்மை. தீர்த்தம்: காவிரி. புரட்டாசி மாதம் 18ஆம் நாள் சூரிய ஒளி சிவபெருமான் மீது விழும். சுயம்பு மூர்த்தி லிங்கம், தல மரம்: பராய்மரம்.

இங்கு முருகப் பெருமான் ஒரு திருமுகமும் இரு திருக்கரங்களும் கொண்டு வேழ, வேட மங்கையருடன் மயில் மீது அமர்ந்து காட்சி தருகின்றார். உற்சவரும் இதே அமைப்பினை உடையவர்.

வைகாசி விசாகம், திருக்கார்த்திகை, கந்தர் சஷ்டி சிறப்பான விழாக்களாகும் திருப்புகழில் ஒரு பாடல் உள்ளது.

## 97. திருப்பனந்தாள்

கும்பகோணத்திற்கு வடகிழக்கே 16 கி.மீ. ஆடுதுறை புகைவண்டி நிலையத்திலிருந்து 9 கி.மீ. தூரத்திலும் உள்ளது.

தாடகை என்னும் பெண்ணின் அன்பிற்காகச் சாய்ந்திருந்த சிவலிங்கப் பெருமானைப் படைகள், யானை முதலியவைகள் கயிறு கட்டி இழுத்தும் நிமிராமல் குங்கிலியக்கலய நாயனார் தம் கழுத்தில் கயிறு கட்டி இழுக்க அவர் அன்புக்காக நிமிர்ந்து அருளிய தலம்.

இத்தலச் சிவ பெருமான்: சடையப்பர்; இறைவி: பெரியநாயகி, தலமரம்: ஆண்பனை, தீர்த்தம்: நாககன்னிகை, பிரம்ம தீர்த்தம், இன்னும் பல.

மார்ச், செம்படம்பர் மாதங்களில் குறிப்பிட்ட நாட்களில் சூரிய ஒளி இறைவன் மேல் விழுகின்றது.

இங்கு முருகப் பெருமான் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு மயிலின் அருகில் நின்ற திருக்கோலத்தில் இருபுறமும் தேவியர் சூழக் கிழக்கு நோக்கிக் காட்சித் தருகின்றார்.

இங்கு ஒரு உற்சவர் மூலவரைப் போன்றும் மற்றொரு உற்சவரான முத்துக்குமாரசுவாமி மயிலின்றியும் காட்சி தருகின்றனர்.

தருமபுர ஆதீனம், குமரகுருபரர் மடம் இங்குள்ளது. திருப்புகழில் ஒரு பாடல் உள்ளது.

## 98. திருப்பாதிரிப்புலியூர்

கடலூர் N.T. என்று அழைக்கப்படுகின்றது. விழுப்புரத்திற்குத் தெற்கே 45 கி.மீ. சிதம்பரத்திற்கு வடக்கே 45 கி.மீ. கடலூரிலிருந்து 5 கி.மீ. தூரத்திலும் உள்ளது.

வியாக்கிரபாத முனிவர் பூசித்ததினால் இது வடபுலியூர் எனப்படுகிறது. தலமரம் பாதிரி மரம். எனவே 'திருப்பாதிரிப்புலியூர்' எனப் பெயர் பெற்றது. வடபுலியூர், கடை ஞாழல், பாடலபுரம், கன்னிவனம், கன்னி காப்பு, புலிசை என்றும் குறிப்பிடப் பெறுகின்றது.

இங்கு எழுந்தருளியுள்ள சிவபெருமான் தோண்றாத்துணை நாதர், பாலீசுவரர், இறைவி: பெரிய நாயகியம்மை; தீர்த்தம்: கெடிலநதி.

நாவுக்கரசரைச் சமணர்கள் கல் தூணில் கட்டிக் கடலில் தள்ளிவிட அவர் ''சொற்றுணை வேதியன்'' என்னும் நமச்சிவாயப் பதிகம் பாடச் சிவபிரான் கல்லையே தோணியாக்கி அவரைக் கரையேற்றினார். அவர் கரை ஏறிய இடம் 'கரையேறவிட்ட குப்பம்' என்று அழைக்கப்படுகின்றது.

இத்தலத்தில் ஆறுமுகப் பெருமான் வடக்கு நோக்கிய மயிலின் மீது ஒரு காலை மடித்து அமர்ந்து கிழக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார். தேவியர் இருவரும் அருகே நின்ற திருக்கோலத்தில் காட்சி தருகின்றனர்.

இங்கு வலம்புரி விநாயகரின் இரு கைகளிலும் பாதிரி மலர்க் கொத்துக் கள் காணப்பெறுகின்றன.

இங்குத் தேவி தவம் இருந்து இறைவனை அடைந்ததால் இறைவன் திருக்கோயிலிலேயே தினமும் இறைவி பள்ளியறையில் எழுந்தருளுவது தனிச்சிறப்பாகும்.

வைகாசி மாதம் பிரமோற்சவம், ஆடிவெள்ளி, திருக்கார்த்திகை சிறப் பான விழாக்களாகும். திருப்புகழில் ஒரு பாடல் இத்தலத்திற்குரியது.

## 99. திருப்பாற்கடல் - திருக்கரபுரம்

சென்னை - வேலூர் பேருந்து மார்க்கத்தில் காவேரிப்பாக்கத்திற்கு அடுத்த ஒரு கி.மீ. தூரத்தில் உள்ளது. இதனைக் 'கரபுரம்' என்பர்.

அருணகிரிநாதர், கரபுரம் எனப்பாடிய தலம் இதுவே. திருவிரிஞ்சிபுரம், உத்தம சோழபுரமும் 'கரபுரம்' என்று அழைக்கப்படுவதால் அதனையும் அருணகிரிநாதர் பாடல் பெற்ற தலம் என்பாரும் உண்டு.

திருப்பாற்கடல் என்னும் இத்தலத்தில் கரபுரீசர் ஆலயத்தில் ஆறுமுகப் பெருமான் பன்னிரு திருக்கரங்களுடன் மயில் மீது அமர்ந்து கிழக்கு நோக்கிக் காட்சி தருகின்றார். தேவியர் இருவரும் இருபுறமும் காட்சி தருகின்றனர்.

தட்சிணாமூர்த்தி, திருமால், பிரமன், திருவுருவங்கள் சிறப்பு.

திருப்புகழில் ஒரு பாடல் உள்ளது.

## 100. திருப்புத்தூர்

காரைக்குடியிலிருந்து 20 கி.மீ. தூரத்திலும், குன்றக்குடியிலிருந்து 11 கி.மீ., பிள்ளையார்பட்டியிலிருந்து 24 கி.மீ. தூரத்திலும் அமைந்த தலம். கொன்றைவனம் (சம்யாஹவனம்) பிரம்மதேசம், ஸ்ரீலெட்சுமிபுரம், கௌரி புரம், ஸ்ரீமன்நவபுரம் என்ற பெயர்களும் இத்தலத்திற்குண்டு.

இங்கு முருகப் பெருமான் 2ம் பிரகாரத்தில் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு மயிலின் முன் கிழக்கு நோக்கி நின்ற கோலத்தில் காட்சி தருகின்றார் தேவியர் இருவரும் அருகில் உள்ளனர்.

கார்த்திகை, உத்தரம், தைப்பூசம் சிறப்பாகும். தமிழகத்தில் பைரவர் திருக்கோலம் சிறப்பாக அமைந்த தலம் இதுவே என்பர். இங்கு நடராஜரும் சிவகாசி அம்மையும் சிலாவிக்கிரகங்களாக உள்ளனர். இங்கு நடராஜர் கௌரி தாண்டவ மூர்த்தியாகக் காட்சி தருவது தனிச்சிறப்பாகும். தலமரம்: சரக்கொன்றை. தீர்த்தம்: திருத்தலத் தீர்த்தம் (ஸ்ரீதேவி தீர்த்தம்) சிவகங் கைத் தீர்த்தம்.

இத்தலச் சிவபிரான்: திருத்தளி நாதர், இறைவி: சிவகாமி அம்மை. திருமகள் வழிபட்ட தலம்.

## 101. திருப்புவனம்

கும்பகோணம் - மாயூரம் பேருந்து வழியில் கும்பகோணத்திலிருந்து 6கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது.

வரகுண பாண்டியனுக்கு ஏற்பட்ட பிரம்மஹத்தி தோஷம் திருவிடைமரு தூரில் வழிபட்டு நீங்கியது. ஆயினும் நடுக்கம் தீராததனால் இத்தலச் சிவபெருமானை வணங்கி நடுக்கம் தீரப் பெற்றார். எனவே இத்தலச்

சிவபிரான் (கம்பஹரேசுவரர்) 'நடுக்கம் தீர்த்த பெருமான்' என வழங்கப் பெறுகின்றார். இறைவி: அறம் வளர்த்த நாயகி (தர்மசம்வர்த்தினி), தீர்த்தம்: சரப, பிரம்ம, பிருகு, சித்த தீர்த்தங்கள், தலமரம்: வில்வ மரம்.

திருமால் நரசிம்ம அவதாரம் எடுத்து இரணியனை வதைத்த பின்னும் தன் சீற்றம் அடங்காது இருப்பது கண்டு தேவர்கள் சிவபெருமானை வேண்ட அவர் சரபமூர்த்தி வடிவம் கொண்டு நரசிங்கப் பெருமானின் சீற்றத்தினை அடக்கினார். அச்சரபமூர்த்தி இத்தலத்தில் அமைந்துள்ளது. பகையினை வெல்ல விரும்புவோர் ஞாயிற்றுக் கிழமை தோறும் இப்பெரு மானை வணங்கி பகை தீரப் பெறுகின்றனர்.

இங்கு முருகப் பெருமான் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு தேவியர் இருவரும் சூழ நின்ற திருக்கோலத்தில் கிழக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார். மூலவரும் உற்சவரைப் போன்று விளங்குகின்றார்.

தைக் கிருத்திகையில் 108 காவடிகள் எடுப்பது சிறப்பு. கந்தர்சஷ்டி, திருக்கார்த்திகை, பங்குனி உத்தரம் பெருவிழாக்களாகக் கொண்டாடப் பெறுகின்றது. திருப்புகழில் ஒரு பாடல் உள்ளது.

## 102. திருப்புனவாயில்

அறந்தாங்கியிலிருந்து 48 கி.மீ. தொலைவில் உள்ளது. இத்தலம் பழம்பதி, விருத்தபுரி என்றும் வழங்கப் பெற்றது.

நந்தியும், மூல லிங்கமும், ஆவுடையாரும் மிகப் பெரியன. சுவாமிக்கு 3 முழமும், ஆவுடையாருக்கு 30 முழமும் துணி வேண்டும். இதையே ''மூன்று முழமும் ஒரு சுற்று, 30 முழமும் ஒரு சுற்று'' என்று வழங்குவர். இத்தல சிவபெருமான்: பழம்பதிநாதர், இறைவி: கருணைநாயகி, தீர்த்தம்: லட்சுமி, பிரம்ம தீர்த்தங்கள். இங்கு 14 சிவலிங்கங்கள் உள்ளன. பாண்டிய நாட்டின் 14 திருத்தலங்களின் மூர்த்திகள் என்பர். தலத்தின் அருகே பாம்பாறு (சர்ப்ப நதி) ஓடுகின்றது.

இங்கு உட்பிரகாரத்தில் வடமேற்குப் பகுதியில் ஒரு திருமுகமும், நான்கு திருக்கரங்களும் கொண்டு கிழக்கு நோக்கி நின்ற திருக்கோலத்தில் முருகப் பெருமான் காட்சி தருகின்றார். உற்சவரும் மூலவரைப் போன்று காட்சிதரு கின்றார்.

வைகாசி விசாகம், கார்த்திகை சோமவாரம், தைப்பூசம் பெருவிழாக்களா கும். திருப்புகழில் ஒரு பாடல் உள்ளது.



## 103. திருப்பூந்துருத்தி

தஞ்சாவூருக்கு வடக்கே 13 கி.மீ. தூரத்தில் உள்ளது.

சோழ மன்னன் ஒரு பூந்துருத்தியை (பூக்குடலை) வைத்துப் பூஜிக்கச் செய்ய அத்துருத்தியே லிங்கமானது. எனவே இத்தலப் பெயர் 'பூந்துருத்தி' என்றாயிற்று. இத்தலச் சிவபெருமான்: புஷ்பவனநாதர், பூந்துருத்திநாதர், இறைவி: அழகார்ந்த நாயகி, சௌந்தராம்பிகை, தீர்த்தம்: சூரிய புஷ்கரணி, காசி கங்கை, தலமரம்: வன்னி.

இங்கு முருகப் பெருமான் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு இரு தேவியருடன் கிழக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார். மயில் பின்புறம் உள்ளது. உற்சவரும் மூலவரைப் போன்று காட்சி தருகின்றார்.

திருஞானசம்பந்தருக்காக இத்தலத்தில் நந்தி விலகியதாக ஐதீகம். திருப்புகழில் ஒரு பாடல் உள்ளது.

## 104. திருப்போரூர்

சென்னை - மாமல்லபுரம் சாலையில் 46.5 கி.மீ., (செங்கல்பட்டிலிருந்து 16 கி.மீ.) தூரத்தில் உள்ளது. இத்தலத்திற்கு சமரபுரி, (யுத்தபுரி) சமரமாபுரி, செருவூர் என்ற பெயர்களும் உண்டு.

முருகப் பெருமான் தேவியருடன் கிழக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார். சுயம்பு மூர்த்தி. தாலத்தினால் (மரத்தால்) ஆன திருமேனி. எனவே இவருக்கு அபிஷேகம் கிடையாது. புனுகு மட்டும் சாத்தப்படும். கவசம் சாத்தி ஆடை, ஆபரணம் அணிவிப்பர். பீடத்தின் கீழே வள்ளி, தெய்வயானையுடன் சிறிய உருவில் எழுந்தருளியுள்ள முருகப் பெருமானுக்கே அபிஷேக வழிபாடு உண்டு. மூலமூர்த்தியின் திருக்கரங்களில் ஜபமாலையும், கமண்டலமும் உள்ளது. ஆறுமுகப் பெருமான் சந்நிதியில் சிதம்பர சுவாமிகளால் ஸ்ரீசக்கர இயந்திரம் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளது.

இத்தலத்து முருகப் பெருமான் திருக்கோயில் மிகவும் பழமையடைந்து சிதைந்து முருகப் பெருமான் திருவுருவமும் தேவியர் திருவுருவமும் பெண் பனைமரம் ஒன்றின் கீழ் புதையுண்டு கிடந்தது. அங்குப் புற்று ஒன்றும் தோன்றி வளர்ந்தது

சிதம்பர சுவாமிகள் கனவில் தோன்றிய முருகப் பெருமான் பழைய கோயிலையும் திருவுருவையும் தற்போதைய நிலையையும் உணர்த்தினார்.

சிதம்பர சுவாமிகள் திருப்பணியில் தான் தற்போதைய கோயில் எழுப்பப்பட்டது. சிதம்பர சுவாமிகளால் 726 பாடல்களால் போற்றிப் புகழ்ந்த திருப்போரூர் சந்நிதி முறை இத்தலத்துப் பெருமான் புகழ் பாடுவதாகும்.

தனி அம்பாள் சந்நிதிகள் உள்ளன.

முற்காலத்தில் இங்கு அபிஷேக மூர்த்தியாக விளங்கிய மூர்த்தி



இப்போது சென்னை கந்த கோட்டத்தில் மூலவராக இருப்பதாக வரலாறு. நான்கு திருப்புகழ் பாடல்கள் பெற்ற தலம்.

இத்திருத்தலத்தில் முருகப் பெருமானின் பல்வேறு திருவுருவங்கள் சிறப்புடன் காட்சி தருகின்றன. வேறு எங்கும் இது போன்ற அரிய முருகப் பெருமானைத் தரிசிக்க முடியாது.



இரண்டாவது திருச்சுற்றின் நுழைவாயிலினை அடுத்து முருகப் பெருமான் பிரம்ம சாஸ்தா திருக்கோலத்தில் எழுந்தருளியுள்ளார். முன் இரு

திருக்கரங்களில் அபய, வரத முத்திரைகளும் பின் இரு திருக்கரங்களில் அக்கமாலையும், கமண்டலமும் காணப்படுகின்றன. இங்கு முருகப் பெருமானின் வாகனமாக சிங்கம் பெருமானின் பின்புறம் உள்ளது. இது வேறு எங்கும் காணமுடியாத அரிய படைப்பாகும்.

இதனை அடுத்துள்ள முருகப் பெருமான் முன் இரு திருக்கரங்களில் அபய, வரத முத்திரைகளும் பின் இரு திருக்கரங்களில் வச்சிரமும், சக்தியும் விளங்க நின்ற திருக்கோலத்தில் காட்சி தருகின்றார். இவருக்கு வாகனமாக ஆடு பின்புறம் உள்ளது. இது போன்ற திருவுருவினை வேறு எங்கும் காண முடியாது.

இங்கு முருகப் பெருமான் 'குருநாதராக' எழுந்தருளியுள்ளார். இவ் அரிய திருவுருவம் முக மண்டபத்தின் முன் வரிசையில் முகமண்டபத்தை ஒட்டிய தூணில் காணப்படுகின்றது. நான்கு திருக்கரங்களில் முன் வலக்கை அபய முத்திரையுடனும் முன் இடக்கை வரத முத்திரையுடனும் பின் வலக்கையில் அக்கமாலையும் பின் இடக்கையில் கமண்டலமும் விளங்க கால்களை ஒன்றின் மேல் ஒன்று போட்ட நிலையில் காட்சி தருகின்றார். இவரது வாகனமான மயில் இருக்கையின் கீழ் தோகை விரித்த நிலையில் காட்சி தருகின்றது. முருகப் பெருமானின் வலக்கால் மயிலின் தலைமேலும் இடக்கால் மயிலின் தோள் மீதும் காணப்படுகின்றது. அருகே அகத்திய முனிவர் இரு கரங்களையும் கூப்பிய நிலையில் பாடங் கேட்கும் நிலையில் காணப்படுகின்றார். இவ்வரிய திருவுருவம் வேறு எங்கும் காண முடியாத தொன்றாகும்.

இங்கு முருகப் பெருமான் 'ஆடல்வல்லான்' தோற்றத்திலும் எழுந்தருளி யுள்ளார். பொதுவாக முருகப் பெருமான் திருநடனக் கோலத்தை எங்கும் காண முடியாது. இத் திருக்கோயிலின் முகமண்டபத்தினை அடுத்த மண்டபத்தின் மூன்றாவது வரிசைத் தூண்களில் முகமண்டபத்தை ஒட்டிய தூணில் முருகப் பெருமான் 'ஞானநடனம்' புரிந்து காட்சி தருகின்றார். ஐந்து திருமுகங்களும் பன்னிரு கரங்களும் கொண்டு இருபுறமும் இரு முனிவர்கள் விளங்கக் காட்சி தருகின்றார்.

## 105. திருமாகாளம்

தஞ்சை பேரளம் புகை வண்டி நிலையத்திலிருந்து 4 கி.மீ. தொலைவில் உள்ளது.

அம்பன், அம்பாசூரன் என்னும் இரு அசுரர்களைக் கொன்ற பாபம் தீர காளி தவம் செய்த தலம். மகாள முனிவர் பூசித்ததனால் திருமாகாளம் எனப் பெயர் பெற்றது. மாகாளி பூஜித்ததனால் மாகாளிபுரம் என்று பெயர் பெற்றது.

இத்தலச் சிவபெருமான்: மகாகாளநாதசுவாமி, இறைவி: பயக்ஷாம் பிகை, தீர்த்தம்: மகாளதீர்த்தம், தேவ தீர்த்தம்.

இங்கு முருகப் பெருமான் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு தேவியருடன் கிழக்கு நோக்கி நின்ற திருக்கோலத்தில் காட்சித் தருகின்றார். உற்சவர் மயில் மீது ஒரு கால் கொண்டு வேல் ஏந்தி காட்சி தருகிறார்.

பாண்டிச்சேரி செல்லும் வழியில் மரக்காணத்தை அடுத்த திருச்சிற்றம்பல கூட்டுச் சாலையிலிருந்து 5 கி.மீ. தொலைவில் 'மாகாளம்' என்ற தலம் உள்ளது. வெடித்துச் சிதறி இணைந்த திருவுருவம் கொண்ட சிவலிங்கம். ஸ்ரீமாகாளேஸ்வரர் ஆலயத்தின் பிரகாரத்தில் முருகப் பெருமான் தேவிய ருடன் அமர்ந்து அருள்பாலிக்கின்றார்.

திருப்புகழில் 'மாகாளம்' என ஒரு பாடலில் குறிக்கப்பட்டுள்ளது. இது இவ்விரு கோயிலுக்கும் பொருந்துவதாக உள்ளது.

## 106. திருமாணிக்குழி

திருப்பாதிரிப்புலியூர் (கடலூர் N.T) க்கு மேற்கே 4 கி.மீ. தொலைவில் உள்ளது. தட்க்ஷண கங்கை என்னும் கெடில நதிக்கரையில் அமைந்த தலம்.

இறைவன் எப்பொழுதும் இறைவியுடன் இணைபிரியாது இருப்பதாக ஐதீகம். எனவே எப்பொழுதும் இறைவன் திருவுருமுன்பு திரையிடப்பட்டி ருக்கும். பதினோரு உருத்திரர்களுள் வீமர் என்பவர் திருவுரு திரையில் எழுதப்பட்டுள்ளது. இவருக்கு முதலில் அர்ச்சனை, பூஜை நடைபெறும். இறைவர்: மாணிக்க வரதர், இறைவி: மாணிக்கவல்லி, தீர்த்தம்: மாணிக்க தீர்த்தம், கெடில நதி, தலமரம்: கொன்றை.

இத்தலம் சையோக ஸ்தானம் எனப்படும். இறைவன் கொன்றை மரத்தடியில் தோன்றியவர். பிரம்மச்சாரியான (பிரம்மச்சாரி - மாணி) வாமனன் சிவபெருமானைப் பூசித்ததலம். மாவலியைக் கொன்ற பாவம் தீர இங்கு பூசித்தார்.

மேற்குப் பிரகாரத்தில் ஆறுமுகப் பெருமான் பன்னிரு திருக்கரங்களும் கொண்டு மயில் மீது அமர்ந்து தேவியர் இருவர் உடன் நிற்க கிழக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார். மயில் வடக்கு நோக்கியுள்ளது. திருவாசி இல்லை.

உற்சவர் ஒருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு இரு தேவியரு டன் நின்ற கோலத்தில் காட்சி தருகின்றார்.

கார்த்திகை மாதம் பிரம்மோற்சவம். திருப்புகழில் ஒரு பாடல் இத்தலத் திற்குரியது.



## 107. திருமாந்துறை

திருச்சியை அடுத்த திருவானைக்காவலிலிருந்து வடகிழக்கே 9 கி.மீ. லால்குடிக்கு மேற்கே 5 கி.மீ. தொலைவில் உள்ளது.

சூரியன், சந்திரன், கண்ணுவ முனிவர், மிருகண்ட முனிவர் பூசித்த தலம். தலமரம்: மாமரம். ஆதலால் அம்ரவனம், மாந்துரை எனப் பெயர் பெற்றது.

மேற்குப் பிரகாரத்தில் முருகப் பெருமான் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு தேவியர் உடன் விளங்க கிழக்கு நோக்கி நின்ற கோலத்தில் காட்சி தருகின்றார். முருகப் பெருமான் சுமார் 5 அடி உயர கம்பீரமான தோற்றப் பொலிவு உடையவர். தனியே தண்டாயுதபாணி சந்நிதி உள்ளது.

வைகாசி விசாகம், பங்குனி உத்திரம் சிறப்பாகும். திருப்புகழில் ஒரு பாடல் உள்ளது.

## 108. திருமுருகன்பூண்டி

அவிநாசியிலிருந்து 4.8 கி.மீ. தூரத்தில் உள்ளது.

சிவபிரானை முருகப் பெருமான் பூசித்த தலங்களுள் திருச்செந்தூர், திருசேய்ஞ்ஞலூர், திருமுருகன்பூண்டி முக்கியமானவைகளாகும்.

இத்தலத்தில் முருகன் பூசித்த மூர்த்தியின் திருப்பெயர் திருமுருகநாதர், சுயம்புமூர்த்தி, அம்மை முயங்குபூண் முலைவல்லி. இங்குள்ள பிரம்ம தீர்த்தத்தில் நீராடி இம் முருகநாதரை வழிபட்டால் பிரம்மஹத்தி, பைத்தியம், பில்லி, சூன்யம் அனைத்தும் விலகும். தலமரம்: குருக்கத்தி (மாதவி)

முருகப் பெருமான் முன் பக்கம் ஐந்து திருமுகத்துடனும் பின்னால் ஒரு திருமுகமும் ஆக ஆறு திருமுகங்களும் பன்னிரு திருக்கரங்களும் விளங்க பின்புறம் மயில் நிற்கத் தென் திசை நோக்கிக் காட்சி தருகிறார். உற்சவப் பெருமான் வள்ளி தெய்வயானையுடன் காட்சி தருகிறார். இது அபூர்வப் படைப்பாகும்.

திருச்செந்தூர் போன்று முருகப் பெருமான் கருவறையில் சிவலிங்கம் ஒன்றும் உள்ளது. இங்குள்ள சண்முக தீர்த்தம் முருகப் பெருமான் தாம் பூசனை செய்வதற்காகத் தம் வேலால் தோண்டியது. இத்தீர்த்தம் விசேஷமானது.

சுந்தரமூர்த்தி நாயனாரிடமிருந்து சிவகணங்கள் பொற்காசுகளைப் பறித்த நிகழ்ச்சி நடந்த தலம். இதைக் காட்டும் சிற்பங்கள் உள்ளன.

கார்த்திகை, சஷ்டி, விசாகம் சிறப்பு நாட்கள். திருப்புகழில் ஒரு பாடல்



உள்ளது. புத்தி கோளாறு, செய்வினை போன்றவைகளால் துன்புறும் மக்கள் இங்குத் தங்கி பயன் பெறுகின்றனர்.

## 109. திருமுல்லைவாயில்

சென்னையிலிருந்து ஆவடி செல்லும் வழியில் 16 கி.மீ., திருவேற்காட்டில் இருந்து 6 கி.மீ., அம்பத்தூரிலிருந்து 2.5 கி.மீ. தொலைவில் உள்ளது.

திருக்கோவிலின் உள்பிரகாரத்தின் வடபக்கம் முருகப் பெருமான் தனிச்சந்நிதி உள்ளது. இங்கு முருகப் பெருமான் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு தேவியர் இருவருடன் நின்ற கோலத்தில் வடக்கு நோக்கிக் காட்சி தருகின்றார். மயில் பின்புறம் உள்ளது. சுமார் 2 அடி உயரம் கொண்டவர்.

உற்சவர் ஒரு திருமுகமும் நான்கு கரங்களும் கொண்டு தேவியருடன் எழுந்தருளியுள்ளார். சிவசுப்பிரமணிய சுவாமி சந்நிதியில் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு காட்சி தருகின்றார்.

அர்த்த மண்டபத்தில் 2.5 அடி சுற்றளவு உடைய 11 அடி உயர இரு வெள்ளெருக்குத் தூண்கள் உள்ளன.

இத்தலச் சிவபிரான்: மாசிலாமணீசுவரர், இறைவி: கொடியிடை நாயகி; தீர்த்தம்: பாலாறு, சுப்பிரமணிய தீர்த்தம், தலமரம்: முல்லைக் கொடி, நந்தி கிழக்கு நோக்கி இறைவருக்கு முதுகு காட்டி சந்தனக் காப்புடன் காட்சி தருகிறார். சுயம்புமூர்த்தி லிங்கத்தின் மீது ஒரு சிறுலிங்கம் போன்ற திருவுரு உள்ளது.

திருப்புகழில் மூன்று பாடல்கள் இத்தலத்திற்குரியன.

## 110. திருவண்ணாமலை



வேலூரிலிருந்து 80 கி.மீ. தொலைவில் உள்ளது. விழுப்புரத்திலிருந்து காட்பாடி செல்லும் புகைவண்டிப் பாதையில் உள்ளது.

11 நிலைகள் கொண்ட 127 அடி உயர ராஜகோபுரம் அழகுற காணப் பெறுகின்றது. எதிரில் சிவகங்கை தீர்த்தமும் சிவகங்கை விநாயகர் சந்நிதியும் உள்ளன. இரண்டாவது கோபுரம் வல்லாள மகாராசன் கோபுரம். இதிலிருந்து அருணகிரிநாதர் குதிக்க முருகப் பெருமான் காப்பாற்றியருளினார். அம்முருகன் இக் கோபுரத்தின் வடபாகத்தில் கோயில் கொண்டு துவாரமூர்த்தியாய் தேவியருடன் நின்ற கோலத்தில் எழுந்தருளியுள்ளார். இவரைக் கோபுரத்திளையனார் என்பர்.

கிளிக் கோபுரத்தில் உள்ள சிலை அருணகிரிநாதர் கிளி வடிவம் எடுத்து கந்தரனுபூதி பாடிய காட்சியினை விளக்குகின்றது.



சம்பந்தாண்டான் என்னும் தேவி உபாசகன் அருணகிரிநாதரிடம் முருகப் பெருமானை வரவழைக்குமாறு போட்டியிட அருணகிரிநாதர் முருகப் பெருமானின் மயிலைக் குறித்து வேண்ட, உடனே மயிலும் அடுத்து முருகனை வேண்ட முருகப் பெருமான் மயில் மீது ஆடிக் கொண்டே வந்து கல் தூணில் காட்சியளித்தார். முருகப் பெருமான் காட்சி கொடுத்த கம்பத்தைக் கருவறையாகக் கொண்டதே கம்பத்து இளையனார் திருக்கோயில்.

கம்பத்து இளையனார் சந்நிதியில் கருவறை நுழைவாயிலுக்கு இடப்புறம் ஒரு திருமுகமும் ஆறு திருக்கரங்களும் விளங்கக் காட்சி தருகின்றார் வேலவர். பொதுவாக ஒரு திருமுகம் ஆறு திருக்கரங்களுடைய பெருமானுக்கு வில் காணப்படுவதில்லை. இங்கு வலக் கைகளில் சக்தி, அம்பு, கத்தியும் இடக்கையில் வச்சிரம், வில், கேடயமும் விளங்க பின்புறம் உள்ள மயிலின் மீது வலக்கால் வைத்த திருக்கோலத்தில் வேலவன் காட்சி தருகின்றார். இது அரிய அழகிய படைப்பாகும்.

திருவாரூரில் பிறக்க முத்தி, தில்லையைத் தரிசிக்க முத்தி, காசியில் இறக்க முத்தி, (மதுரை) ஆலவாய் என்று சொல்ல முத்தி, அவிநாசி என்று கேட்க முத்தி, அருணையை (திருவண்ணாமலையை) நினைக்க முத்தி என்பது ஐதீகம். பஞ்சபூதத் தலங்களில் இது அக்கினித் தலம்.



திருமாலும் பிரம்மாவும் தம்முள் யார் பெரியவர் என தர்க்கித்துச் சண்டையிட அவர்கள் முன் சிவபெருமான் ஜோதிப் பிளம்பாய்த் தோன்றி தம் அடியையும் முடியையும் பார்த்து வரக் கூற இருவரும் இயலாது

திரும்பி உண்மை உணர்ந்த தலம். பிரமனும் திருமாலும் அணுக முடியாத மலையாதலால் அண்ணாமலையாயிற்று.



இத்தலச் சிவபிரான்: அண்ணாமலையார், இறைவி: உண்ணாமலை யம்மை. சிவபிரானே இங்கு மலையாக இருப்பதாக ஐதீகம். திருப்புகழ் பாடல்களைத் தந்த அருணகிரியாருக்கு முருகப் பெருமான் அருள்பாலித்து திருப்புகழ் பாட வைத்த தலம். இக்கோவிலில் பழனியாண்டவர், ஆறுமுகர் சந்நிதி தனியே உள்ளது.

வைகாசி விசாகம், தை கிருத்திகை, பங்குனி உத்திரம் சிறப்பு விழாக்கள்.

காவடி எடுப்பது சிறப்பு. கார்த்திகை மாதம் 10 நாட்கள் பிரம்மோற்சவம். திருக்கார்த்திகை தீபம் சிறப்பாகும். இங்கு 360 தீர்த்தங்கள் உள்ளன. தலமரம்: மகிழ மரம்.

''அருணை நெடுமதில் வடசார் பெருமாளே'' என்ற பாடல் வடக்குமாட வீதியிலிருந்து 1 கி.மீ. தூரத்தில் உள்ள ஷண்முகப் பெருமானைக் குறிப்பதாகும். இங்குள்ள உற்சவரைப் பாதுகாக்க வேண்டி பெரிய கோவிலில் எழுந்தருளச் செய்துள்ளனர்.

இத்தலத்திற்கு மொத்தம் 78 பாடல்கள் திருப்புகழில் உள்ளன.

## 111. திருவதிகை

பண்ருட்டி புகைவண்டி நிலையத்திற்குத் தென்கிழக்கே 1.5 கி.மீ. தூரத்தில் உள்ளது.

எல்லாத் தலங்களையும் விட அதிகச் சிறப்புடையது என்பதனால் 'அதிகை' எனப் பெயர் பெற்றது. அட்டவீரட்டத் தலங்களுள் ஒன்று. தேவர்களின் செருக்கு அடங்கப் புன்னகையும், சிவபூஜை தவறாத திரிபுரத் தலைவர் மூவரும் உய்யுமாறு தண்ணகையும், சிவபூஜை தவறிய முப்புர வாசிகள் மடியுமாறு வெந்நகையும் ஆகிய இம்மூன்றையும் இத்தலச் சிவபிரான் செய்தார்.

இலிங்கம் பெரியது. 16 பட்டைகளைக் கொண்டது. இவர் அதிகை வீரட்ட நாதர். இறைவி: அதிகை நாயகி, தலமரம்: சரக்கொன்றை, சூல, கருட தீர்த்தம். அம்பிகை சந்நிதி வலப்புறம் உள்ளது. தேவி தவம் இருந்து வலப்பக்கம் பெற்றதாக ஐதீகம். இத்தலத்தை வடகைலாயம் என்பர்.

இங்குள்ள பஞ்சமுக லிங்கத்தின் (மூன்று திக்குகளை நோக்கி நான்கு முகங்கள் உள்ளது. ஒரு முகம் மேல்நோக்கி உள்ளதாக ஐதீகம். எனவே பஞ்சமுக லிங்கம் என்பர்.) முகங்கள் கழுத்து வரை அமைக்கப்பட்டு தலைகளில் சடாமகுடங்கள் உள்ளன. இது அரிய தரிசனம் ஆகும்.

திலகவதியாருக்குச் சூலைநோயினை உண்டாக்கி, திருநாவுக்கரசை ஆட்கொண்ட தலம்.

தனி ஆலயத்தில் ஆறுமுகப் பெருமான் வள்ளி தெய்வயானையுடன் எழுந்தருளியுள்ளார். உற்சவரும் இரு தேவியாருடன் சண்முகப் பெருமாளாகக் காட்சித் தருகிறார்.



## 112. திருவக்கரை

விழுப்புரத்திலிருந்து 25 கி.மீ. தொலைவில் உள்ளது. பாண்டிச்சேரி - திண்டிவனம் பேருந்து வழித்தடத்தில் 18 கி.மீ.-இல் உள்ளது மானூர். அங்கிருந்து 3 கி.மீ. மேற்கே திருவக்கரை உள்ளது.

வக்ரபுரி, வக்ரபுரிப்பட்டினம், குண்டலிவனம் என்றும் குறிப்பிடுவர். வக்கிரன் என்னும் அசுரன் பூசித்ததால் 'வக்கரை' எனப் பெயர் பெற்றது.

சந்திரன், பிரமன், திருமால் பூசித்த தலம். சந்திரனுக்காக ஒரு முகமும் பிரம்மனுக்காக ஒரு முகமும், திருமாலுக்காக ஒரு முகமும் ஆக இத்தலச் சிவபெருமான் மும்முகத்துடன் விளங்குகின்றார். வக்கிராசுரன் பூசித்த சிவலிங்கம் உள்ளது.

வக்கிராசுரனை இந்திரன் சங்கரித்த போது அவன் இரத்தம் பூமியில் படாதவாறு தன் நாவை நீட்டி உறிஞ்சிய காளி இக் கோவிலின் தென் பக்கம் உள்ளார். காளியின் வலது காதில் ஒரு குழந்தையின் உருவம் குண்டலமாகத் தொங்குகிறது. இடது கையில் வில் காணப்பெறுகின்றது. வக்கிராசுரனைத் திருமால் வதைத்தார். அவன் தங்கை துன்முகியை அஷ்டபுஜகாளி சம்ஹாரம் செய்தாள். அப்போது துன்முகி கர்ப்பிணியாய் இருந்ததால் அவள் வயிற்றிலிருந்த குழந்தையைக் காளி தன் காதில் குண்டலமாக அணிந்ததாக வரலாறு.

பிரகாரத்தின் வடக்கே விஷ்ணு ஆலயம் உள்ளது. இத்தல சிவபிரான் சந்திரசேகர், இறைவி: வடிவாம்பிகை, தீர்த்தம்: சூர்யபுஷ்கரணி, தலமரம்: வில்வம், சங்கராபரணி நதிக்கரையில் அமைந்த தலம். இங்குள்ள நந்தி மிகப் பெரியது.

இங்கு வாயுத் திக்கில் எழுந்தருளியுள்ள ஆறுமுகப் பெருமான் பன்னிரு திருக்கைகளுடன் வள்ளி தேவசேனா தேவி சமேதரராக மயில் மீது அமர்ந்து கிழக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார்.

கந்த சஷ்டி, திருக்கார்த்திகை, தைப்பூசம் சிறப்புடையன. தைப்பூசத்தன்று முருகப் பெருமானுக்குச் சந்தனக் காப்பிடுவர்.

இத்தலத்தில் எழுந்தருளியுள்ள அஷ்டபுஜ துர்க்கையும், அஷ்டபுஜவக்கர காளியும் சிறந்த வரப்பிரசாதிகள்.

திருப்புகழில் மூன்று பாடல்கள் இத்தலத்திற்குரியனவாகும்.



## 113. திருவரத்துறை

விருத்தாசலம் அருகேயுள்ள பெண்ணாகடம் புகை வண்டி நிலையத்தில் இருந்து 5 கி.மீ. தூரத்தில் உள்ளது.

திருவரவத்துறை, திருவட்டத்துறை, நிவாநதிபுரம், திருநெல்வாயில் அரத்துறை என்றும் அழைக்கப்படுகிறது. திருஞானசம்பந்தருக்குச் சிவபிரான் முத்துச் சிவிகையும் முத்துக் குடையும், முத்துச் சின்னங்களும் அளித்த தலம்.

நிவா நதியின் வடகரையில் அமைந்த தலம். ஆதித்துறை (காரியனூர்), திருவாலந்துறை, திருமாந்துறை, ஆடுதுறை, திருவதிட்டத்துறை (திட்டக் குடி), திருவரத்துறை, திருக்கைத்துறை என்ற ஏழு துறைகளையும் 'நீவா'' என்ற சப்த ரிஷிகள் பூஜை செய்ய வேண்டி அழைத்த தலம்.

கணபதியின் அருகில் அஷ்ட லெட்சுமிகளும் எழுந்தருளியுள்ளனர்.

இத்தல முருகப் பெருமான் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு இரு தேவியருடனும் மயிலுடனும் கிழக்கு நோக்கி நின்ற திருக்கோலத்தில் காட்சி தருகின்றார்.

திருப்புகழில் ஒரு பாடல் உள்ளது.

## 114. திருவலஞ்சுழி

கும்பகோணத்திற்கு மேற்கே 6 கி.மீ. தூரத்தில் உள்ளது.

முதலில் விநாயகர் கோயிலும் அடுத்து கற்பக நாதேஸ்வரர் ஆலயமும் உள்ளது. தேவேந்திரன் பூஜித்த தலம். விநாயகர் வெள்ளை விநாயகர். அவர் இருக்கும் மண்டபம் சிறந்த வேலைப்பாடுடையது. இந்திரன் கடல் நுரையைக் கொண்டு விநாயகர் பிடித்து பூஜித்ததனால் அமுதம் திரண்டது எனவும், தேவேந்திரன் இவரை பூஜித்தார் எனவும் புராணம். அவர் திருவலஞ்சுழி வந்தபோது இவ்விநாயகர் இத்தலத்தில் நின்று விட்டாராம். பிரம்மோற்சவம் முதலியன இவ்விநாயகருக்குத் தான் நடக்கின்றன. தீண்டாத் திருமேனி உடையவர்.

பிலத்தில் சென்று விட்ட காவிரி வெளிப்பட வேண்டி ஏரண்ட முனிவர் தம்மைப் பலி கொடுத்த பின்னர் காவிரி மேலே வந்து வலமாகச் சுழித்துக் கொண்டு சென்ற காரணத்தினால் திருவலஞ்சுழி எனப் பெயர் வந்தது. அம்முனிவர் உருவமும் உள்ளது. விநாயகர் துதிக்கை வலப்பக்கம் சுழித்துள்ளதால் திருவலஞ்சுழி எனப் பெயர் பெற்றது என்பர்.

முனிவரின் அருகில் வலஞ்சுழி நாதர் என்னும் சிவபிரான் காட்சி தருகிறார். இறைவி: பெரியநாயகி. தீர்த்தம்: காவிரி, ஜடாதீர்த்தம், தல மரம்: வில்வம். இங்கு இறைவி இறைவனுடன் திருமணக் கோலத்தில் வலப்பக்கம் சந்நிதி கொண்டுள்ளார். 64 சக்திபீடத் தலங்களுள் ஒன்று.

இங்கு உள்பிரகாரத்தில் முருகப் பெருமான் ஆறு திருமுகங்களும் பன்னிரு திருக்கரங்களும் கொண்டு மயில் மீது அமர்ந்து கிழக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார். தேவியர் இருவரும் அருகில் நிற்கின்றனர். முருகப் பெருமான் திருக்கரங்களில் வேலும், சேவல் கொடியும் உள்ளது. உற்சவப் பெருமான் ஒரு திருமுகமும் நான்கு கரங்களும் கொண்டு விளங்குகின்றார்.



கந்தர்சஷ்டி, திருக்கார்ததிகை சிறபபு விழாக்களாகும். திருப்புகழில் ஒரு பாடல் உள்ளது.

அகலிகைக்குச் சாபவிமோசனம் அருளிய விநாயகர், 'பலிபீட விநாய கர்' உள்ளார். இவரை வழிபட்டால் காரியசித்தி கிட்டும்.

## 115. திருவலம் - வல்லம்

வேலூரிலிருந்து 13 கி.மீ. புகைவண்டி நிலையத்திலிருந்து 2.5 கி.மீ. தூரத்தில் உள்ளது.

தீக்காலி வல்லம், வாணபுரம், வல்லம் என்ற பெயர்களும் உண்டு. நவக்கிரகங்களும் வல்லாளன் என்னும் அரசனும் பூஜித்த தலம். தீக்காலி என்னும் அவுணன் பூசித்ததால் 'தீக்காலி வல்லம்' எனப் பெயர் பெற்றது.

மேற்கு பிரகாரத்தில் சகஸ்ரலிங்கம் அருகில் முருகப் பெருமான் திருச் சந்நிதி உள்ளது.

இத்தலச் சிவபிரான்: வல்லநாதர், வில்வவனநாதர், இறைவி: வல்லாம் பிகை, தனுமத்யாம்பாள், தீர்த்தம்: கௌரி தீர்த்தம், நீவா நதி, தலமரம்: வில்வம்.

அம்பிகைக்கு இருபுறமும் மகாவிஷ்ணு நின்ற கோலத்திலும் அமர்ந்த கோலத்திலும் காட்சி தருகின்றார்.

அடியவர் ஒருவர் 5 கி.மீ. தூரத்திலுள்ள கஞ்சன்கிரி திருக்குளத்திலிருந்து திருமஞ்சனத்திற்குத் தினமும் நீர் எடுத்து வருவது வழக்கம். கஞ்சன் என்னும் அசுரன் அடியவருக்குத் துன்பம் விளைவிக்கவே மனம் வருந்திய அடியவர் இறைவனிடம் முறையிட்டார்.

சிவபிரான் நந்தி தேவரை அனுப்பி அசுரனை அழிக்கச் செய்தார். நந்தி பெருமான் அசுரனை தம் கொம்புகளால் குத்திக் கொன்றார். அசுரனின் இரத்தம் மலையின் பல இடங்களில் பட்டது. அங்கெல்லாம் சிவலிங்கங்கள் தோன்றின. ஒவ்வொரு பௌர்ணமி அன்றும் ஜோதி ஒன்று பிரகாசமாகப் பலமுறை தோன்றுகிறது. சித்திரை, தை மாதங்களில் இந்த ஜோதி நன்கு தெரியும்.

இங்கு நந்தி கிழக்கு நோக்கி நின்ற நிலையிலும் பலி பீடம் ஆமை வடிவிலும் அமைந்துள்ளது சிறப்பாகும்.

பிரகாரத்தில் தேவியருடன் முருகப் பெருமான் எழுந்தருளியுள்ளார். திருப்புகழில் ஒரு பாடல் உள்ளது.

## 116. திருவாஞ்சியம்

கும்பகோணத்திற்குத் தென்கிழக்கே 25 கி.மீ. தூரத்திலும் நன்னிலம் புகை வண்டி நிலையத்திற்கு மேற்கே 9 கி.மீ. தூரத்திலும் உள்ளது.

விஷ்ணு பெருமான் சிவபெருமானைப் பூஜித்து தன்னை விட்டு பிரிந்து போன லட்சுமியை அடைந்த தலம். அவர் திருவை வாஞ்சித்த இடம் திருவாஞ்சியம் என்றாயிற்று.

இத்தலச் சிவபிரான்: கந்தாரண்யேசுவரர்; திருவாஞ்சிநாதர், இறைவி:

மங்களநாயகி, மருவார் குழலி, தீர்த்தம்: குப்தகங்கை, யம தீர்த்தம், தலமரம்: சந்தனமரம்.

இத்தலத்தில் இறப்பவர்கட்கு யமவாதனை இல்லை என்பர். யமன் சந்நிதி உள்ளது. சுவாமிக்கு யம வாகனம் உள்ளது. பிரமன், பராசுரர், அத்திரி, சூரியன், யமன், புலத்தியர் அக்கினி வழிபட்ட தலம். காசிக்குச் சமமான தென்னகத் தலங்கள் ஆறனுள் ஒன்று. இங்கு நவக்கிரகங்கள் இல்லை.

இங்கு ஆறுமுகப் பெருமான் பன்னிரு திருக்கரங்களுடன் மயில் மீது அமர்ந்த திருக்கோலத்தில் இரு தேவியருடன் கிழக்கு நோக்கி எழுந்தருளி யுள்ளார். மயிலின் முகம் பெருமானின் இடப்புறம் உள்ளதனால் அசுர மயில் என்பர்.

இங்கு வருடப்பிறப்பன்று காவடி எடுப்பர். கந்த சஷ்டி விழா, திருக்கார்த் திகை சிறப்பு விழாக்கள். புரட்டாசி, பங்குனி இரு மாதங்களிலும் 6,7, 8,9 ஆகிய நாட்களில் காலையில் சூரிய ஒளி சிவபெருமான் மீது விழுகின்றது.

திருப்புகழில் ஒரு பாடல் உள்ளது. கார்த்திகை மாதம் ஞாயிற்றுக் கிழமைகளில் குப்த கங்கைத் தீர்த்தத்தில் நீராடுவது சிறப்பாகும்.

## 117. திருவாடானை

தேவகோட்டையிலிருந்து 40 கி.மீ., காளையார் கோயிலிலிருந்து 33.5 கி.மீ. தூரத்தில் உள்ளது.

வருண தேவனின் மகனான வாருணி துருவாச முனிவருக்கு மரியாதை செய்யாததால் முனிவரால் ஆட்டுத் தலையும் யானையின் உடலும் பெறச் சபிக்கப்பட்டார். பின் இத்தலத்தில் நீலரத்தினத்தால் லிங்கம் அமைத்து சிவபிரானை வணங்கி சாப விமோசனம் அடைந்தார். எனவே இத்தலம் ஆடு, ஆணை என்று ஆடாணையாயிற்று.

இத்தல இறைவர்: ஆடாணைநாதர் (கஜமுகேஸ்வரர்), இறைவி: சிநேக வல்லி, தீர்த்தம்: சூர்ய தீர்த்தம்.

இத்தல முருகப் பெருமான் ஒரு திருமுகமும் நான்கு கரங்களும் கொண்டு இரு தேவியர் உடனிருக்க மயிலுடன் நின்ற திருக்கோலத்தில் காட்சி தருகின்றார். முருகப் பெருமான் சுமார் 5 அடி உயரத்துடன் கம்பீரமாகக் காட்சி தருகிறார். மயிலின் முகம் தெற்கு நோக்கி உள்ளது.

திருப்புகழில் ஒரு பாடல் உள்ளது.



## 118. திருவாமாத்தூர்

விழுப்புரத்திற்கு வடமேற்கே 6.5 கி.மீ. தூரத்தில் பம்பை ஆற்றின் வடகரையில் அமைந்த தலம். கொம்புகள் இல்லாமல் இருந்த பசுக்கள் இத்தலச் சிவபிரானை வணங்கி கொம்புகளைப் பெற்றது. எனவே பசுக் களின் தாயகமான இத்தலம் திருவாமாத்தூர் என்றாயிற்று.



இராமர் பூசித்த தலம். சக்தியின் சாபத்தினால் வன்னி மரமான பிருங்கி முனிவர் சக்தியை பூஜித்து சாபம் நீங்கிய தலம். இத்தலச் சிவபிரான்: அபிராமேசுவரர், இறைவி: முத்தாம்பிகை, தீர்த்தம்: பம்பையாறு, தலமரம்: வன்னிமரம்.

மேற்கு பிரகாரத்தில் முருகப் பெருமான் சந்நிதி உள்ளது. இவர் ஆறு திருமுகங்களும் பன்னிர திருக்கரங்களும் கொண்டு தேவியருடன் மயில் மீது அமர்ந்து கிழக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார். மயிலின் திருமுகம்

இடப்புறம் உள்ளது சிறப்பாகும். உற்சவரும் மூலவரை போன்றே காட்சி தருகின்றார்.

நான்கு திருப்புகழ் பாடல்கள் பெற்ற தலம்.

## 119. திருவாமூர்

பண்ருட்டியிலிருந்து சுமார் 10 கி.மீ. தூரத்தில் உள்ளது.

இங்குள்ள பசுபதீஸ்வரர் திருக்கோவிலில் கந்த பெருமான் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு நின்ற திருக்கோலத்தில் இரு தேவியருடனும் மயிலுடனும் எழுந்தருளியுள்ளார்.

திருநாவுக்கரசர் அவதாரத் தலம் ''மாது புகழை வளர்க்கும் திருவாமூர்'' என அப்பர் பெருமானின் தமக்கையார் திலகவதியாரின் பெருமையைத் திருப்புகழ் போற்றுகின்றது.

ஒரு பாடல் திருப்புகழில் உள்ளது.

## 120. திருவாரூர்

நாகப்பட்டினத்திற்கு மேற்கே 22.5 கி.மீ. தூரத்தில் உள்ளது.



கமலாலயம்

பஞ்சபூதத் தலங்களில் இது பிருதிவித் தலம். விராட புருஷனின் மூலாதார தலம். இவ்வாலயம் திருமூலட்டாணம் என்றும், பூங்கோயில் என்றும் பெயர் பெற்றது. பிறக்க முக்தி தரும் தலம்.

லெட்சுமி பூசித்த தலம். எனவே ''நிறை செல்வத் திருவூர்'' என்பர். சப்த விடங்கத் தலங்களுள் ஒன்று. விரன்மீண்ட நாயனார், நமிநந்தியடிகள் நாயனார், செருத்துணை நாயனார், தண்டியடிகள் நாயனார், கழற்சிங்க நாயனார் முதலியோர் முக்தி பெற்ற தலம்.

விருத்தாசலம் மணிமுத்தா நதியில் இட்ட பொண்ணை இத்தல கமலாலயக் குளத்தில் சுந்தரமூர்த்தி நாயனார் எடுத்த தலம்.

இத்தலத்தில் முருகப் பெருமான் பல இடங்களில் காட்சி தருகிறார்.

கிழக்கு வாயிலின் வடபக்கமும், சுவாமி உட்பிரகாரத்தின் வடமேற்கு கோடியிலும் உள்ளார். கமலாம்பிகை, அட்சபீடத்தை அடுத்து சண்முகப் பெருமான் தேவியருடன் எழுந்தருளிய சந்நிதி உள்ளது. பாலசுப்பிரமணி யர் திருச்சந்நிதி தனியே உள்ளது. தேரடியில் தண்டபாணியாகக் கோயில் கொண்டுள்ளார்.

மாதக் கார்த்திகை, சஷ்டி சிறப்பு - கந்த சஷ்டி, திருக்கார்த்திகை, தைப்பூசம், பங்குனி உத்திரம் பெருவிழாக்களாகக் கொண்டாடப்படுகிறது.

தியாகேசர் திருக்கோவிலில் அதிசய முருகப் பெருமான் காட்சி தருகின் றார். இவரை வேறு எங்கும் காண முடியாது. இரண்டாம் பிரகாரத்தில் அன்னை நீலோத்பலாம்பிகை கையில் செண்டு கொண்டு நின்ற கோலத்தில் எழுந்தருளியுள்ளார். அவர் அருகே இருக்கும் தோழியின் தோள் மீது அமர்ந்துள்ள முருகப் பெருமானின் சுண்டு விரலினை அம்மை தம் இடக்கரத்தால் பிடித்துள்ளார். இது இக்கோவிலின் தனிச்சிறப்பு.

திருப்புகழில் ஒரு பாடல் உள்ளது.

## 121. திருவாவடுதுறை

மாயூரத்திற்கு மேற்கே 16 கி.மீ. கும்பகோணத்திலிருந்து 19 கி.மீ. தூரத்திலும் உள்ளது.

திருமூலநாயனார் ஆண்டுக்கு ஒரு பாடலாக 3000 பாடல்களைக் கொண்ட திருமந்திரத்தைச் செய்தருளிய தலம். கோயிலின் மேல்புறம் அவருக்குத் தனிச் சந்நிதி உள்ளது.

பசு வடிவுடன் உமாதேவி பூசித்ததினால் 'ஆவடுதுறை' எனப் பெயர் பெற்றது. இத்தலச் சிவபிரான் மாசிலாமணீசுரர், இறைவி: ஒப்பிலா முலையம்மை, தீர்த்தம்: கோமுத்தி தீர்த்தம், தலமரம்: படரரசு.

இங்கு முருகப் பெருமான் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு நின்ற திருக்கோலத்தில் தேவியர் இருவருடன் கிழக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார்.

இங்குள்ள திருவாவடுதுறை ஆதீனம் சைவத்திற்குப் பெருந்தொண் டாற்றி வருகின்றது. திருப்புகழில் ஒரு பாடல் உள்ளது.

## 122. திருவாலங்காடு

சென்னையிலிருந்து 64 கி.மீ. சென்னை - அரக்கோணம் புகைவண்டி மார்க்கத்தில் புகைவண்டி நிலையம் உள்ளது. அங்கிருந்து கோயில் 6 கி.மீ. தொலைவில் உள்ளது.

அம்பலவாணரின் பஞ்ச சபைகளில் ஒன்றாகிய ரத்னசபை இத்தலம். சிவபெருமான் காளியுடன் திருநடனம் செய்தருளிய தலம். ஊர்த்தவதாண

டவம். காரைக்கால் அம்மையார் கயிலையிலிருந்து தலையாலே நடந்து வந்து இத்தல நடராசப் பெருமானைத் தரிசித்து அவரது குஞ்சிதபாதத்தின் கீழ் சிவானந்தத்தை அனுபவிக்கும் தலம். ஒரு காலைத் தூக்கியாடும் ஊர்த்துவதாண்டவ மூர்த்தி இங்குத் தனிச்சிறப்பு. அவரது திருவடியின் அருகில் காரைக்கால் அம்மையார் காட்சி தருவதனை இங்கு மட்டுமே காண முடியும்.

இத்தல முருகப் பெருமான் ஆறு திருமுகங்களும் பன்னிரு திருக்கரங் களும் கொண்டு மயில் மீது அமர்ந்து வடக்கு நோக்கிக் காட்சி தருகிறார். தேவியர் இருவர் உடன் விளங்குகின்றனர். நுண்ணிய வேலைப்பாடுடைய மூர்த்தம்.

உற்சவப் பெருமான் ஒரு திருமுகத்துடன் தேவியருடன் நின்ற கோலத் தில் காட்சி தருகிறார். மற்றொரு உற்சவர் மூலவர் போன்று காட்சி தருகின்றார்.

இத்தலக் காளி சிறப்பாகும். கந்த சஷ்டியும், பங்குனிப் பிரம்மோற்சவ மும் சிறப்பாகும். திருப்புகழில் நான்கு பாடல்கள் உள்ளன.

## 123. திருவாள்ப்புத்தூர் (திருவாளொளிப்புத்தூர்)

வைத்தீஸ்வரன் கோவிலுக்கு மேற்கே 8 கி.மீ. மாயூரத்திலிருந்து 16 கி.மீ. தூரத்தில் உள்ளது.

விஷ்ணு மாணிக்கத்தை வைத்துப் பூசித்ததனால் அரதனபுரம் எனவும் விஜயனுடைய கைவாளை இறைவன் ஒரு புற்றில் ஒளித்து வைத்ததனால் 'வாள் ஒளி புற்றூர்' எனவும் தலமரம் ஆதலால், 'வாகை மாநகர்' எனவும் பெயர் பெற்றது. வண்டு பூசித்த தலம்.

பஞ்சவர் இலிங்கங்களும், திரௌபதி பூசித்த வலம்புரி விநாயகரும் உள்ளனர். இங்குள்ள துர்க்கை சிறப்பு. இத்தலச் சிவபிரான் மாணிக்க வண்ணனார். இறைவி: வண்டார்பூங்குழலம்மை, தலமரம்: வாகை, தீர்த்தம்: சூலதீர்த்தம், ஞான தீர்த்தம்.

இத்தல முருகப் பெருமான் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு நின்ற திருக்கோலத்தில் தேவியர் இருவருடன் காட்சி தருகின் றார். உற்சவ மூர்த்தி வில்லேந்திய கோலத்தில் காட்சி தருகின்றார்.

திருப்புகழில் ஒரு பாடல் உள்ளது.



## 124. திருவானைக்கோயில்

திருச்சிக்கு வடக்கே 3 கி.மீ. ஸ்ரீரங்கத்திலிருந்து 1 கி.மீ. தூரத்தில் உள்ளது.

இத்தலம் திருஆனைக் கோயில், கஜராஜணியம், ஜம்புகேஸ்வரம், ஜம்புவீச்சுரம், சம்புவனம், காவை, தந்திபுகாவாயில், தந்திவனம், ஞான தலம், அமுதேஸ்வரம், இபவனம் என பல பெயர்கள் உடையது.

இங்கு வெண்நாவல் மரத்தின் அடியில் இருந்த சிவலிங்கப் பெருமானின் மீது இலைச் சருகுகள் விழாமல் சிலந்தி வலை பின்னி வழிபட்டு வந்தது. யானை ஒன்று அச்சிலந்தி வலையை தினமும் நீக்கி குளத்திலிருந்து பூவும் நீரும் கொண்டு வந்து வழிபட்டு வந்தது. இதைக் கண்டு கோபம் கொண்ட சிலந்தி ஒருநாள் யானையின் துதிக்கையில் நுழைந்து கடிக்க வலி பொறுக்க முடியாத யானை துதிக்கையைத் தரையில் அடித்தது. அதனால் துதிக்கை யில் இருந்த சிலந்தியும் யானையும் ஒருசேர இறந்தன. சிவபெருமான் இருவருக்கும் மோட்சம் அளித்தார். இவ்வாறு யானையும் சிலந்தியும் வழிபட்ட தலமே திருஆனைக்கா. ஜம்புநாவல் (வெள்ளை நாவல்) மரத்தடியில் லிங்கம் எழுந்தருளியிருப்பதால் 'ஜம்புகேஷ்வரம்' என்றா யிற்று.

இத்தலச் சிவபிரான்: ஜம்புகேஸ்வரர். இறைவி: அகிலாண்டநாயகி, தீர்த்தம்: காவிரி. தலமரம்: வெண்நாவல் மரம்.

பஞ்சபூதத் தலங்களில் அப்புத் தலம். விராட புருஷனின் சுவாதிஷ்டான தலம். கோவில் மூலஸ்தானத்தில் எப்போதும் நீர் நிற்கும்.

மூன்றாம் பிரகாரத்தில் முருகப் பெருமான் பாலசுப்பிரமணியராக ஒரு திருமுகமும் இரு திருக்கரங்களும் கொண்டு தெற்கு நோக்கி எழுந்தருளி யுள்ளார்.

14 திருப்புகழ் பாடல்கள் பெற்றது.

## 125. திருவான்மியூர்

சென்னையிலிருந்து தெற்கே 12 கி.மீ. தூரத்தில் புறநகர் பகுதியில் அமைந்துள்ளது.

வான்மீகி முனிவர் பூசித்த தலமாதலால், 'திருவான்மியூர்' என அழைக் கப்படுகிறது. சிவபிரான் பால் வண்ண சுயம்பு மூர்த்தி. மேற்கு நோக்கிய சந்நிதி. தேவர்கள் அமுதத்தால் (மருந்து - அமுதம்) லிங்கம் செய்து பூசித்ததால் இத்தல சிவபிரான் மருந்தீசர் எனப் பெயர் பெற்றார். சிறிது வடக்கு நோக்கி லிங்கம் சாய்ந்துள்ளது. பசு பால் சொறிந்து அபிஷேகம் செய்த போது ஏற்பட்ட குளம்பின் வடு தெரிகின்றது. இறைவி: சொக்கநா

டவம். காரைக்கால் அம்மையார் கயிலையிலிருந்து தலையாலே நடந்து வந்து ஈ த்தல நடராசப் பெருமானைத் தரிசித்து அவரது குஞ்சிதபாதத்தின் கீழ் சிவானந்தத்தை அனுபவிக்கும் தலம். ஒரு காலைத் தூக்கியாடும் ஊர்த்துவதாண்டவ மூர்த்தி இங்குத் தனிச்சிறப்பு. அவரது திருவடியின் அருகில் காரைக்கால் அம்மையார் காட்சி தருவதனை இங்கு மட்டுமே காண முடியும்.

இத்தல முருகப் பெருமான் ஆறு திருமுகங்களும் பன்னிரு திருக்கரங் களும் கொண்டு மயில் மீது அமர்ந்து வடக்கு நோக்கிக் காட்சி தருகிறார். தேவியர் இருவர் உடன் விளங்குகின்றனர். நுண்ணிய வேலைப்பாடுடைய மூர்த்தம்.

உற்சவப் பெருமான் ஒரு திருமுகத்துடன் தேவியருடன் நின்ற கோலத் தில் காட்சி தருகிறார். மற்றொரு உற்சவர் மூலவர் போன்று காட்சி தருகின்றார்.

இத்தலக் காளி சிறப்பாகும். கந்த சஷ்டியும், பங்குனிப் பிரம்மோற்சவ மும் சிறப்பாகும். திருப்புகழில் நான்கு பாடல்கள் உள்ளன.

## 123. திருவாள்ப்புத்தூர் (திருவாளொளிப்புத்தூர்)

வைத்தீஸ்வரன் கோவிலுக்கு மேற்கே 8 கி.மீ. மாயூரத்திலிருந்து 16 கி.மீ. தூரத்தில் உள்ளது.

விஷ்ணு மாணிக்கத்தை வைத்துப் பூசித்ததனால் அரதனபுரம் எனவும் விஜயனுடைய கைவாளை இறைவன் ஒரு புற்றில் ஒளித்து வைத்ததனால் 'வாள் ஒளி புற்றூர்' எனவும் தலமரம் ஆதலால், 'வாகை மாநகர்' எனவும் பெயர் பெற்றது. வண்டு பூசித்த தலம்.

பஞ்சவர் இலிங்கங்களும், திரௌபதி பூசித்த வலம்புரி விநாயகரும் உள்ளனர். இங்குள்ள துர்க்கை சிறப்பு. இத்தலச் சிவபிரான் மாணிக்க வண்ணணார். இறைவி: வண்டார்பூங்குழலம்மை, தலமரம்: வாகை, தீர்த்தம்: சூலதீர்த்தம், ஞான தீர்த்தம்.

இத்தல முருகப் பெருமான் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு நின்ற திருக்கோலத்தில் தேவியர் இருவருடன் காட்சி தருகின் றார். உற்சவ மூர்த்தி வில்லேந்திய கோலத்தில் காட்சி தருகின்றார்.

திருப்புகழில் ஒரு பாடல் உள்ளது.



## 124. திருவானைக்கோயில்

திருச்சிக்கு வடக்கே 3 கி.மீ. ஸ்ரீரங்கத்திலிருந்து 1 கி.மீ. தூரத்தில் உள்ளது.

இத்தலம் திருஆனைக் கோயில், கஜராஜணியம், ஜம்புகேஸ்வரம், ஜம்புவீச்சுரம், சம்புவனம், காவை, தந்திபுகாவாயில், தந்திவனம், ஞான தலம், அமுதேஸ்வரம், இபவனம் என பல பெயர்கள் உடையது.

இங்கு வெண்நாவல் மரத்தின் அடியில் இருந்த சிவலிங்கப் பெருமானின் மீது இலைச் சருகுகள் விழாமல் சிலந்தி வலை பின்னி வழிபட்டு வந்தது. யானை ஒன்று அச்சிலந்தி வலையை தினமும் நீக்கி குளத்திலிருந்து பூவும் நீரும் கொண்டு வந்து வழிபட்டு வந்தது. இதைக் கண்டு கோபம் கொண்ட சிலந்தி ஒருநாள் யானையின் துதிக்கையில் நுழைந்து கடிக்க வலி பொறுக்க முடியாத யானை துதிக்கையைத் தரையில் அடித்தது. அதனால் துதிக்கையில் இருந்த சிலந்தியும் யானையும் ஒருசேர இறந்தன. சிவபெருமான் இருவருக்கும் மோட்சம் அளித்தார். இவ்வாறு யானையும் சிலந்தியும் வழிபட்ட தலமே திருஆனைக்கா. ஜம்புநாவல் (வெள்ளை நாவல்) மரத்தடியில் லிங்கம் எழுந்தருளியிருப்பதால் 'ஜம்புகேஷ்வரம்' என்றாயிற்று.

இத்தலச் சிவபிரான்: ஜம்புகேஸ்வரர். இறைவி: அகிலாண்டநாயகி, தீர்த்தம்: காவிரி. தலமரம்: வெண்நாவல் மரம்.

பஞ்சபூதத் தலங்களில் அப்புத் தலம். விராட புருஷனின் சுவாதிஷ்டான தலம். கோவில் மூலஸ்தானத்தில் எப்போதும் நீர் நிற்கும்.

மூன்றாம் பிரகாரத்தில் முருகப் பெருமான் பாலசுப்பிரமணியராக ஒரு திருமுகமும் இரு திருக்கரங்களும் கொண்டு தெற்கு நோக்கி எழுந்தருளியுள்ளார்.

14 திருப்புகழ் பாடல்கள் பெற்றது.

## 125. திருவான்மியூர்

சென்னையிலிருந்து தெற்கே 12 கி.மீ. தூரத்தில் புறநகர் பகுதியில் அமைந்துள்ளது.

வான்மீகி முனிவர் பூசித்த தலமாதலால், 'திருவான்மியூர்' என அழைக்கப்படுகிறது. சிவபிரான் பால் வண்ண சுயம்பு மூர்த்தி. மேற்கு நோக்கிய சந்நிதி. தேவர்கள் அமுதத்தால் (மருந்து - அமுதம்) லிங்கம் செய்து பூசித்ததால் இத்தல சிவபிரான் மருந்தீசர் எனப் பெயர் பெற்றார். சிறிது வடக்கு நோக்கி லிங்கம் சாய்ந்துள்ளது. பசு பால் சொறிந்து அபிஷேகம் செய்த போது ஏற்பட்ட குளம்பின் வடு தெரிகின்றது. இறைவி: சொக்கநா

இவர் தெற்கு நோக்கி எழுந்தருளியுள்ளார். தீர்த்தம்: பஞ்ச தீர்த்தம். தலமரம்: வன்னிமரம்.

இத்தல முருகப் பெருமான் 'பாலசுப்பிரமணிய சுவாமி' எனப் போற்றப் பெறுகின்றார். ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு கிழக்கு நோக்கி நின்ற கோலத்தில் காட்சி தருகிறார். தேவியர் இருவரும் அருகில் உள்ளனர். மயில் இல்லை. உற்சவர் இதே கோலத்தில் மயிலுடன் எழுந்தருளியுள்ளார். பிரகாரத்தில் வாயுத் திக்கில் முருகப் பெருமான் தேவியருடன் நின்ற கோலத்தில் காட்சி தருகின்றார்.

இங்கு சோமாஸ்கந்தர் தியாகராயராக எழுந்தருளியுள்ளார். பங்குனி பிரம்மோற்சவத்தில் தியாகராயரின் 18 திருநடனக் காட்சி சிறப்பாகும்.

இங்கு பிரம்மாவுக்கு உற்சவர் உள்ளார். அரை கி.மீ. தூரத்தில் கமல விநாயகர் ஆலயம் உள்ளது. வால்மீகி தனிக்கோயில் உள்ளது. பாம்பன் சுவாமிகள் சமாதி உள்ளது.

திருப்புகழில் ஒரு பாடல் உள்ளது.

## 126. திருவிடைக்கழி

மாயூரத்திலிருந்து பேருந்து உள்ளது. திருக்கடவூரிலிருந்து 6 கி.மீ. தூரத்தில் உள்ளது.

தெய்வயானை விடை கேட்டதாலும் முருகப் பெருமான் இரண்யாசுர னைக் கொன்ற பாபம் கழிந்ததனாலும் 'திருவிடைக்கழி' எனப் பெயர் பெற்றது. திருவிசைப்பா, திருப்புகழ்ப் பாடல் பெற்ற தலம். திருவிசைப்பா பாடலும் இத்தலத்திற்குண்டு.

முருகனுக்குகந்த குராமலரை உடைய குராமரத்தடியில் குமரப் பெரு மான் குமாரசிவமாக எழுந்தருளிய ஒரே தலம் திருவிடைக்கழி.

சூரனின் மகன் இரணியாசுரனைப் போரில் சம்ஹாரம் செய்த தலம். இத்தலத்தில் பிரதோஷ விநாயகர், நடராஜர், சந்திரசேகர், சோமாஸ்கந்தர், சண்டிகேஸ்வரர் ஆகிய எல்லா மூர்த்திகளும் சுப்பிரமணிய சொரூபமாகக் காட்சி தருகின்றனர்.

சிவாலய அமைப்பில் அமைந்த முருகன் கோயில். சோமாஸ்கந்த மூர்த்தி இருக்க வேண்டிய இடத்தில் வள்ளி தேவசேனா சமேதரராய் முருகப் பெருமான் உள்ளார். நடராஜப் பெருமான் இருக்க வேண்டிய சபா மண்டபத்தில் குமரப் பெருமான் இடக்கையில் வில்லுடனும் வலக்கையில் வேலுடனும் காட்சி தருகின்றார்.

முருகன் என்றாலே அழகு எனப் பொருள்படும். அதற்கு ஏற்ப இத்தல முருகப் பெருமான் ஒரு திருமுகமும், இரு திருக்கரங்களும் வலது கரம் அபய முத்திரையுடனும் இடதுகரம் தொடையில் வைத்தும் அழகுமிளிர

காட்சி தருகின்றார். அவர் அழகில் மயங்கிய வேழமங்கை வெட்கத்துடன்



முருகப் பெருமான் கருவறைக்குள் பாபநாசப் பெருமான் கருவறையும் உள்ளது. இது தனிச் சிறப்புடையது. முருகப் பெருமானின் திருமுன்பு ஸ்படிக லிங்கம் காணப்பெறுகின்றது. தந்தையார் தன் குமரனுக்கு முன்னும் பின்னுமாக உள்ளார். அகிலாண்ட நாயகிக்கு இத்தலத்தில் சந்நிதி இல்லை. அருகிலுள்ள தரங்கம்பாடிக் கோயிலில் எழுந்தருளியுள்ளார். இத்தலத்தில் தெய்வநாயகிக்குத் தனிச்சந்நிதி உள்ளது. இது போல பெரம்பூரில் மட்டுமே உள்ளது. முருகப் பெருமான் நிற்கும் திசை நோக்கி நிற்பதால் இவர் சந்நிதி சற்று சாய்வாக உள்ளது.



முருகப் பெருமான் எழுந்தருளிய குராமரம் பிரகாரத்தில் உள்ளது. அம்மர இலைகள் விஷத்தன்மை நீக்கும் குணமுடையது. அவ்விலைகளை தின்றால் விஷக்கடிகள் ஒன்றும் செய்யாது.

திருப்புகழில் எட்டுப் பாடல்கள் இத்தலத்திற்குரியன. திருவிசைப்பாடல் பெற்ற தலம். சஷ்டி, மாதக் கார்த்திகை சிறப்பு.

# 127. திருவிடை மருதூர்

கும்பகோணத்திற்கு வடகிழக்கே 8 கி.மீ. தனிப் புகைவண்டி நிலையம் உள்ளது.

இதனை மத்தியார்ஜுனம் என்பர். வடக்கே மல்லிகார்ஜுனம் ஆந்திரா வில் உள்ள ஸ்ரீசைலம். தெற்கே மல்லிகாஜுனம் நெல்லை மாவட்டத்தில் உள்ள திருவிடைமருதூர் ஆகும். இவ்விரு தலங்களுக்கும் மத்தியில் அமைந்தது இம் மத்தியார்ஜுனம்.

இத்தலச் சிவபிரான்: மகாலிங்கேஸ்வர், இறைவி: பெருநலமாமுலை நாயகி, தீர்த்தம்: காவிரி, தலமரம்: மருதமரம்.

இங்கு முருகப் பெருமான் ஆறு திருமுகங்களும், பன்னிரு திருக்கரங்க ளும் கொண்டு மயில் மீது அமர்ந்து இடப்பாதத்தை மடித்து வலப்பாதத்தை தொங்க விட்டு இருபுறமும் தேவியர் நிற்க விளங்குகின்றார். மயில் தன் முகத்தினைக் கிழக்கு நோக்கி தலைசாய்த்து நிற்பதும் சிறப்பாகும். வலத் திருக்கரத்தில் அபயம், தனுசு, வேல், அங்குசம், சக்கரம், கத்தி ஆகியனவும் இடத் திருக்கரத்தில் பழம், வில், சக்தி, பாசம், மணி, கேடயம் ஆகியனவும் கொண்டு விளங்குகின்றார். இவர் சுவாமி சந்நிதியின் மேற்கே கிழக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார்.

அம்பிகைச் சந்நிதியின் நுழைவாயிலில் துவாரமூர்த்தியாக ஆறுமுகப் பெருமான் மயில் மீது அமர்ந்து காட்சி தருகின்றார். உற்சவப் பெருமான் இருவர் உள்ளனர். ஒரு பெருமான் ஆறு திருமுகங்களும் பன்னிரு திருக்கரங்களும் விளங்க தேவியர் இருவருடன் மயிலின் முன் காட்சி தருகின்றார். மற்றொரு பெருமான் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்க ளும் கொண்டு இரு தேவியருடன் காட்சி தருகின்றார்.

இது தவிர மேற்குக் கோபுர வாயிலின் அருகில் தனிச் சந்நிதியிலும் பிரணவப் பிரகாரத்தில் தனிச் சந்நிதியிலும் தலமரமான மருதமரத்திலுள்ள மண்டபத்திலும் முருகப் பெருமான் காட்சி தருகின்றார்.

திருப்புகழில் நான்கு பாடல்கள் பெற்ற தலம். இங்கு அசுவமேதப் பிரதட்சிணம் என்னும் பெரிய பிரகாரத்தில் வலம் வருவது மிகவும் சிறப்பு. அசுவமேத யாகம் செய்த பலன் கிட்டும்.

# 128. திருவீழிமிழலை

தஞ்சை மாவட்டம் பேரளம் புகைவண்டி நிலையத்திலிருந்து 13 கி.மீ. தூரத்தில் உள்ளது.

தலச்செடியான வீழிச் செடிகள் நிறைந்துள்ளதனால் திருவீழிமிழலை எனப் பெயர் பெற்றது. மூலலிங்கத்திற்குப் பின்னே பார்வதி பரமேசுவரர் திருவுருவங்கள் உள்ளன. திருமால் சிவபெருமானிடம் சக்கரம் பெற

வேண்டி தினமும் ஆயிரம் மலர்கள் கொண்டு சிவனைப் பூஜித்தார். ஒரு நாள் ஒரு மலர் குறையவே தம் கண்ணையே பறித்து மலராகக் கொண்டு வழிபட்டுச் சக்கரம் பெற்றார். கண் 'விழி'யையே மலராகக் கொண்டதனால் இத்தலப் பெயர் வந்தது என்பர்.

திருப்பெருந்துறை கொடுங்கையும் திருநனிப்பள்ளி கோடிவட்டமும் திருவீழிமிழலை வெளவால் நந்தி மண்டபமும் புகழ் பெற்றவை.

இத்தலச் சிவபெருமான்: வீழியழகர், இறைவி: பெருநலமாமுலையழகி, தீர்த்தம்: கல்யாண, விஷ்ணு தீர்த்தம். தலவிருக்ஷம்: வீழிச்செடி. காத்தியாயன முனிவர், பிரமன், இந்திரன், அகத்தியர் வழிபட்ட தலம்.

இங்கு முருகப் பெருமான் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு இரு தேவியர் உடன் விளங்கக் கிழக்கு நோக்கி நின்ற திருக்கோலத்தில் காட்சி தருகின்றார்.

சித்திரை மாதம் பிரம்மோற்சவம். திருப்புகழில் ஒரு பாடல் உள்ளது.

## 129. திருவெண்ணெய்நல்லூர்

புகைவண்டி நிலையம். பண்ருட்டிக்கு மேற்கே 24 கி.மீ. விழுப்புரத்தில் இருந்து 19 கி.மீ. தூரத்தில் உள்ளது.

திருவருட்துறை என்றும் பெயர். சுந்தரமூர்த்தி சுவாமிகள் மணம் புகாவண்ணம் வல்வழக்கிட்டுத் தடுத்தாட்கொண்ட மூர்த்தி. திருமணம் புத்தூரில் நடத்தத் திட்டமிட்டு மணமக்கள் மணப்பந்தலில் அமர்ந்திருக்க ஒரு வயோதிகர் வந்து மணமகன் தனக்கு அடிமை, அவன் பாட்டன் எழுதிய அடிமைச்சீட்டு தன்னிடம் உள்ளதாக வாதிட்டு அடிமைச் சீட்டின் மூலப்படி திருவெண்ணெய் நல்லூரில் இருப்பதாகக் கூறி அனைவரையும் அழைத்து வந்து 'திருவெண்ணெய் நல்லூர் பித்தனுக்கு நானும் என் மரபுகளோடு அடித்தொண்டு செய்து வருவோம்' என எழுதிக் கையெழுத் திட்டதனைக் காட்டினார். தன் வீட்டை காட்டுவதாகக் கூறி கோவிலுக்குள் சென்று மறைந்தார். மணம் நடக்கவிருந்த புத்தூர் 'மணம் தவிர்த்த புத்தூர்' என வழங்குகின்றது.

இங்குள்ள முருகப் பெருமான் அருணகிரிநாதருக்கு மயில் மீது நடனக் காட்சியளித்து அருளினார். இவர் ஆறுமுகப் பெருமானாகப் பன்னிரு கரங்களுடன் இரு தேவியருடன் கிழக்கு நோக்கி மயில் மீது அமர்ந்து காட்சி தருகிறார்.

சிவபெருமான் ஆலகால நஞ்சுண்டதனால் அம்பிகை வெண்ணெயினால் கோட்டை அமைத்து பஞ்சாக்கினி மத்தியில் தவம் புரிந்து இறைவனை அடைந்ததாகப் புராணம்.

திருப்புகழில் ஒரு பாடல் இத்தலத்திற்குரியது.

## 130. திருவேற்காடு

சென்னையிலிருந்து 24 கி.மீ. பூந்தமல்லியிலிருந்து 9 கி.மீ. தூரத்தில்



உள்ளது. இத்தலம் அன்னை கருமாரியம்மன் சக்தி பீடம். இதனை அடுத்து

ஒரு கி.மீ.ல் வேதபுரீசுவரர் சிவாலயம் உள்ளது. தேவாரப் பாடல் பெற்ற தொண்டை நாட்டுத் திருப்பதிகளில் இது 17வது தலம். இதனை வடவேதா ரண்யம் என்பர். சம்பந்தராலும் அருணகிரிநாதராலும் பாடப் பெற்றது.

இங்கு முருகப் பெருமான் பாலசுப்பிரமணியராக ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு நின்ற திருக்கோலத்தில் சுமார் 2.5 அடி உயரத்துடன் காட்சி தருகின்றார். இவருக்கு முன் இவரால் வழிபடப் பெற்ற சிவலிங்கம் (சதுர வடிவம்) உள்ளதைக் காணலாம்.

இரு உற்சவ மூர்த்திகள் உள்ளனர். ஒருவர் தம்பதி சமேதராக ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு மயிலின்றிக் காட்சி தருகின்றார்.

மற்றொரு உற்சவர் தம் இரு கைகளில் வில்லும் வேலும் ஏந்தி மற்ற இரு கரங்களில் வஜ்ஜிரமும் கத்தியும் கொண்டு வலது காலை மயில் மீது வைத்த நிலையிலும் இடது காலை கமல பீடத்தில் வைத்தும் காட்சி தருகிறார். மயில் வடபுறம் உள்ளது. மயிலின் வாயில் பாம்பும் காணப் பெறுகின்றது. அதன் கீழ் சிம்மம் காணப் பெறுகின்றது. இது அற்புதமான படைப்பு.

முருகப் பெருமான் தன் திருக்கர வேலால் உருவாக்கப்பட்ட தீர்த்தம் வேலாயுத தீர்த்தம். இத்தலச் சிவபிரான். வேதபுரீசுவரர், இறைவி: பாலாம் பிகை. தலமரம்: வெண்வேல மரம்.

சஷ்டி, கார்த்திகை சிறப்பு நாட்களாகும். திருப்புகழில் இரு பாடல்கள் உள்ளன.

## 131. திருவையாறு - ஏழு திருப்பதி

தஞ்சையிலிருந்து 11 கி.மீ. தூரத்திலுள்ளது. சூரிய புஷ்கரணி, சந்திர புஷ்கரணி, காவேரி, பாலாறு, நந்தி தீர்த்தம் ஆகிய ஐந்து ஆறுகள் சேர்வதனால் திருவையாறு எனப் பெயர் பெற்றது. காவேரிக் கோட்டம் என்பர்.

சுயம்புலிங்கம், திருநாவுக்கரசருக்குக் கயிலாய தரிசனம் தந்த தலம். தியாகராஜ சுவாமிகள் வாழ்ந்து, முக்தி பெற்ற தலம். சப்தஸ்தானத் தலங்களில் ஒன்று. இத்தலச் சிவபிரான்: ஐயாறப்பர். இறைவி: அறம் வளர்த்த நாயகி. தீர்த்தம்: பஞ்சநாத தீர்த்தம், சூரிய தீர்த்தம், காவிரி, சக்திபீடங்களில் ஒன்று.

இத்தல முருகப் பெருமான் தனுசு சுப்பிரமணியர் என்ற பெயருடன் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு கையில் வில்லுடன் கிழக்கு நோக்கி நின்ற திருக்கோலத்தில் பின்புறம் மயில் விளங்கக் காட்சி தருகின்றார். மயிலின் முகம் தெற்கு நோக்கி உள்ளது. அருகில் தேவியர் இருவரும் எழுந்தருளி உள்ளனர். உற்சவரும் மூலவரைப் போன்றே

விளங்குகின்றார். அம்பிகை சந்நிதி செல்லும் வழியில் தண்டபாணி சந்நிதி உள்ளது. இங்கு காவடி எடுத்தல் சிறப்பாகும்.



சஷ்டி, கார்த்திகை சிறப்பு நாட்கள். சித்திரைப் பெருவிழா, கந்த சஷ்டி, திருக்கார்த்திகை, பங்குனி உத்திரம் பெருவிழாக்களாகும். திருப்புகழில் ஒரு பாடல் உள்ளது.

## 132. திருவொற்றியூர் - ஒற்றியூர்

சென்னைக்கு வடக்கே 8 கி.மீ. தொலைவில் உள்ளது. சுந்தரமூர்த்தியார் சங்கலியாரைத் திருமணம் செய்த தலம். பட்டினத்தடிகள் யோக சமாதி அடைந்த தலம். தேவாரம் பாடிய மூவராலும் பாடல் பெற்ற தலம். திருப்புகழில் இரு பாடல்கள் உள்ளன.

இங்கு எழுந்தருளியுள்ள சிவபெருமான் புற்றிடம் கொண்டவர், வன்மீக நாதர், இறைவி: வடிவுடைநாயகி, தீர்த்தம்: பரமதீர்த்தம், தலமரம்: மகிழ மரம்.

இங்கு எழுந்தருளியுள்ள முருகப் பெருமான் மூலட்டான அருள்ஜோதி முருகன் என வழிபடப் பெறுகின்றார். ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்க ளும் கொண்டு நின்ற திருக்கோலத்தில் கிழக்கு நோக்கிக் காட்சி தருகின் றார். மயில் பின்புறம் தோகை விரித்த நிலையில் உள்ளது. உற்சவர் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங் களும் கொண்டு இரு தேவியருடன் மயில் பின்புறம் விளங்க தெற்கு நோக்கி நின்ற திருக்கோலத்தில் காட்சி தருகின்றார்.

பாலசுப்பிரமணியப் பெருமான் 5 அடி உயரம் கொண்டவர். திருவொற் றீசுவரர் கோவிலில் இராமநாதர் பர்வதவர்த்தினி சந்நிதிக்குப் பின்புறம் பாலமுருகன் நான்கு திருக்கரங்களுடன் விளங்குகின்றார். வள்ளி தெய்வ யானையுடன் தனிச்சந்நிதி உள்ளது.

ஆதிபுரீசுரர் எழுந்தருளியுள்ள கருவறையின் வாயிலுக்கு இருபுறமும் பெரிய அளவிலான வாயிற்காப்போர் இருவர் உள்ளனர். அதில் இடப்பக்க வாயிற்காப்போன் தலையில் ஓர் அங்குல நீளமுள்ள முருகப் பெருமான் திருவுரு உருவாக்கப்பட்டுள்ளது. ஒரு திருமுகமும் 6 திருக்கரங்களும் கை வில், வச்சிரம், சக்தி, அம்பு, வில், பாசம், அங்குசம், தாங்கி காட்சி தருகின்றார். வலக்காலை மயில் மீது வைத்துள்ளார்.

வலப்பக்க வாயிற்காவலன் தலையில் ஆடல்வல்லான் திருவுரு உள்ளது. இத்தகைய சிறந்த அமைப்பு வேறு எங்கும் காணக் கிட்டாதது ஆகும்.

சித்திரை, வைகாசி, புரட்டாசி மாதங்களில் திருவிழாக்கள் உண்டு. கந்தர்சஷ்டி விழாவும் மாசி பிரம்மோற்சவமும் சிறப்பு.

இரு திருப்புகழ்ப் பாடல்கள் இத்தலத்திற்குரியன.

## 133. திருவோத்தூர் - செய்யாறு

காஞ்சிபுரத்திலிருந்து 30 கி.மீ. வ.ஆ.மாவட்டம் செய்யாறு வட்டத்தில் உள்ள தலம்.

இறைவன் வேதத்திற்கு (வேதம் - ஓத்து)ப் பொருள் சொன்னதனால் திருஓத்தூர் எனப் பெயர் பெற்றது. சிவபிரான் வேதத்தின் பொருளைத் தேவர்கட்கும் முனிவர்கட்கும் இத்தலத்தில் அருளிச் செய்தார். வடக்குப் பிரகாரத்தில் பஞ்ச லிங்கங்கள் உள்ளன.

சிவனடியார்கள் வைத்த பனைகள் அனைத்தும் ஆண் பனைகளாகக் கண்டு சமணர்கள் நகைக்க சம்பந்தப் பெருமான் பதிகம்பாடி ஆண் பனைகளைப் பெண் பனைகளாக்கி அருளினார். கருங்கல்லால் ஆன பனைமரம் உள்ளது. நந்தி கிழக்கு நோக்கி இறைவனுக்கு முதுகு காட்டிய வாறு உள்ளது. இறைவன் கிழக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார். சதுர வடிவமான ஆவுடை அமைப்புடையது. சிவபெருமான் வீரநடனம் புரிந்த தலம்.

இத்தலச் சிவபிரான்: வேதநாதர், இறைவி: இளமுலைநாயகி, தீர்த்தம்: கலியாண கோடி, தலமரம்: பனைமரம்.

சிவபெருமான் சந்நிதிக்கு வாயு மூலையில் ஆறுமுகர் சந்நிதி உள்ளது. இப்பெருமான் பன்னிரு திருக்கரங்களுடன் மயில் மீது அமர்ந்து இரு தேவியருடன் கிழக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார்.

சித்ரா பௌர்ணமி, ஆடிப்பூரம், தைப் பிரம்மோற்சவம், மாசி மகம், பங்குனி உத்தர விழாக்கள் சிறப்பான விழாக்களாகும்.

முருகப் பெருமான் பூசித்த தலங்களில் ஒன்று. திருப்புகழில் ஒரு பாடல் உள்ளது.

## 134. தில்லை ஸ்தானம் - நெய்த்தானம்

திருவையாறுக்கு மேற்கே ஒரு கி.மீ. தொலைவில் உள்ளது. இதனைத் திருநெய்த்தானம் என்பர்.

இத்தலச் சிவபிரான்: நெய்யாடியப்பர், இறைவி: பாலாம்பிகை. தீர்த்தம்: காவிரி, கௌரி தீர்த்தங்கள், தலமரம்: வில்வம்.

இங்கு உள்பிரகாரத்தில் முருகப் பெருமான் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு நின்ற கோலத்தில் மயிலுடன் விளங்குகின்றார். இருபுறமும் தேவியர் எழுந்தருளியுள்ளனர். அபயம், வரதம், வஜ்ஜிரம், சக்தி முதலிய திருக்கரங்களில் காணப்படுகின்றது. உற்சவரும் மூலவரைப் போன்ற அமைப்புடையவர்.

கந்தசஷ்டி விழா, பங்குனி உத்திரம் திருவிழாக்களாகும். திருப்புகழில் ஒரு பாடல் உள்ளது.

## 135. தீர்த்தமலை - தீர்த்தகிரி

தர்மபுரி மாவட்டம் மொரப்பூர் புகைவண்டி நிலையத்திலிருந்து 13 கி.மீ. கருருக்த வடக்கே 14.5 கி.மீ. தூரத்தில் உள்ளது.

இத்தலம் பஞ்சபூதகிரி, சிவசைலம், தவசாரகிரி, பனலசடிலம், கங்கா கூடம், நியாதிநாசம், நிரந்தரம், துரிதகரம், தீர்த்தகிரி, சுவாமிசிங்கம், இராமேட்டம், ரோககரம் என்ற பெயர்களைப் பெற்ற தலம்.

மலையின் அடிவாரத்திலும் மலை மேலும் கோயில்கள் உள்ளன. மலை மேல் ஒரு கி.மீ. பாதையில் சென்று தீர்த்தகிரீசுரரையும் வடிவழகியம்மையையும் வழிபடலாம். இங்கு முருகப் பெருமான் ஒரு திருமுகமும், நான்கு திருக்கரங்களும் கொண்டு தண்டாயுதபாணியாய் வடக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார்.

மலையடிவாரத்தில் உள்ள திருக்கோயிலில் ஆறுமுகப் பெருமான் இரு தேவியருடன் எழுந்தருளியுள்ளார்.

இங்கு அஷ்டபுஜ துர்க்கையும் சகஸ்ரலிங்கமும் தனிச்சிறப்பு. வசிஷ்டர் வழிபட்ட தலம். இராம, அக்னி, குமார, அகத்திய, கௌரி என்னும் ஐந்து வற்றாத தீர்த்தச் சுனைகள் மலை மீது உள்ளன.

திருப்புகழில் ஒரு பாடல் உள்ளது.

## 136. தேவனூர்

செஞ்சியிலிருந்து சேத்துப்பட்டு செல்லும் வழியில் 13 கி.மீ. தூரத்தில் உள்ளது. இங்குள்ள ஸ்ரீநாகேஸ்வரன் திருக்கோவிலில் பழனி முருகப் பெருமானின் திருக்கோலத்தில் முருகப் பெருமான் எழுந்தருளியுள்ளார்.

மற்றொரு சந்நிதியில் முருகப் பெருமான் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு மயில் மீது அமர்ந்த கோலத்தில் எழுந்தருளியுள் ளார். உற்சவர் வள்ளி, தெய்வயானையுடன் மயில் மீது அமர்ந்த கோலத் தில் காட்சி தருகிறார்.

திருப்புகழில் மூன்று பாடல்கள் பெற்ற தலம்.

## 137. தேவிகாபுரம் - கனககிரி

போளூருக்குக் கிழக்கே 11 கி.மீ.; ஆரணிக்கு மேற்கே 15 கி.மீ. தொலைவில் உள்ளது.

கனககிரி, கனகாத்திரி, கனகாசலம், தேவியம்பதி, தேவிகாபுரம், தேவகி புரம், தேவிகீழ்புரம், நாராயணவனம் எனப் பல பெயர்களைக் கொண்ட தலம்.

குன்றின் மேல் கனககிரீசர் திருக்கோவிலும் குன்றின் கீழ் பெரிய நாயகி அம்மன் கோவிலும் உள்ளது. 320 படிகளைக் கொண்டது இம்மலை. மலைக்கோவிலுக்குச் செல்லும் வழியில் வீரபத்திரர் சந்நிதி உள்ளது.

இங்கு முருகப் பெருமான் ஆறுமுகராக மயில் மீது அமர்ந்துள்ளார். பன்னிரு திருக்கரங்களைக் கொண்டவர். இவரும் காமக்கூர் முருகப் பெருமானும் ஒரே சிற்பியால் உருவாக்கப்பட்டதாகக் கூறுவர்.

அருகிலுள்ள வாழைப் பந்தல் என்னுமிடத்தில் தேவி வாழை இலையி னால் பந்தல் அமைத்து சிவலிங்க வழிபாடு செய்துவர கடும் கோடையி னால் போதுமான நீர் இன்றி முருகப் பெருமானிடம் உதவி வேண்ட, பெருமான் வில்லேந்தி அருகிலுள்ள மக்களை நோக்கி அம்பெய்ய அம்மலைகளிலிருந்து நீர் ஆறாகப் பெருகியது. சேயாகிய முருகப் பெருமானால் உருவான அவ்வாறு சேயாறு எனப் பெயர் பெற்றது.

இங்குச் சிவபெருமான் விசுவநாதர், இறைவி: விசாலாட்சியம்மாள். இங்கு சிவபிரான் வெந்நீர் அபிஷேகம் கொள்கிறார். தலமரம்: மகிழமரம்.

அக்னி தீர்த்தமருகில் புதிய முருகன் ஆலயம் அமைக்கப்பட்டுள்ளது.

பங்குனி உத்திரம், கந்த சஷ்டி சிறப்பான விழாக்கள். திருப்புகழில் ஒரு பாடல் உள்ளது.



கிணற்றுக்கடவு (கோவை மாவட்டம்) ஊரினைப் பொன்மலை, கனககிரி என்பர். இத்தலமே திருப்புகழ்ப் பாடல் பெற்றது என்பர் சிலர். இங்கு மலைமேல் முருகன் கோயில் கொண்டுள்ளார்.





## 138. நாகப்பட்டினம்

தஞ்சை மாவட்டத்தில் அமைந்த புகைவண்டி நிலையம்.

சப்தவிடங்கத் தலங்களுள் ஒன்று. திருநாகைக்காரோணம் என்பர். புண்டரீக முனிவரைக் காயத்தோடு சிவபிரான் ஆகோரணம் செய்ததனால் இத்தலப் பெயர் வந்தது.

இத்தலச் சிவபிரான்: காயாரோகண சுவாமி, இறைவி: நீலாயதாட்சி, தீர்த்தம்: தேவதீர்த்தம், புண்டரீக தீர்த்தம், தல மரம்: மாமரம். 64 சக்தி பீடத் தலங்களுள் ஒன்று. இங்கே சுந்தரவிடங்கர் - பாராவார தரங்க நடனம் தனிச்சிறப்பு. தேவேந்திரனால் பூஜிக்கப்பட்ட கோமேதக லிங்கம் உள்ளது.

இங்கு மேலக்குமரன் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு இரு தேவியருடன் நின்ற கோலத்தில் எழுந்தருளியுள்ளார்.

தனிச் சந்நிதியில் ஆறுமுகப் பெருமான் பன்னிரு திருக்கரங்களுடன் மயில் மீது அமர்ந்த திருக்கோலத்தில் கிழக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார். தேவியர் இருவரும் அருகில் காட்சி தருகின்றனர்.

உற்சவர் மயிலுடன் நின்ற கோலத்தில் காட்சி தருகின்றார். கந்த சஷ்டி விழா சிறப்பு. பன்னிரண்டு ராசிகளும் ஒரே கல்லில் சுவாமி சந்நிதி மேல் மண்டபத்தில் சிற்பங்களாக வடிக்கப்பட்டுள்ளன. அம்பிகை, ஆறுமுகன், சந்நிதிகளில் கருங்கல் சங்கலிவளையம் வடிக்கப்பட்டுள்ளது வெகு அருமை. திருப்புகழில் மூன்று பாடல்கள் உள்ளன.

## 139. நாங்குனேரி

திருநெல்வேலி - நாகர்கோவில் பேருந்து, புகைவண்டிப் பாதையில் 29 கி.மீ. தொலைவில் உள்ளது.

இத்தலச் சிவபிரான் திருநாகேசுவரர். இறைவி: சிவகாமி அம்மாள்.

இத்தலத்தின் நான்கு புறமும் ஏரிகள் சூழ்ந்துள்ளமையினால் 'நாங்குனேரி' எனப் பெயர் பெற்றது. நாகன் என்பவன் வெட்டிய ஏரி. இது நாகன் ஏரி என்று வழங்கி பின் நாகன ஏரி என்றாயிற்று என்பர். இத்தலம் திருசிரிவர மங்கை, தோத்தாத்திரி க்ஷேத்திரம் என்றும் பெயர் பெற்றது. இதனை நாங்குநேரி, நாங்கூநேரி, நாகனசேரி என்பர்.

இங்கு முருகப் பெருமான் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு மயிலுடன் நின்ற திருக்கோலத்தில் தேவியர் இருவருடன் கிழக்கு நோக்கிக் காட்சி தருகின்றார்.

வைகாசி விசாகம், கந்த சஷ்டி முக்கியமான விழாக்களாகும். திருப்புகழில் மூன்று பாடல்கள் பெற்ற தலம்.

வானமாமலை பெருமாள் கோவிலும் வானமாமலை ஜீயர் மடமும் உள்ளது. இங்கு வானமாமலைப் பெருமாளுக்கு அபிஷேகம் செய்யும் எண்ணெய் தீராத நோய்களைத் தீர்க்கும் மருத்துவ குணமுடையது.

## 140. நிம்பமுரா - நிம்பபுரம்

கர்நாடக மாநிலம் ஹோஸ்பட் அருகில் உள்ள தலம் நிம்பபுரம். சுமார் 80 ஆண்டுகட்கு முன்னர் துங்கபத்திரை ஆற்றில் ஏற்பட்ட வெள்ளப் பெருக்கினால் இக்கோவில் அடித்துச் செல்லப்பட்டது. கோவில் இடிபாடு களும் சில சிவலிங்கங்களும் கிடைத்துள்ளன. முருகப்பெருமான் திருவுரு கிடைக்கப் பெறவில்லை.

திருப்புகழில் ஒரு பாடல் உள்ளது.

## 141. நெடியமலை

திருத்தணி வட்டத்தைச் சேர்ந்த நெடியம் என்ற ஊராகும். பள்ளிப்பட்டி யிலிருந்து நகரி செல்லும் பேருந்துத் தடத்தில் உள்ளது. யானை படுத்திருப் பது போன்ற அமைப்புடைய மலையாததால் இத்தலத்தை யானைமலை, கஜகிரி என்றும் அழைப்பர். மலை மீதுள்ள கோவிலையடைய 600 படிகள் ஏற வேண்டும். இந்திரன் செங்கலுவ என்னும் நீலோற்பல மலரால் வழிபட்டதனால் செங்கல்வராய சுவாமி எனப் பெறுகின்றார். ஒரு திருமுக மும் நான்கு திருக்கரங்களும் கொண்டு இருபுறமும் தேவியர் சூழ கடிகஸ்தத்துடன் காட்சி தருகின்றார்.

உற்சவர் மூலவரைப் போன்று இரு தேவியருடன் நின்ற திருக்கோலத்தில் அருகில் மயில் விளங்க எழுந்தருளியுள்ளார். வள்ளி தேவசேனா தேவி சமேதராக ஆறுமுகரும், தேவியருடன் பாலசுப்பிரமணியரும் காட்சி தருகின்றனர். ஆறுமுகம் உற்சவர் திருவுரு வெகு அழகு.

ஆடிக் கிருத்திகையில் புஷ்பக்காவடி சிறப்பு. சனவரி முதல் நாளன்று சந்தனக்காப்பு வெகு அழகு.

தீர்த்தம்: செங்கல்வ தீர்த்தம், நீலோத்பல தீர்த்தம். திருப்புகழில் ஒரு பாடல் உள்ளது.

## 142. நேரூர் - நெருவூர்

திருச்சி கரூருக்கு அருகில் உள்ள தலம். நெருவூர் என்பர். இங்குச் சிவபெருமான் அக்னீஸ்வரர் வலப்பக்கமும் இடப்பக்கம் அம்பிகையும் நடுவில் முருகப் பெருமான் சந்நிதியும் அமைந்து இங்கு முருகப்பெருமான் சோமாஸ்கந்த மூர்த்தியாகக் காட்சி தருகின்றார்.

ஆறுமுகப் பெருமான் பன்னிரு திருக்கரங்களுடன் காட்சி தருகிறார். (தேவியர் இல்லை). திருப்புகழில் ஒரு பாடல் உள்ளது.



## 143. திருப்பந்தணைநல்லூர்

திருப்பந்தணைநல்லூர் என்னும் இத்தலம் குற்றாலம் புகைவண்டி நிலையத்திற்கு வடமேற்கே 10 கி.மீ. தூரத்தில் உள்ளது. தென்கயிலை, கோலூர், கொன்றைவனம், பானுபுரம், விஷ்ணுபுரம், இந்திரபுரி, கண்ணுவராச்சிரமம், வாலிநகர், அன்னமிடும் மெய்ப்பேரூர், கந்துகபுரி, ஆவூர் என்றும் பெயர்களுண்டு.

இங்குச் சிவபெருமானும் உமாதேவியும் திருமணக் கோலத்தில் காட்சி தருகின்றனர். இறைவன்: பசுபதீஸ்வரர், இறைவி: வேணுபுஜாம்பிகை, தீர்த்தம்: சூர்யபுஷ்கரணி, தலமரம்: சரக்கொன்றை.

இறைவி பந்தாடுவதில் ஈடுபட்டு ஈசனை மதியாமல் இருந்ததால் சாபம் பெற்று பின் இத்தலத்தில் பசு வடிவில் தவம் செய்து உய்ந்த தலம்.

திருப்புகழில் ஆறு பாடல்கள் உள்ளன.

## 144. பழமுதிர்ச்சோலை - அழகர்கோயில்



மதுரைக்கு வடக்கே 19.2 கி.மீ. தூரத்தில் அமைந்துள்ளது.

இத்தலம் திருமாலிருஞ்சோலை, விருஷபகிரி என்றும் அழைக்கப் பெறுகின்றது. முருகன் தலமாகிச் சைவத்திற்கும் திருமாலின் தலமாகி வைணவத்திற்கும் ஒருசேர ஒரே தலமாக அமைந்துள்ளது. அழகர்கோயில் மலையடிவாரம். பழமுதிர்ச்சோலை மலையின் உச்சியில் உள்ளது.



வள்ளிநாயகிக்கு அருள்புரிந்த குமரனே இத்தலத்தில் எழுந்தருளியிருப்ப தாகக் கந்தபுராணம் கூறுகிறது. திருப்பரங்குன்றத்தை முதல் வீடாகக் கொண்டு வலமாகச் சுற்றி வந்து மீண்டும் பழமுதிர்ச்சோலையைக் கடைசிப் படைவீடாக நக்கீரர் கொண்டார். ஆறுபடை வீடுகளில் மூன்று படை வீடுகள் மதுரை மாவட்டத்திலேயே (பழனி, பழமுதிர்ச்சோலை, திருப்பரங் குன்றம்) உள்ளன.

ஔவையாரிடம் குமரப் பெருமான் மாடு மேய்க்கும் சிறுவன் வடிவில் சோலையில் 'சுட்ட பழம் வேண்டுமா? சுடாத பழம் வேண்டுமா? என வினவிய தலம். எனவே தான் இத்தலம் பழம் - உதிர் - சோலை எனப் பெயர் பெற்றது. ஔவைக்கு முருகப் பெருமான் அருள்புரிந்த தலம்.

முருகப் பெருமானின் வேலின் சிலா வடிவம் நடப்பட்டு வழிபடப்படு கின்றது. இத்தலப் பெருமான் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு இருபுறமும் வள்ளி, தேவசேனாதேவியர் விளங்க நின்ற திருக்கோலத்தில் கிழக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார்.

மலையின் தென்புற அடிவாரத்தில் திருமால் கள்ளழகராகச் சங்கு, சக்கரம், கதாயுதம், வில், வாள் என்ற பஞ்சாயுதங்களைத் தாங்கி இரு தேவியருடன் காட்சி தருகிறார்.

'அழகர்' என்ற பெயர் மாமனாகிய திருமாலுக்கும் மருமகனாகிய முருகனுக்கும் பொதுப் பெயராக விளங்குகின்றது.

இங்குப் பதினெட்டாம்படிக் கோபுரம் உள்ளது. இங்கு திருமாலே கருப்பண்ணசாமியாக விளங்குகின்றார். இத் திருக்கோபுர வாயில் ஆடி மாதம் பதினெட்டாம் பெருக்கு அன்று மட்டுமே திறக்கப்படுகின்றது. ஒரே ஒரு நாள் மட்டும் விபூதி கொடுக்கப்படுகின்றது.

மலை மேல் 3.2 கி.மீ. தொலைவில் சிலம்பாறு (நூபுரகங்கை) என்னும் தீர்த்தம் உள்ளது. இது திருமாலின் சிலம்பிலிருந்து உற்பத்தியாகி வருவதாக ஐதீகம்.

தலமரம் நாவல். பொதுவாக நாவல் மரங்கள் ஆவணி மாதம் (விநாயக சதுர்த்தசியின் போது) பழுக்கும். ஆனால் இம்மரம் (சஷ்டியின் போது) ஐப்பசி மாதம் பழுக்கும் சிறப்பினை உடையது.

திருப்புகழில் பதினாறு பாடல்கள் உள்ளன.

## 145. பழனி - திருஆவினன்குடி

திண்டுக்கல் - கோவை வழியில் 56 கி.மீ. தொலைவில் உள்ளது. பழனியும் திருஆவினன்குடியும் அடுத்தடுத்து அமைந்த தலம். 12 திருப் புகழ் பாடல்கள் பெற்றுள்ளது. ''நாதவிந்து கலாதி நமோ நம'' என்னும் திருப்புகழ் இத்தலத்திற்குரியது.

கயிலையில் இருந்த சிவன், பார்வதியிடம் நாரதர் மாங்கனி ஒன்றைக் கொடுத்தார். அதை முருகனும் விநாயகரும் தமக்கே வேண்டும் என்றனர். சிவபிரான் உலகை முதலில் சுற்றி வருபவருக்கே கனி என்றார். முருகப் பெருமான் மயில் மீதே உலகை வலம் வரப் புறப்பட்டார். ஆனால் விநாயகர் தாய், தந்தையரை வலம் வந்து அவர்களை வலம் வருவதே உலகை வலம் வந்ததாகப் பொருள் என விளக்கம் கூறிப் பழத்தினைப்

பெற்றுக் கொண்டார். உலகை வலம் வந்து திரும்பிய முருகன் கோபம் கொண்டு ஆண்டிக் கோலத்துடன் இம்மலைக்கு எழுந்தருளிய 'ரது கோபத்தை யாராலும் தணிக்க முடியாது போக ஔவையார் முருகனைக் காண வந்து ''முருகனை நீயே பழம், பழமே நீ. உனக்கு வேறு பழம் வேண்டுமா'' எனச் சமாதானம் செய்தார். எனவே இத்தலத்திற்குப் பழம் நீ, பழநி எனப் பெயர் வந்தது.



மலை மீதுள்ள முருகப்பெருமான் போகர் என்னும் சித்தரால் என்றும் அழியாத ஒன்பது பாஷாணங்களை உருக்கி ஒன்று சேர்த்து அமைக்கப் பெற்றவர்.

எப்போதும் அபிஷேகம் நடந்து கொண்டே இருக்கும். முருகப்பெருமானின் திருமேனியில் தோய்ந்த அபிஷேகப் பொருட்கள் தீராத நோய்களைத் தீர்க்கும் மருத்துவ குணம் உடையதாகும். குன்மம், குட்டம் போன்ற தீராத நோய்களையும் தீர்க்கக் கூடியது. பழனிப் பஞ்சாமிர்தமும் முருகன் திருவடிகளில் அப்பி வைத்த சந்தனமும் அளவிட முடியாத ஆற்றல் வாய்ந்தன.

கர்பக்கிரகத்தின் பின்னே முஸ்லிம்களும் வந்து வணங்குகிறார்கள். இத்தலத்திற்குப் பொதினி, சித்தன் வாழ்வு என்ற பெயர்களும் உண்டு.

இரவு அர்த்தசாமத்தில் தண்டாயுதபாணியின் மேல் சாத்தப்படும் சந்தனமும் கௌபீன தீர்த்தமும் அடுத்த நாள் அதிகாலையில் நிகழும் விசுவரூப பூசைக்குப் பின் வழங்குவர். இவை தீராத நோயையும் தீர்க்கும் மருத்துவ குணமுடையவை. தண்டாயுதபாணியின் திருமேனியில்பட்ட விபூதியும் பன்னீரும் அபிஷேகப்பாலும் அபிஷேகப் பஞ்சாமிர்தமும் சிறப்பு.

அலகு குத்தி வருதல், காவடி, முடிப் பிரார்த்தனை, பால் குடம் எடுத்தல் போன்றவை சிறப்பாகும்.

டுகளில் மூன்றாவது படை வீடு. திரு, ஆ, இனன், கு,
நமால், ஆ -காமதேனு, இனன் -சூரியன், கு -பூமி, டி
பார் பூசித்த தலம். எனவே திருஆவிணன்குடி எனப் பெயர்
ம் நீ'' என்பதன் திரிபு பழனி ஆயிற்று. சிவகிரி என்றும்



கப் பெருமான் பாலகுமாரனாக வேலாயுத சுவாமியாக
ளார். ஒரு திருமுகமும், நான்கு திருக்கரங்களும் கொண்டு
ர்ந்து இடதுகாலை மடித்து, வலதுகாலைத் தொங்க விட்டு
ி எழுந்தருளியுள்ளார். மயிலின் முகம் இடப்புறத்திலும்
புறத்திலும் உள்ளது. உற்சவரும் மூலவர் போன்றே காட்சி

அடி உயரமுள்ள இம்மலையின் (சிவகிரி) அருகில் இடும்பன்
. இதை சக்தி கிரி என்பர். மலையடிவாரப் படிக்கட்டின்
பாத விநாயகர், மீனாட்சி சுந்தரேஸ்வரர் கோவில்கள்

உள்ளன. மலைமேல் செல்ல ரயில் பாதையும், யானைப் பாதையும் உள்ளன. 700 படிகள் உள்ளன. 5 நிலைகளைக் கொண்ட அழகிய ராஜகோபுரம் கம்பீரமாகக் காட்சி தருகின்றார்.

இரண்டாம் பிரகாரத்தில் வல்லப விநாயகர் சந்நிதியும் கொடி மரமும், அக்னிக் குண்டமும் தங்க ரத மண்டபமும் உள்ளது.

நாயக்கர் மண்டபத்தில் சுப்பிரமணியர், விநாயகர், நக்கீரர், அருணகிரி நாதர் சந்நிதிகள் உள்ளன.

அடிவாரக் கோயிலில் தனி முருகனாக மயில்வாகனனாக அமர்ந்த கோலத்தில் காட்சி தருகின்றார். இங்கு அருணகிரியாருக்கும் ஜெபமாலை வழங்கினார். ஊரின் நடுவில் மற்றொரு முருகன் கோயிலும் உள்ளது.

திருப்புகழில் மொத்தம் 95 பாடல்கள் பெற்ற தலம்.

## 146. பழையாறை

கும்பகோணத்திற்குத் தென்மேற்கே 7 கி.மீ. தூரத்தில் உள்ளது.

இத்தலச் சிவபிரான் சோமேசர், இறைவி: சோமகலாநாயகி. தீர்த்தம்: சோமதீர்த்தம். சந்திரன் பூசித்த தலம். அமர்நீதி நாயனார் வாழந்த தலம். காமதேனுவின் புதல்விகளில் விமலி பூசித்த தலம்.

இங்கு முருகப் பெருமான் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு காட்சி தருகிறார். திருப்புகழில் ஒரு பாடல் இத்தலத்திற்குரியது.

## 147. பவாணி - திருவாணிக்கூடல்

ஈரோட்டிலிருந்து வடக்கே 14 கி.மீ. தூரத்தில் உள்ளது. காவிரி, பவாணி அமுத நதி கூடுதலால் 'பவாணி முக்கூடல் எனப்படும். குபேரன் பூசித்ததால் 'தக்ஷிண அளகை' பராசர க்ஷேத்திரம். தக்ஷிணவதரிகாஸ்ரமம், தக்ஷிண பிரயாகை, திரிவேணி சங்கமம் என இத்தலம் பெயர் பெறும். தரிசித்தோருக்கு யாதொரு தீங்கும் நண்ணாத தலமாதலால் 'நண்ணா ஊர்' நணா எனப்படும். இத்தலம் திருநணா என்றழைக்கப்படுகின்றது.

குபேரன், விசுவாமித்திரர், பராசரர் பூசித்த தலம்.

இங்கு அருள்மிகு சங்கமேஸ்வரர் கோயில் வலப்பக்கமும் வேதநாயகி அம்மன் இடப்பக்கமும் திருமுருகன் நடுவிலும் அமைந்து சோமாஸ்கந்தரா கக் காட்சி தருகிறார்.

இத்தலம் திருநணா, பவாணி, பவாணிகூடல், முக்கூடல், சங்கமக்ஷேத்தி ரம், பராசர க்ஷேத்திரம், தக்ஷண அளகை (பிரயாகை) வக்கிரபுரம், பதரிவனம், வீரபுரம், விஜயாபுரி எனப்படும். இத்தல இறைவன் சங்கமேசு வரர், சங்கமுகநாதர், மருத்துலிங்கம், வக்கிரேசுவரன், அளகேசன், வானி லிங்கேசுவரன், நட்டாற்றீசுவரன், திருநண்ணாவுடையார் என அழைக்கப்

பெறுகின்றார். இத்தல இறைவி சங்கமேசுவரி, வேதநாயகி, மருத்துவநாயகி, வக்கிரேசுவரி, பண்ணார்மொழியம்மை, பந்தார்விரலம்மை என அழைக்கப் பெறுகின்றார். ஆதிகேசவப் பெருமாள், சௌந்தரவல்லித் தாயார் சந்நிதியுள்ளது. தலமரம் இலந்தை. தீர்த்தம்: காவிரி, பவாணி, அமுதநதி, சூரிய, சக்கர தேவ தீர்த்தங்கள்.

இம்முருகப் பெருமான் ஆறுமுகமும் பன்னிரு திருக்கரங்களும் கொண்டு தேவிமாருடன் மயில் மீது அமர்ந்து வேலுடன் காட்சி தருகிறார். இவர் 'சண்முக சுப்பிரமணியர்' என்று அழைக்கப்படுகின்றார்.

உற்சவர் ஒரு முகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு விளங்குகின்றார். திருப்புகழில் ஒரு பாடல் உள்ளது.

## 148. பாகசாலை - பாகை

சென்னை - அரக்கோணம் புகை வண்டிப் பாதையில் திருவள்ளூரை அடுத்த மணவூரில் இறங்கி 4 கி.மீ. செல்ல வேண்டும்.

இங்கு முருகப் பெருமானுக்குத் தனிக்கோவில் உள்ளது. முருகப் பெருமான் 5.5 அடி உயரத்தில் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு கரங்களில் அபயம், கண்டிகை, அக்கமாலை, குரங்கம் கொண்டு யோக மூர்த்தியாகக் காட்சி தருகின்றார். தேவியர் இல்லை. உற்சவர் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு தேவியருடன் காட்சி தருகின்றார்.

200 ஆண்டுகட்கு முன்னர் கிறித்தவப் பாதிரியார் ஒருவர் இங்கு எழுந்தருளியுள்ள முருகப் பெருமானைக் காண விரும்ப மக்கள் அவரைத் தடுத்து விட்டனர். முருகப் பெருமான் அந்தணர் வடிவில் அவரை அழைத்து வந்து அருள் புரிந்தார். எனவே இத்தல முருகப் பெருமான் 'பாதிரி முருகன்' எனப் போற்றப் பெறுகின்றார்.

அயனைச் சிறையில் அடைத்து படைப்புத் தொழிலை மேற்கொண்ட முருகர். எனவே வள்ளி தெய்வயானை இல்லை.

பிரம்மசாஸ்தா வடிவில் முருகப் பெருமான் எழுந்தருளியுள்ள தலங்களில் ஒன்று.

திருப்புகழில் மூன்று பாடல்கள் உள்ளன.



## 149. பாக்கம்

திருவண்ணாமலை - கள்ளக்குறிச்சி பேருந்துப் பாதையில் கடுவனூரில் இறங்கி கிழக்கே 4 கி.மீ. செல்ல வேண்டும்.

இங்கு ஸ்ரீசுகந்தளாம்பிகை சமேத ஸ்ரீசோளீஸ்வரர் ஆலயம் உள்ளது. இதன் அருகில் பாறையின் மீது முருகன் கோவில் உள்ளது. 15 படிகள் ஏறிக் கோவிலுக்குச் செல்ல வேண்டும்.

இங்கு ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு மயில் மீது அமர்ந்த திருக்கோலத்தில் முருகப் பெருமான் எழுந்தருளியுள்ளார். இவர் பாலமுருகனாக எழுந்தருளியுள்ளதால் தேவியர் இல்லை.

இங்கு பங்குனி மாதம் பூரத்தன்று அலகு போடுதல், செக்கு இழுத்தல், மிளகாய் இடித்தல், மஞ்சள் இடித்தல், பூந்தேர் அலகு குத்தி இழுத்தல் முதலிய பிரார்த்தனைகள் நிறைவேற்றுவது சிறப்பாகும்.

ஆடிக் கிருத்திகை, தைப் பூசம், பங்குனிப் பூசம் சிறப்பான விழாக்களாகும். ஆறுமுகருக்குத் தனிக் கோயில் ஒன்று உள்ளது.

திருவள்ளூரிலிருந்து 5 கி.மீ. தொலைவில் உள்ள பாக்கம் என்ற தலமே திருப்புகழ் பெற்ற தலம் என்பாரும் உண்டு. இங்கு தழுவக்குழைந்தீசர் சிவாலயத்தில் தூவாரமூர்த்தியாகப் பாலமுருகன் காட்சி தருகின்றார். சிறிய திருமேனி.

இருபாடல்கள் 'பாக்கம்' என உள்ளன.

## 150. பாடி - திருவலிதாயம்

சென்னையிலிருந்து அம்பத்தூர் செல்லும் வழியில் வில்லிவாக்கம் அம்பத்தூருக்கு இடையே தற்போதுள்ள கொரட்டூர் புகைவண்டி நிலையத்தின் அருகில் உள்ளது. இத்தலம் 'திருவலிதாயம்' என தேவாரப் பாடல்கள் குறிப்பிடுகின்றன. பாரத்துவாஜர், பிரஹஸ்பதி, அனுமார் முதலியோர் பூசித்த தலம். இத்தலச் சிவபிரான்: வலிதாய நாதர். இறைவி: தாயம்மை. தீர்த்தம்: பாரத்துவாஜ தீர்த்தம். தலமரம்: பாதிரி மரம்.

பரத்துவாஜ முனிவர் கருங்குருவி (வலியன்) யாக வந்து வழிபட்டதனால் வலிதாயம் எனப் பெயர் பெற்றது.

இங்கு பிரகாரத்தில் வருண திக்கில் சுப்பிரமணியராக ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு கிழக்கு நோக்கி நின்ற திருக்கோலத்தில் பின்புறம் மயில் விளங்க இருபுறமும் தேவியருடன் முருகப் பெருமான் 3 அடி உயரத்தில் விளங்குகின்றார்.

உற்சவர் மூலவர் போன்ற தோற்றத்துடன் 1.5 அடி உயரம் கொண்டவர்.

திருப்புகழில் ஒரு பாடல் உள்ளது.

அனுமன் பூசித்த இலிங்கமும், இந்திரன் சாபம் நீக்கிய மீனாட்சி சுந்தரரும், பரத்துவாசர் பூசித்த லிங்கமும் இத்தலத்தில் சிறப்பாகும்.

பிரம்மாவின் திருமகளான கமலை, வல்லி என்ற இருவரையும் விநாயகப் பெருமான் இத்தலத்தில் திருமணம் புரிந்து கொண்டதாக ஐதீகம்.

## 151. பாபநாசம் - பொதியமலை

திருநெல்வேலி மாவட்டம் அம்பாசமுத்திரம் வட்டத்தில் பொதியமலைச் சாரலில் அமைந்த தலம். அம்பாசமுத்திரத்திலிருந்து 11 கி.மீ. தொலைவில் உள்ளது.

இங்கு முருகப் பெருமானுக்குத் தனிக்கோயில் உள்ளது. முருகப் பெருமான் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு கிழக்கு நோக்கி நின்ற திருக்கோலத்தில் வள்ளி தெய்வயானையுடன் எழுந்தருளியுள்ளார். அகத்திய முனிவர் வழிபட்ட முருகப் பெருமான் இவர்.

சஷ்டி, கார்த்திகை சிறப்பு. கார்த்திகை விழா, கந்தர் சஷ்டி சிறப்பு விழாக்களாகும். திருப்புகழில் இரு பாடல்கள் உள்ளன.

## 152. பிரான்மலை - கொடுங்குன்றம்

இராமநாதபுரம் சிவகங்கையிலிருந்து 35 கி.மீ. திருப்புத்தூரிலிருந்து 24 கி.மீ. தூரத்தில் உள்ளது.

இத்தலம் கொடுங்குன்றம் எனப்படும். இங்குள்ள சிவபிரான் கொடுங்குன்றீசர். இறைவி: குயிலமிர்தநாயகி.

ஆதிசேஷனுக்கும் வாயு பகவானுக்கும் இடையே நடந்த போட்டியில் மேருமலையிலிருந்து பெயர்ந்தவற்றுள் இம்மலையும் ஒன்று. இம்மலை லிங்கமாக உருப் பெற்றுள்ளது. வாயுவினால் உருவான தலமாதலால் இத்தலம் பிரசண்டகிரி, கடோரகிரி என அழைக்கப்படுகிறது.

மலைமேல் அமைந்த கோவிலில், சிவபெருமான் மங்கைநாதரும் அம்மை தேனாம்பிகையும் திருமணக் கோலத்தில் காட்சி தருகின்றார். லிங்க வடிவம் இன்றிச் சிவபிரான் உருவத் திருமேனியில் இங்குக் காட்சி தருவது இத்தலம் ஒன்றில் மட்டுமேயாகும்.

பைரவருக்குத் தனிக்கோயில் உள்ளது. அகத்தியருக்குச் சிவபிரான் திருமணக் கோலம் காட்டிய தலங்களுள் ஒன்று.

இங்கு முருகப் பெருமான் ஒரு திருமுகமும் இரு திருக்கரங்களும் கொண்டு தேவியர் இருவருடன் நின்ற கோலத்தில் காட்சி தருகின்றார். இங்கு யானை முருகப் பெருமானின் வாகனமாக உள்ளது.

கிருத்திகை சிறப்பாகும். சித்திரை மாதம் பிரமோற்சவம், கந்தசஷ்டி, திருக்கார்த்திகை சிறப்பான விழாக்களாகும். திருப்புகழில் இரு பாடல்கள் உள்ளன.

## 153. புகழூர் - புகழிமலை

கரூர் - சேலம் புகைவண்டி மார்க்கத்தில் உள்ளது. புகழூர் புகைவண்டி நிலையத்திலிருந்து 3 கி.மீ. தூரத்தில் உள்ளது. குழுந்தமலை, ஆறுநாட்டார் மலை என்பர். 280 படிகள் உள்ளன. இம்மலை மீது சுந்தரேசுவரர் திருக்கோயில் உள்ளது. இறைவி: மீனாட்சி. தீர்த்தம்: நாகர்சுனை, காந்த தீர்த்தச்சுனை, மலைசுரவர் சுனை.

இங்கு முருகப் பெருமான் பாலசுப்பிரமணியராகச் சுவாமிமலை சுவாமிநாதன் போன்று தனித்து எழுந்தருளியுள்ளார். ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு கிழக்கு நோக்கி நின்ற திருக்கோலத்தில் மயில் பின்புறம் நிற்க எழுந்தருளியுள்ளார். உற்சவர் தேவியருடன் காட்சி தருகின்றார்.

மாதக் கார்த்திகை, அமாவாசை சிறப்பு நாட்கள். கந்தர் சஷ்டி, பங்குனி உத்திரம் சிறப்பு விழாக்களாகும். திருப்புகழில் ஒரு பாடல் உள்ளது. குன்றுதோறாடலில் இம்மலையும் சேரும்.

## 154. பூம்பறை

கொடைக்கானலுக்கு மேற்கே 20 கி.மீ. தூரத்தில் உள்ளது. பழனிக்குத் தெற்கே வராககிரி மேல் உள்ளது.

மலையடிவாரத்தில் அமைந்த கோயில். இங்குள்ள பெருமான் ஸ்ரீ குழந்தை வேலப்பர் என்ற திருநாமம் கொண்டவர்.

இங்கு முருகப் பெருமான் தண்டாயுதபாணியாகக் காட்சி தருகின்றார். நவபாஷாணத்தால் உருவாக்கப்பட்ட இவர் மேற்கு நோக்கி எழுந்தருளி யுள்ளார். உற்சவர் வள்ளி தெய்வயானையுடன் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு காட்சி தருகின்றார். கரங்களில் அபயம், வரதம், வேல், செண்டு காணப்படுகின்றன.

இங்கு சிவபெருமான் லிங்க வடிவில் எழுந்தருளியுள்ளார். வித்தனூத்து என்னும் தீர்த்தச்சுனை உள்ளது. தலமரம்: மகிழமரம்.

இத்தல முருகப் பெருமானுக்கு இராஜ அலங்காரம், பண்டார வடிவ அலங்காரம் செய்வர். இது மிகவும் சிறப்பாகும். தமிழ்ப் புத்தாண்டு, கார்த்திகை திருநாள், மார்கழித் திருநாள் சிறப்பாகும். திருப்புகழில் ஒரு பாடல் இத்தலத்திற்குரியது.



## 155. பூவாளூர்

திருச்சி மாவட்டம் லால்குடிக்கு வடக்கே 3 கி.மீ. தூரத்தில் உள்ளது.

ரதி தேவி இத்தலச் சிவபெருமானை வழிபட்டு மன்மதனை மீண்டும் (காமதகனத்திற்குப் பின்) பெற்ற தலம்.

இத்தலச் சிவபெருமான் திருமூலநாதர். இறைவி: குங்குமாம்பிகை. தீர்த்தம்: சுயபங்குனிக் கால்வாய், தலமரம்: வில்வம்.

இங்கு ஆறுமுகப் பெருமான் பன்னிரு திருக்கரங்கள் கொண்டு மயில் மீது அமர்ந்த கோலத்தில் கிழக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார். தேவியர் இருவரும் அருகில் எழுந்தருளியுள்ளனர்.

பாலதண்டாயுதபாணியாகத் தனிச் சந்நிதியில் காட்சி தருகின்றார்.

மாதக் கார்த்திகை, வைகாசி விசாகம், கந்த சஷ்டி சிறப்பாகும். திருப்புகழில் ஒரு பாடல் உள்ளது.

## 156. பெரியகுளம் - குளந்தை

மதுரையிலிருந்து தேனி செல்லும் வழியில் 96 கி.மீ. தூரத்தில் உள்ளது இத்தலச் சிவபெருமான் ஸ்ரீராஜேந்திர சோழீஸ்வரர். இறைவி: அறம் வளர்த்த நாயகி. தீர்த்தம்: வராகநதி. தலமரம்: நெய்க்கொட்டாமரம்.

தாய்ப் பன்றி இறக்கவே அதன் குட்டிகள் வருந்துவதைக் கண்ட முருகப் பெருமான் பன்றி உருவெடுத்து வந்து பால் கொடுத்துக் குட்டிகளைக் காத்ததாகப் புராணம். மலையடிவாரத்தில் இருபுறமும் பன்றி முகமும் மனித உடலும் கொண்ட உருவமாகச் செதுக்கப்பட்டுள்ளன. இதன் காரணமாகவே இங்குள்ள நதி வராக நதி எனப் பெயர் பெற்றது.

இங்கு பாலசுப்பிரமணியர் ஆறுமுகங்களும் பன்னிரு திருக்கரங்களும் கொண்டு மயில் மீது அமர்ந்து காட்சி தருகின்றார். மயிலின் திருமுகம் வடபுறம் நோக்கியுள்ளது. வள்ளி தெய்வயானை அருகே விளங்கியுள்ளனர். உற்சவரும் மூலவர் போன்றே காட்சி தருகின்றார்.

மலை மேல் அமைந்த சந்நிதியில் முருகப் பெருமான் வள்ளி தெய்வயானையுடன் நின்ற திருக்கோலத்தில் காட்சி தருகின்றார். அவருக்கு இருபுறமும் நான்கு முனிவர்கள் அமர்ந்துள்ளனர்.

திருப்புகழில் ஒரு பாடல் உள்ளது.



## 157. பெருங்குடி

திருச்சியிலிருந்து வயலூர் செல்லும் வழியில் சோமரசம் பேட்டையில் இருந்து 1.5 கி.மீ. தூரத்தில் உள்ளது.

இங்குள்ள அகஸ்தீஸ்வரமுடையார் கோவிலில் அகஸ்தீஸ்வரப் பெரு மாள் லிங்க வடிவில் சுமார் 2 அடி உயரத்துடன் காட்சி தருகிறார். இறைவி: சிவகாமசுந்தரி. நின்ற திருக்கோலத்தில் நான்கு கரங்கள் கொண்டு 2 அடி உயரத்தில் காட்சி தருகிறார்.

இங்கு பாலசுப்பிரமணியர் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு தெய்வயானையுடன் நின்ற திருக்கோலத்தில் காட்சி தருகின்றார்.

திருப்புகழில் ஒரு பாடல் உள்ளது.

## 158. பெரும்புலியூர்

திருவையாறுக்கு வடமேற்கே 4 கி.மீ. தூரத்தில் உள்ளது. புலிக்கால் முனிவர் வழிபட்டதனால் 'புலியூர்' எனப் பெயர் பெற்றது.

இத்தலச் சிவபிரான் வியாக்ரபுரீசுவர், இறைவி: சௌந்தர நாயகி (அருகில் சுந்தரராஜப் பெருமாள் கோயில் உள்ளது)

இங்கு முருகப் பெருமான் வள்ளி தெய்வயானையுடன் தம்பதி சமேதர ராக காட்சி தருகின்றார்.

கார்த்திகை, சஷ்டி சிறப்பு நாட்களாகும். திருப்புகழில் ஒரு பாடல் உள்ளது.

## 159. பெறும்பேறு கண்டிகை - பேறைநகர்

செங்கல்பட்டு விழுப்புரம் பாதையில் தொழுப்பேடு கிராமத்திலிருந்து 1.5 கி.மீ. தூரத்தில் உள்ளது.

சிறிய குன்றின் மீது குமரப் பெருமான் திருக்கோவிலும் கீழே தான்தோன் றீசுவரர் கோயிலும் உள்ளன. இப்பெருமான் தான்தோன்றீஸ்வரர் அகத்திய ருக்குத் திருமணக் கோலம் காட்டியவர்.

225 படிகளைக் கொண்ட மலை மீது குன்றாடும் குமரன் எழிலுறக் காட்சித் தருகின்றார். மலைத் தொடக்கத்தில் பாறையடி விநாயகரும் வழியில் நவக்கிரகச் சந்நிதியும் உள்ளன.

கருவறையில் முருகப் பெருமான் ஆறு திருமுகங்களுடன் தேவியருடன் தெற்கு நோக்கி மயில் மீது எழுந்தருளியுள்ளார்.

மயிலின் மீது முருகப் பெருமான் தேவியருடன் எழுந்தருளியுள்ள தலங்கள் அபூர்வம். எண்கண், எட்டிகுடி போல மயிலின் கால்கள் தனித்தில்லை.

சித்திரைக் கார்த்திகையில் திருப்படி விழாவும், வைகாசி விசாகமும் சிறப்பு விழாக்களாகும். திருப்புகழில் ஒரு பாடல் இத்தலத்திற்குரியது.

## 160. பேரூர்

கோவையிலிருந்து 6 கி.மீ. தொலைவில் உள்ளது. இத்தலத்திற்கு ஆதிபுரி, ஞானபுரி, மேலைச் சிதம்பரம், வன்மீகபுரி, தேனுபுரி எனப் பல பெயர்கள் உண்டு.

இத்தலச் சிவபிரான்: பட்டிப்பெருமான், சுயம்பு மூர்த்தி. இறைவி: பச்சை நாயகி. தலமரம்: பன்னீர் மரம். தீர்த்தம்: நொய்யல் நதி, காலவ தீர்த்தம், பிரம தீர்த்தம், சிருங்க தீர்த்தம்.

கொடிமரத்தை அடுத்த வலப்புறம் முருகப் பெருமானும் இடப்பக்கம் கணபதியும் எழுந்தருளியுள்ளனர்.

வடக்குப் பிரகாரத்தில் மேற்கு ஓரத்தில் சுப்பிரமணியர் தன் இரு தேவியருடன் காட்சி தருகின்றார். வெளிப்பிரகாரத்தில் மேற்கு நோக்கி தண்டபாணி எழுந்தருளியுள்ளார். மேற்கு நோக்கிய திருவுரு சிறப்புடையது. ஒரு திருமுகமும் இரு திருக்கரங்களும் கொண்டு காட்சி தருகிறார். அழகான திருவுரு.

கனகசபைத் தூண்களில் வலஞ்சுழி விநாயகருக்கு எதிரே ஆறுமுகன் பன்னிரு திருக்கரங்களுடன் மயிலேறி மடக்கிய இடது காலுடன் அமர்ந்து அருள்பாலிக்கின்றார். மேற்கு நோக்கிய திருவுரு.

இறைவன்: சந்நிதி. இறைவி: சந்நிதி. இரண்டுக்கும் இடையே சோமாஸ்கந்தமூர்த்தி எழுந்தருளிய கல்யாண மண்டபம் உள்ளது. இங்குள்ள ஐந்து உற்சவ மூர்த்தங்களும் கவினழகு படைத்தன.

கண்கவர் கலைச்சிறப்புடன் விளங்கும் மண்டபத்தில் மூஷிகத்தின் மீது விநாயகப் பெருமான் வலக்காலைத் தூக்கி நடனமாடும் நர்த்தன விநாயகராகக் காட்சி தருகின்றார். அவருக்கு எதிரே ஆறுமுகப் பெருமான் பன்னிரு திருக்கரங்களுடன் மயில் மீது மடக்கிய இடக்காலுடன் அமர்ந்து காட்சி தருகின்றார்.

பிறவாப்புளி, இறவாப்பனை என இரு மரங்கள் உள்ளன. கோயிலின் முன்புறமுள்ள புளியமரத்தின் விதை முளைப்பதில்லை. பிரம்ம தீர்த்தக் கரையிலுள்ள பனை இறப்பதில்லை.

திருப்புகழில் இரு பாடல்கள் உள்ளன.

## 161. பொன்னூர்

மாயூரம் வட்டத்தில் நீடூர் இரயில் நிலையத்திற்கு மேற்கே 5 கி.மீ. தொலைவில் உள்ளது.

தமனியப்பதி, அக்னியூர் என்பர். இத்தலச் சிவபிரான் ஆபத்சகாயேசுவரர், இறைவி: பெரியநாயகி. தீர்த்தம்: வருண, அக்கினி, சிவகங்கைத் தீர்த்தம், தலமரம்: எலுமிச்சை. அக்னி, வருணன் பூசித்த தலம்.

இங்கு முருகப் பெருமான் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு மயில் வாகனனாக இரு தேவியருடன் எழுந்தருளியுள்ளார்.

கார்த்திகை, சஷ்டி சிறப்பு நாட்கள். திருப்புகழில் ஒரு பாடல் உள்ளது.

## 162. மகேந்திரபுரி - மகேந்திரப்பள்ளி

சீர்காழி - சிதம்பரம் பேருந்து வழியில் கொள்ளிடத்திற்குக் கிழக்கே 11 கி.மீ. தொலைவில் உள்ளது.

இங்குள்ள சிவபெருமான். திருமேனியழர், இறைவி: வடிவாம்பிகை, தீர்த்தம்: மந்திரபுஷ்கரணி, தலமரம்: தாழை. இப்பெருமான் சூரியன், சந்திரன், இந்திரன், பிரம்மாவால் வழிபடப்பட்டவர்.

இங்கு முருகப் பெருமான் சிங்கார வேலனாக ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு நின்ற திருக்கோலத்தில் இரு தேவியருடன் கிழக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார்.

திருப்புகழில் ஒரு பாடல் உள்ளது.

## 163. மதுரமாணிக்கம் - திரியம்பகபுரம்

கும்பகோணம் - திருவாரூர் பேருந்து வழியில் பெரும்பண்ணையூருக்கு அருகில் 1.5 கி.மீ. தூரத்தில் உள்ளது. திரியம்பகபுரம் என்னும் பெயர் பெற்றது. இங்கு முருகப் பெருமான் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு எழுந்தருளியுள்ளார்.

திருப்புகழில் ஒரு பாடல் உள்ளது.



## 164. மதுராந்தகம்

மதுராந்தகம் பேருந்து நிலையத்திற்கு அருகில் வயல் சூழ்ந்த பகுதியில் ஒரு சிறிய கோயிலில் ஆறுமுகப் பெருமான் கோயில் கொண்டுள்ளார்.



ஆறுமுகப் பெருமான் மயில் மீது அமர்ந்த கோலத்தில் காட்சி தருகின்றார். பூமியிலிருந்த ஆலயமும், திருவுருவங்களும் எடுக்கப் பெற்று அமைக்கப்பட்டுள்ளன.

குகனின் ஆலயம் 'முருகக் கோட்டம்' என அழைக்கப்படுகின்றது. திருப்புகழில் மூன்று பாடல்கள் இத்தலத்திற்கு உரியன.



## 165. மதுராந்தகம் - வடசிற்றம்பலம்

புலிப்பரக்கோயில் என்னும் இக்கோயில் பட்டாளம் சர்க்கரை . திலிருந்து 1.5 கி.மீ. தூரத்தில் உள்ளது.



இங்கு சிவபெருமான்: வியாக்கிரபுரீசுவர், இறைவி பாலகுஜா. இங்கு முருகப் பெருமான் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரா கொண்டு மயில் அருகே நிற்கக் காட்சி தருகின்றார்.

தனியே மண்டபச் சந்நிதியில் முருகப் பெருமான் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு பின்புறம் மயில் நிற்கக் காட்சி தருகின்றார். இருபுறமும் விநாயகர் காட்சி தருகின்றார். இங்கு மயிலுக்குப் பதில் யானை வாகனம் உள்ளது.

## 166. மதுரை

இத்தலம் ஆலவாய், கடம்பவனம், நான்மாடக்கூடல், கன்னிபுரீசம் எனப் பல பெயர்கள் பெற்றது.



இங்கு சோமசுந்தரப் பெருமான் மீனாட்சியம்மனுடன் எழுந்தருளியுள்ளார். இங்கு இருவருக்கும் இடையே முருகப் பெருமான் எழுந்தருளியுள்ளார். இவர் ஆறு திருமுகங்களும் பன்னிரு திருக்கரங்களும் கொண்டு, மயில் மீது அமர்ந்து கிழக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார். மயிலின் முகம் வடக்கு நோக்கியுள்ளது. இருபுறமும் வள்ளி, தெய்வயானை நின்ற திருக்கோலம். வடபுறம் அருணகிரிநாதர் கூப்பிய கரங்களுடன் நின்ற கோலத்தில் காட்சி தருகின்றார்.

இங்கு பாலமுருகன் சந்நிதிகள் உள்ளன. துவஜ ஸ்தம்பத்திற்கு எதிரே தண்டபாணியும், கழுகுமலைக் குமரரும், பாலமுருகனும் சுவாமி, அம்மன் கோபுரவாசல்களில் கந்தவேலும் காட்சி தருகின்றனர்.

தண்டபாணி சுவாமிக்கும், கழுகுமலைக் குமரனுக்கும் செய்யும் விபூதி அலங்காரமும் ராஜ அலங்காரமும் வெகுசிறப்பு.

ஊஞ்சல் மண்டபத்தின் விட்டங்களில் அறுபடை வீடுகளும் சித்திரமாக வரையப்பட்டுள்ளன. ஆயிரம் கால் மண்டப மேல் விதானத்தில் தமிழ் வருடங்கள் 60ஐயும் குறிக்கும் சக்கரம் காணப்படுகின்றது.

திரு ஆலவாய், திருநள்ளாறு, திருமுடங்கை, திருநெடுவூர் என்னும் நான்கு மாடங்களும் கூடியதனால் 'நான்மாடக்கூடல்' எனப் பெயர் பெற்றது. முன்னர் கடம்பவனமாய் இருந்த இடத்தை நகரமாக்கி அதைத் தன் சடைக் கங்கையினால் சிவபிரான் சுத்தம் செய்த போது அந்நீர்த் திவலைகள் மதுரமாய் இருந்ததனால் இந்நகர் 'மதுரை' எனப்பட்டது.

சிவபூஜையின் மேன்மையினை விளக்க சிவபிரான் இங்கு தம்மைத் தாமே பூசித்ததாக ஐதீகம். 64 திருவிளையாடல்கள் நடைபெற்ற தலம். அன்னை மீனாட்சி சிறந்த வரப்பிரசாதி. சக்தி பீடத்தலங்களுள் ஒன்று. இங்குள்ள முக்குறுணி விநாயகர் சுமார் 8 அடி உயரம் கொண்டவர். சிறந்த வரப்பிரசாதி.

திருப்புகழில் 12 பாடல்கள் உள்ளன.

## 167. மயிலம்

திண்டிவனத்திலிருந்து 10 கி.மீ. தூரத்தில் உள்ளது. சிறுமலை மீது அமைந்த கோயில். மயில் போன்ற தோற்றம் கொண்ட மலையாதலால் 'மயிலம்' ஆயிற்று. குன்று தோறாடலில் இத்தலமும் சேர்ந்தது.

சூரசம்ஹாரம் முடிந்ததும் சூரபன்மன் தம்மையும் வாகனமாக ஏற்குமாறு முருகப் பெருமானை வேண்டினான். முருகப்பெருமான் வராகநதியின் வடகரையில் தவம் இருக்கக் கூறினார். சூரபன்மன் மயில் வடிவில் தவம் இருந்த தலம் இது. பின் முருகப் பெருமான் மயிலை வாகனமாக ஏற்றார்.

இங்கு ஆறுமுகப் பெருமான் நான்கு திருக்கரங்களுடன் தேவியர் இருவருடனும் திருமணக்கோலத்தில் கிழக்கு நோக்கி நின்ற கோலத்தில் காட்சி தருகின்றார். மயிலின் முகம் வடதிசை நோக்கியுள்ளது.

உற்சவரும் மூலவரைப் போன்றே காட்சி தருகிறார். திருவிழாக் காலங் களில் முருகப் பெருமான் தம்பதி சமேதரராய் தங்க மயில் மீது எழுந்தரு ளிக் காட்சி தருகின்றார்.

ஸ்ரீலஸ்ரீ சிவஞான பாலைய சுவாமிகள் கள்ளிப்பாலை அருந்தி 100 ஆண்டுகள் யோக நிஷ்டையில் இருந்து பாலயோகி இங்குள்ள லிங்கத்தில்

ஐக்கியமானார். இச்சிவபிரான் விசுவநாதர். தீர்த்தம்: வராகநதி. தலமரம்: புன்னை.

இங்கு தண்டபாணி சுவாமிகள் சமாதி உள்ளது.

தைப்பூசத்தன்று 100 சங்கு அபிஷேகமும் ஆகஸ்ட் 15 அன்று திருவிழா வும் சிறப்பாகும்.

இங்கு அங்கப்பிரதட்சணம் செய்வதும், காவடி எடுத்தல், முடி காணிக்கை செலுத்திப் பிரார்த்தனை செய்வதும் சிறப்பாகும். முருகப் பெருமான் மீது பிள்ளைத் தமிழும், மயில் அலங்காரமும் உள்ளது. திருப்புகழில் ஒரு பாடல் உள்ளது. மாத கிருத்திகையில் முருகப் பெருமான் தேவியருடன் தங்கமயில் மீது உலா வருவார்.

## 168. மயிலாப்பூர்

சென்னையில் அமைந்த தலம். தேவி மயில் வடிவில் இறைவனை நோக்கித் தவம் இருந்த தலங்களில் ஒன்று.



திருஞானசம்பந்தர் சிவநேசச் செட்டியார் என்னும் பக்தரின் மகள்

பூம்பாவை பாம்பு கடித்து இறந்துவிட, அவளது அஸ்தி அடங்கிய கலசத்திலிருந்து அப்பெண்ணை உயிருடன் பூம்பாவைப் பதிகம்பாடி உயிர்ப்பித்த தலம்.

இத்தலச் சிவபெருமான்: கபாலீசுவரர். இறைவி: கற்பகாம்பிகை. இறைவன் மேற்கு நோக்கியும் இறைவி தெற்கு நோக்கியும் காட்சி தருகின்றனர். தலமரம்: புன்னை.

தெற்குப் பிரகாரத்தில் முருகப் பெருமான் ஆறுதிருமுகங்களும் பன்னிரு திருக்கரங்களும் கொண்டு மயில் மீது எழுந்தருளியுள்ளார். தேவியர் இருவரும் யானை மீது அமர்ந்து காட்சி தருகின்றனர். இது காணவேண்டிய ஒரு அரிய காட்சியாகும்.

உற்சவர் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு மயில் பின்புறம் நிற்கத் தேவியர் இருவருடன் எழுந்தருளியுள்ளார். மற்றொரு உற்சவர் ஆறுமுகப் பெருமானாகப் பன்னிரு திருக்கரங்களுடன் காட்சி தருகின்றார். தேவியர் இருவர் அருகில் உள்ளனர்.

பழனியாண்டவர் தனி சந்நிதியில் வடக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார். 10 திருப்புகழ்ப் பாடல்கள் பெற்ற தலம்.

## 169. மருத்துவக்குடி

கும்பகோணத்திற்குக் கிழக்கே 13 கி.மீ. தூரத்தில் உள்ளது.

இத்தலச் சிவபிரான் அயினா ஈஸ்வரர், இறைவி: அபிராமி அம்மன். இங்கு முருகப் பெருமான் ஒரு திருமுகமும், இரு திருக்கரங்களும் கொண்டு நின்ற திருக்கோலத்தில் இரு தேவியருடன் கிழக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார்.

திருப்புகழில் ஒரு பாடல் உள்ளது.

## 170. மாடம்பாக்கம் - மாடையம்பதி

தாம்பரம் - செங்கல்பட்டு பேருந்துப் பாதையில் வண்டலூருக்குக் கிழக்கே 11 கி.மீ. தூரத்தில் உள்ளது. தாம்பரத்திலிருந்து பேருந்து உள்ளது. இத்தலம் திருமாட நகர், கபில க்ஷேத்திரம் தமனியம்பதி என வழங்கப்படுகிறது.

இத்தலச் சிவபிரான் தேனுபுரீசர். இறைவி: தேனுகாம்பிகை. சோழர் காலச் சிவாலயம்.

இங்குப் பிரகாரத்தில் முருகப் பெருமான் சிவசுப்பிரமணியன் என்னும் திருநாமம் கொண்டு விளங்குகின்றார். ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு மயில் அருகில் நின்ற கோலத்தில் காட்சி தருகின்றார். இருபுறமும் தேவியர் எழுந்தருளியுள்ளனர். உற்சவர் மூலவரைப் போன்று காட்சி தருகின்றார்.

நவராத்திரி, திருவாதிரை, பங்குனி உத்திரம் சிறப்பாகும். திருப்புகழில் இரு பாடல்கள் இத்தலத்திற்குரியன.

## 171. மாயூரம்

கும்பகோணத்திற்குக் கிழக்கே 32 கி.மீ. தூரத்தில் உள்ளது. அம்பிகை மயில் உருக்கொண்டு தவம் இருந்த தலங்களில் ஒன்று. ஐப்பசி மாதம் இடப தீர்த்தத்துறையில் துலாஸ்நானம் செய்வது சிறப்பு.

இத்தலச் சிவபெருமான்: மாயூரநாதேஸ்வரர். இறைவி: அபயாம்பிகை. தீர்த்தம்: காவிரி, தல மரம்: மாமரம்.

இங்குள்ள விநாயகர் முக்குறுணிப் பிள்ளையார்.

மாயூரநாதர் சந்நிதியின் வடபுறம் குமரக்கட்டளை சுப்பிரமணிய சுவாமி திருக்கோயில் உள்ளது. இங்கு முருகப் பெருமான் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு தேவியர் இருவருடன் நின்ற திருக்கோலத்தில் கிழக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார்.

உற்சவர் திருக்கால்களில் சதங்கையும், காலணிகளும் விளங்க வேல், வில் கொண்டு சம்ஹார மூர்த்தியாய் கோலம் கொண்டுள்ளார்.

சித்திரா பௌர்ணமி, கந்த சஷ்டி, திருக்கார்த்திகை, தைப்பூசம் சிறப்பு விழாக்களாகும். திருப்புகழில் ஒரு பாடல் உள்ளது.

## 172. முள்வாய்

அரக்கோணம் அருகேயுள்ள கோணலம் என்னும் ஊரிலிருந்து 5 கி.மீ. தூரத்தில் உள்ளது.

இங்கு இருந்த முருகப் பெருமான் திருக்கோயில் மண்ணில் புதையுண்டு இருக்கக் கூடும் என எண்ணப்படுகின்றது. குளம் வெட்டிய போது கோவிலின் கருங்கல் படிகள் கிடைத்தன. ஆனால் தெய்வத் திருவுருவங்களைத் தோண்டி எடுக்க முடியவில்லை.

கர்நாடகாவிலுள்ள மோகூரிலிருந்து 6 கி.மீ. உள்ள தலம் என்றும் கூறுவர். இங்கும் திருக்கோவில் இல்லை. அழிந்து விட்டதாகத் தெரிய வருகின்றது.

ஒரு திருப்புகழ் முள்வாய் முருகப் பெருமானைப் போற்றப் பெறுகின்றது.



## 173. ராசிபுரம் - ராஜபுரம்

சேலத்திலிருந்து 32 கி.மீ. தொலைவில் உள்ளது. மலையடிவ கோயில். இங்கு சிவபெருமான்: கயிலாசநாதர். அம்பிகை: தர்மசம் தனி. தலமரம்: வில்வம்.

இங்கு ஆறுமுகப் பெருமான் பன்னிரு திருக்கரங்களுடன் மயில் அமர்ந்து தேவியருடன் தென் திசை நோக்கி விளங்குகின்றார். உற் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு காட்சி தருகின்ற

சித்ரா பௌர்ணமி, திருக்கார்த்திகை, தைப்பூசம், பங்குனி உத்தி கந்தசஷ்டி சிறப்பு விழாக்களாகும்.

இது ராஜபுரம் எனத் திருப்புகழில் குறிப்பிடப்படுகின்றது. ஒரு தி புகழ் பாடல் உள்ளது.

## 174. லால்குடி - தவத்துறை

திருச்சி - அரியலூர் பேருந்து வழியில் 19 கி.மீ. தூரத்தில் உள்ளது

முகம்மதிய மன்னர்கள் படையெடுப்பின் போது இத்தலக்கோட சிவப்பு நிறத்தில் (லால் -சிவப்பு) இருப்பதனால் இதை லால்குடி என்ற அத்ரி, பிருகு, புலத்தியர், வசிட்டர், கௌதமர், ஆங்கீரசர், மரீசி முதல முனிவர்களும் வழிபட்ட துறை - தவத்துறை என்றாயிற்று.

இத்தலச் சிவபிரான்: சப்தரிஷீசுவர். இறைவி: ஸ்ரீமதி. தலம அரசமரம்.

மன்னன் ஒருவன் காட்டில் ஒரு தடாகத்தில் நீராடியதும் நோய் நீங் பெற்றான். பின் அத்தடாகத்தைச் சுற்றி காட்டினை அழித்த பே ஓரிடத்தில் சிவலிங்கம் ஒன்றைக் கண்டு அங்குக் கோயில் எழுப்பினா அத்தீர்த்தமே சிவகங்கை தீர்த்தம். இங்கு சக்ரதீர்த்தம் என்னும் தல உள்ளது. இது திருமாலின் சக்கரத்தால் உருவானது. இத்தல சிவபிரான வணங்கி லெட்சுமி திருமாலை அடைந்ததாகப் புராணம். இங்கு திரும மேற்கு நோக்கியும் லட்சுமி கிழக்கு நோக்கியும் எழுந்தருளியுள்ளனர்.

இங்கு உட்பிரகாரத்தில் முருகப் பெருமான் ஆறு திருமுகங்களு பன்னிரு கரங்களும் கொண்டு தேவியர் இருவருடன் மயில் மீது அமர் தென்திசை நோக்கி எழுந்தருளியுள்ளார்.

அம்பிகை சந்நிதியில் உள்ள ஆறுமுகரும் தேவியருடன் கிழக்கு நோக் நின்ற கோலத்தில் எழுந்தருளியுள்ளனர்.

கருவறையில் நான்கு தூண்கள் காணப்படுகின்றது. அவை அற பொருள், இன்பம், வீடு என நான்கைக் குறிப்பதாகும். இத்தல வீண தட்சிணாமூர்த்தித் திருவுருவம் சிறப்பாகும். திருப்புகழில் இரு பாடல்க உள்ளன.

கந்தர் சஷ்டி சிறப்பு.

## 175. வடகுரங்காடுதுறை - ஆடுதுறை

கும்பகோணத்திலிருந்து திருவையாறு செல்லும் வழியில் 19 கி.மீ. தூரத்தில் உள்ளது.

வாலி வழிபட்ட தலமாதலால் இத்தலம் குரங்காடுதுறை எனப் பெயர் பெற்றது. (சுக்ரீவன் வழிபட்ட தலம் தென்குரங்காடுதுறை. இது திருவிடை மருதூருக்கு அருகில் உள்ளது.

இங்கு முருகப் பெருமான் ஒரு திருமுகமும், நான்கு திருக்கரங்களும் கொண்டு நின்ற திருக்கோலத்தில் வள்ளி தேவசேனாதேவி சமேதரராக மயிலுடன் எழுந்தருளியுள்ளார்.

சஷ்டி, கார்த்திகை சிறப்பு நாட்களாகும். திருப்புகழில் மூன்று பாடல்கள் இத்தலத்திற்குரியன. கர்ப்பிணிப் பெண் ஒருத்தியின் தாகம் தீர்க்க இத்தலச் சிவபெருமான் தென்னங்குலையை வளைத்துக் கொடுத்த காரணத்தால் இவர் 'குலைவணங்கீசர்' என்றும் அழகுசடைமுடிநாதர் என்றும் விளங்கு கின்றார். இறைவி: அழகு சடைமுடியம்மை. தலமரம்: தென்னை. தீர்த்தம். காவிரி.

## 176. வடுகூர்

பாண்டிச்சேரியிலிருந்து 22 கி.மீ. விழுப்புரத்திலிருந்து 22 கி.மீ. தொலைவில் உள்ளது. இத்தலம் இப்போது திருஆண்டார் கோயில் எனப்படுகிறது.

இத்தலச் சிவபிரான்: திருவடுகூர்நாதர். இறைவி: வடுவகிர்க் கண்ணியம்மை. வடுகனாகிய பைரவர் பூசித்ததனால் வடுகூர் எனவும், இறைவர் வடுகூர்நாதர் எனவும் பெயர் பெற்றார். தீர்த்தம்: வாமதேவதீர்த்தம். தலமரம்: வன்னி.

இங்கு முருகப் பெருமான் ஆறுதிருமுகங்களும், பன்னிரு திருக்கரங்களும் கொண்டு மயில் மீது அமர்ந்த திருக்கோலத்தில் காட்சி தருகின்றார். முன்னர் தெய்வயானை திருவுரு மட்டும் இருந்தது. இப்போது வள்ளிநாயகித் திருவுருவம் அமைக்கப்பட்டுள்ளது.

திருப்புகழில் ஒரு பாடல் இத்தலத்திற்குரியது.

## 177. வட்டமலை - கொங்கண கிரி

காங்கேயத்திலிருந்து 7 கி.மீ. தொலைவில் உள்ளது. 150 அடி உயரம் குன்றின் மேல் அமைந்த குமரன் கோவில். இங்கு தண்டபாணிக் கோலத்தில் முருகப் பெருமான் மேற்கு நோக்கி காட்சி தருகிறார் தேவியர் இருவருக்கும் ஒரே சந்நிதி தனியாக உள்ளது. இதே போல ஊதியமலை, சிவன்மலை, அழகுமலையிலும் ஒரே சந்நிதியில் உள்ளனர் இதனைக் கொங்கண கிரி, அலைவாய்மலை என்பர்.

திருப்பூர் நகருக்கு மேற்கே 13 கி.மீ. தொலைவில் உள்ள வேலாயுதம் பாளையத்தில் உள்ள மலைக்கோயில் 18 படிகளைக் கொண்டது. இங்கு பாலமுருகனாக இரு திருக்கரங்களுடன் முருகப் பெருமான் எழுந்தருளி யுள்ளார். இதுவே திருப்புகழ் பாடல் பெற்ற கொங்கணகிரி எனத் தணிகைமணி செங்கல்வராய பிள்ளை குறிப்பிட்டுள்ளார்.

திருப்பூரின் மேற்கே 5 கி.மீ. தொலைவில் உள்ள மலை மீது புதிய முருகப் பெருமான் திருக்கோயில் கட்டப்பட்டு 'கொங்கணகிரி' என அழைக்கப்படுகின்றது.

திருப்புகழில் ஒரு பாடல் இத்தலத்திற்குரியதாகும். குன்றுதோறாடல் தலங்களுள் ஒன்று.

## 178. வயலூர் - குமாரவயலூர்

திருச்சிக்கு மேற்கே 9 கி.மீ. தூரத்தில் உள்ளது.



பெரும்பாலும் குன்றுகளிலேயே வாசம் செய்யும் முருகப் பெருமான் இத்தலத்தில் வயல் சூழ வயலூரானாகக் காட்சி தருகின்றார்.

குமார வயலூர், ஆதிவயலூர், வன்னிவயலூர், அக்னீஸ்வரம் என்று இத்தலத்திற்குப் பெயர்களும் உண்டு.

அருணகிரிநாதரை திருவண்ணாமலையில் தடுத்தாட்கொண்ட முருகப் பெருமான், 'வயலூருக்கு வா' என அருள்வாக்கு அளித்தபடி முதன்முதலில் அருணகிரியாரும் வந்த தலம். அவருக்குத் திருவண்ணாமலையில் 'முத்தைத்தரு' என அடி எடுத்துக் கொடுத்த ஆறுமுகப் பெருமான் பின்பு அவரை இத்தலம் அழைத்து காட்சி கொடுத்து திருப்புகழ் பாடச் செய்தார். பாடும் வகைகளை அருணகிரியார் கேட்க முருகப் பெருமான் மயில், கடம்பமலர், வடிவேல், சேவல் கொடி, திருவடி, பன்னிரு புயங்கள், வயலூர் ஆகியவற்றை வைத்துப் பாடும்படிக் கூறினார்.

''கைத்தல நிறை கனி'' என்னும் பாடல் இத்தலப் பொய்யாக் கணபதி மீது பாடி பின் ''சிற்றடி முற்றிய பன்னிரு தோளும்'' எனப் பாடினார்.

அருணகிரியார், விநாயகர், மகாலெட்சுமி, நவக்கிரகங்கள் சந்நிதிகள் உள்ளன. கீழைப்பிள்ளையார், மேலைப் பிள்ளையார் சந்நிதிகள் உள்ளன.

சிவபிரானுக்குப் பின்னால் குமரவேல் ஒரு திருமுகமும், நான்கு திருக்கரங் களும் கொண்டு தேவியர் இருவரும் இருபுறமும் விளங்க மயிலின் முன் கிழக்கு நோக்கி நின்ற கோலத்தில் காட்சி தருகின்றார். மயிலின் முகம் இடப்பக்கம் உள்ளது. தேவேந்திரனே மயிலாக வந்ததாக ஐதீகம்.

உற்சவர் முத்துகுமாரசாமி நான்கு திருக்கரங்களுடன் மயில் மீது எழுந்தருளியுள்ளார். முருகப் பெருமான் தன் திருக்கை வேலினால் உருவாக்கிய தீர்த்தம் சக்தி தீர்த்தமாகும்.

இத்தலச் சிவபிரான் திருவக்கீசர். இறைவி: ஆதிநாயகி. தீர்த்தம்: அக்னி தீர்த்தம் (குமரப் பெருமான் வேலினால் உருவான தீர்த்தம்). தலமரம்: வன்னி.

18 திருப்புகழ்ப் பாடல்கள் பெற்ற தலம். திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகள் அரிய முயற்சியால் இத்திருக்கோயில் கம்பீரமாக வளர்ந்துள்ளது.

மாதக் கார்த்திகை, பங்குனி உத்திரம் சிறப்பு. காவடி, பாற்குடம் சிறப்பாகும்.



## 179. வலிவலம்

திருவாரூருக்குத் தென்மேற்கே 9.5 கி.மீ. தொலைவில் உள்ளது.

சூரியனும், காரண ரிஷியும், (வலியன்) கரிக்குருவியும் பூஜித்த தலம். வலியன் என்னும் கரும்குருவி வலம் வந்து பூசித்ததனால் 'திருவலிவலம்' எனப் பெயர் பெற்றது.



கோயிலைச் சுற்றி கிழக்குப் பக்கம் தவிர ஏனைய மூன்று பக்கங்களிலும் மாலையிட்டது போல் ஓடை ஒன்றுள்ளது. இத்தலச் சிவபிரான்: மனத் துணைநாதர், இறைவி: வாளையங்கண்ணி. தலமரம்: புன்னை மரம்.

இங்குச் சிவபிரான் சந்நிதிக்கு இடப்பக்கம் முருகப் பெருமான் ஒரு

திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு மயிலுடன் கூடி நின்ற திருக்கோலத்தில் கிழக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார். தேவியர் இருவர் உடன் விளங்குகின்றனர். குமரப் பெருமான் இடக்கரம் சூசிஹஸ்தமாக விளங்குவது தனிச்சிறப்பு.

உற்சவர் தேவியருடன் மயிலூர்தி கொண்டு விளங்குகிறார். வலம்புரி விநாயகர் சிறப்பாகும். கந்த சஷ்டி, சித்திரைப் பெருவிழா, தெப்ப விழாக்கள் சிறப்பு விழாக்களாகும். திருப்புகழில் ஒருபாடல் உள்ளது.

## 180. வல்லக்கோட்டை

ஸ்ரீபெரும்புதூரிலிருந்து, வாலாசாபாத் செல்லும் சாலையில் 9 கி.மீ. தொலைவில் உள்ளது.

சோழர் திருப்பணி செய்த கோயில். இத்தலம் கோடை நகர், கோடைப் பதி, கோடையம்பதி, கோடை என்று வழங்கப்படுகிறது.

இங்குள்ள முருகப் பெருமான் ஓங்கிய நெடிய திருவுருவுடன் (7 அடி உயரம்) வள்ளி தெய்வசேனாதேவி சமேதரராகப் பெருமிதத் தோற்றத்துடன் எழுந்தருளியுள்ளார். சரணாகதி காட்டும் கர அமைப்புடன் விளங்குகின்றார். இவர் கோடையாண்டவர், முத்துக்குமரன் எனப் போற்றப்படுகின்றார்.

மூலவர் போன்றே உற்சவர் காட்சி தருகின்றார். வேறு சந்நிதிகள் இல்லை. இங்குள்ள வச்சிர தீர்த்தம். வியாழபகவான் கூறியபடி இந்திரன் தன் வச்சிராயுதத்தை அழுத்தி ஏற்படுத்தியது. தலமரம்: பாதிரிமரம். பகீரதன் இம் மரத்தடியில் சுக்கிரவார விரதம் இருந்து முருகப்பெருமானை வழிபட்டார்.

திருப்புகழில் ஏழு பாடல்கள் இத்தலத்திற்குரியது.

ஒவ்வொரு மாதமும் பரணி நட்சத்திரத்தன்று பாலாபிஷேகமும், சிங்கார விபூதிக் காப்பும், கிருத்திகையன்று சந்தனக்காப்பும் அம்மனுக்குக் குங்குமக் காப்பும் செலுத்துகின்றனர்.

## 181. வழுவூர்

மாயூரம் - திருவாரூர் பேருந்துப் பாதையில் நெய்க்குப்பையில் இறங்கி மேற்கே 1 கி.மீ. செல்ல வேண்டும். இலந்தங்குடி புகைவண்டி நிலையத்திலிருந்து 1 கி.மீ. தொலைவில் உள்ளது.

அட்டவீரட்டத் தலங்களுள் ஒன்று. கயாசூரன் என்னும் யானை வடிவு உடைய அசுரனை உதைத்து அதன் தோலை உரித்துச் சிவபிரான் போர்த்திய தலம். சிவபெருமான் வீரட்டேசுவரர். இறைவி: இளங்கிளை நாயகி. தீர்த்தம்: பஞ்சப்பிரம்ம மகாபுண்ணிய தீர்த்தங்கள். தலமரம்: வன்னி.

இத்தலம் வழுவூர், வழுவை, சயுதபுரி, பரகயிலாயம், ஞானபூமி, வழுகூர், பப்பிலாரண்யம் எனப் பல பெயர்களைக் கொண்டது.

இங்கு முருகப் பெருமான் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு நின்ற திருக்கோலத்தில் கிழக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார். தேவியர் இருவரும் உடன் விளங்குகின்றனர்.



குழந்தை வடிவான கந்தப் பெருமானை வலப்பக்க இடுப்பில் கொண்டு விளங்கும் அம்பிகை திருவுருவம் மிக அழகானது. கஜசம்ஹார மூர்த்திக்குப் பின்னால் யந்திரப் பிரதிஷ்டை உள்ளது. திருப்புகழில் இரு பாடல்கள் உள்ளன.

கயாசூரனின் தோலை உறிக்க இறைவன் யானையின் உடலில் புகுந்தார். அதனால் இருள் எங்கும் சூழ்ந்தது. அதைக் கண்டு இறைவி அச்சம் கொண்டு குழந்தையான குமரனைத் தன் இடுப்பில் வைத்துக் கொண்டார். அப்போது சிவபெருமான் யானையின் உடலைக் கிழித்துக் கொண்டு வெளிப்படுகின்றார். அதைத் தாயும் குமரனும் காண்கின்றனர். குமரப் பெருமான் தன் தந்தை யானையின் உடலிலிருந்து வெளிப்படுவதை இறைவிக்குச் சுட்டிக்காட்டுகிறார். இதை விளக்கும் செப்பு வடிவம் உள்ளது. இது அரிய திருவுருவம் ஆகும்.

அமாவாசை தோறும் தீர்த்தவாரி நடக்கிறது.

## 182. வள்ளிமலை

அரக்கோணத்திலிருந்து 48 கி.மீ. தொலைவில் உள்ளது. காட்பாடி - அரக்கோண புகைவண்டிப் பாதையில் திருவலம் நிலையத்திலிருந்து வடக்கே 15 கி.மீ., வேலூரில் இருந்தும் செல்லலாம்.

மலை அடிவாரத்திலும் மலை மேலும் கோயில்கள் உள்ளன. அடிவாரக் கோயிலில் ஆறுமுகப் பெருமான் முன்னும் பின்னுமாக ஆறு திருக்கரங்களுடன் வள்ளி தெய்வயானையுடன் நின்ற திருக்கோலத்தில் கிழக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார். கோவிலின் எதிரே சரவணப் பொய்கை உள்ளது.

மலைக்கோயில் 471 படிகளைக் கொண்டது. ஒரே பாறையில் 445 படிகள் அமைந்துள்ளன.

மலைக்கோவிலில் வள்ளி மணாளன் ஒரு திருமுகமும் இரு திருக்கரங்களும் கொண்டு அபய, வரதத்துடன் நின்ற திருக்கோலத்தில் தேவியர் இருவருடன் தென்திசை நோக்கி எழுந்தருளியுள்ளார். மூன்று உற்சவர்கள் உளர் மூலவரைப் போன்ற அமைப்பு, ஆறுமுகத்துடன் மற்றொன்று, பாலசுப்பிரமணிய வடிவில் ஒன்று. மலையைக் குடைந்து அமைந்த கோவில்.

முருகப் பெருமான் சந்நிதிக்கு அருகே சதுரவடிவச் சன்னதி உள்ளது. அது குகை வாயில் எனவும் அங்கிருந்து திருத்தணி வரை குகை செல்வதாகவும் முருகப் பெருமான் வள்ளி தேவியை அவ்வழியேதான் களவு செய்து எடுத்து சென்றதாகவும் கூறுவர்.

மண்டபத்தில் இடது கையில் கல்லும் வலக்கையில் கவணும் கொண்டு தினைப்புனம் காக்கும் வள்ளியம்மை வேடமங்கையாகக் காட்சி தருகின்றார்.

திருப்புகழ் வள்ளிமலை சுவாமிகள் ஆசிரமம் உள்ளது. சுவாமியின் திருவுரு உள்ளது. சமாதியும் உள்ளது.

அருகிலுள்ள குகையில் தான் முருகப் பெருமான் வள்ளியைக் காந்தர்வ மணம் புரிந்ததாக ஐதீகம். மலையில் காணும் காலடிச் சுவடுகள் முருகப் பெருமானும் வள்ளி நாயகியும் நடந்த பாதச் சுவடுகள் என்பர். ஒன்று பெரியதாகவும் ஒன்று சிறியதாகவும் உள்ளது.

மலையில் உள்ள ஒரு சுனையில்தான் முருகப் பெருமானுக்கு வள்ளி தேவி தேனும் திணை மாவும் தந்ததாக வரலாறு. இதனைச் சூரிய ஒளிபடாத சுனை என்பர்.

தம்பிக்காக யானை வடிவில் விநாயகப் பெருமான் வந்த இடம் உள்ளது. அருகில் உள்ள சுனையில் வள்ளி மஞ்சள் அரைத்துக் குளித்ததாக ஐதீகம். இப்போதும் அச்சுனையில் துணிகளை நனைத்தால் துணி மஞ்சள் நிறமாகின்றது.

ஆடிக்கிருத்திகை, கந்தசஷ்டி, மாசி பிரமோற்சவம் சிறப்பான விழாக்கள். இங்கு காவடி, முடிகாணிக்கை செலுத்துவது வழக்கம்.

மலைக்கோயிலிலும் அடிவாரக் கோயிலிலும் வள்ளி சந்நிதி தனியே உள்ளது.

திருப்புகழில் பதினோரு பாடல்கள் உள்ளன.

தமிழ்ப்புத்தாண்டு அன்று திருப்புகழ்த் திருப்படித் திருவிழா நடைபெறுகின்றது.

## 183. வள்ளியூர்

திருநெல்வேலியிலிருந்து கன்னியாகுமரி செல்லும் நெடுஞ்சாலையில் 20 கி.மீ. தொலைவில் உள்ளது. நாங்குநேரிக்குத் தெற்கே 16 கி.மீ.

சிறு குன்றின் கீழ் மலையைக் குடைந்து அமைந்த கோயில். கழுகுமலை போல கர்ப்பகிரகம் வரை கட்டப்பட்ட கோயில். முருகப் பெருமான் திருவுரு உள்ள கர்ப்பக்கிரகம் குடவரை மேல்தளம் குன்றின் அடித்தளமாக அமைந்துள்ளது. முருகப் பெருமான் பிறந்து வளர்ந்த சரவணப் பொய்கை என்ற பெயரில் சரவணப் பொய்கை கோயிலின் தென்பக்கம் உள்ளது. வள்ளி திருமணம் நடந்த தலம் என்பர்.

திருக்குறுங்குடி நம்பிராஜன் (திருமால்) மகளே வள்ளி. தினைப்புனங் காத்த மலைச்சாரல் திருக்குறுங்குடி முதல் குமரி மாவட்டம் குமார கோயில் வரை என்பர்.

இத்தலத்தில் வள்ளிக்கும் முருகனுக்கும் நம்பிராஜன் மணம் முடித்ததாக ஐதீகம். சந்நிதியை வலம் வர முடியாது. மலை வலம் தான் வர வேண்டும்.

இங்கு மேற்கு நோக்கிச் சிவபெருமானும் உமாதேவியும் - ஜெயந்தீசுவரர் - சௌந்தர்ய நாயகியாக எழுந்தருளியுள்ளார்.

முருகப் பெருமான் தந்தைக்கு உபதேசம் செய்த கோலத்தை இங்கு காணலாம். ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு உத்திராக்கம் அணிந்து கிழக்கு நோக்கி நின்ற திருக்கோலத்தில் நீண்ட திருமேனியுடன் வள்ளி தெய்வயானையுடன் எழுந்தருளியுள்ளனர்.

உற்சவர் மூலவர் போன்றே காட்சி தருகிறார். வள்ளிக்குத் தனிச் சந்நிதி உள்ளது. படிப்பாயசம் வைத்து சரவணப் பொய்கை படித்துறையில் குழந்தைகட்கு அளிப்பர். அகத்தியர் வழிபட்ட தலம்.

சித்திரைப் பெருவிழா, கந்தர்சஷ்டி, தமிழ் மாதக் கடைசி வெள்ளி பெரு விழாக்களாகும்.

திருப்புகழில் ஒரு பாடல் உள்ளது. குன்றுதோறாடலில் இத்தலமும் சேரும்.

## 184. வாரணாசி - காசி

உத்தரப்பிரதேசத்தில் அலகாபாத் அருகே கங்கைக் கரையில் அமைந்த தலம். காசி என்பர்.

காசி, ஆனந்த லயனம், மகாஸ்மசானம் என்றும் அழைக்கப்படும். இங்குள்ள கேதார கட்டம் சிறப்புடையது. இத்தலச் சிவபிரான் விசுவநாதர். இறைவி: கௌரி.

இத்தலத்தில் முருகப் பெருமான் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு தென்திசை நோக்கி எழுந்தருளியுள்ளார்.

திருப்புகழில் நான்கு பாடல்கள் பெற்ற தலம்.

## 185. விற்குடி

திருவாரூர் - மாயூரம் வழியில் புகைவண்டி நிலையம். புகைவண்டி நிலையத்திலிருந்து கோயில் 5 கி.மீ. தொலைவில் உள்ளது.

வீரட்டத்தலங்களில் இத்தலம் சலந்தராசுரனைச் சக்கரத்தால் அழித்த தலம். இத்தலச் சிவபெருமான் வீரட்டாணேசுவரர். இறைவி: பரிமளநாயகி. உற்சவர் கரங்களில் சக்கரம் உள்ளது. தீர்த்தம்; சக்கரதீர்தம், சங்கு தீர்த்தம். தல விருக்ஷம்: துளசி.

இங்கு முருகப் பெருமான் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு மயில் மீது அமர்ந்து இரு தேவியருடன் கிழக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார். உற்சவர் இரு தேவியருடன் நின்ற கோலத்தில் காட்சி தருகின்றார். மாதக்கிருத்திகை சிறப்பு திருப்புகழில் ஒரு பாடல் உள்ளது.

## 186. வாலிகண்டபுரம்

திருச்சி மாவட்டம் பெரம்பலூரிலிருந்து 13 கி.மீ. தொலைவில் உள்ளது.

இத்தலச் சிவபிரான்: பிரம்மபுரீசுவரர். இறைவி: பாலாம்பிகை. பிரம்மா பூசித்தநினால் இப்பெருமான் பிரம்மபுரீசுவரர் என்று பெயர் பெற்றார். வாலி பூசித்ததனால் இத்தலம் வாலிகண்டபுரம் என்றாயிற்று.

இங்குத் தண்டாயுதபாணி சந்நிதியும், அறுமுகப் பெருமான் சந்நிதியும் உள்ளன. ஆறுமுகப் பெருமான் மயில் மீது அமர்ந்து அழகு மிளிரக்காட்சி தருகின்றார். திருப்புகழில் ஒரு பாடல் உள்ளது.

## 187. விசூர்

உத்திரமேரூரிலிருந்து 12 கி.மீ. தொலைவில் மானாம்பதி அருகில் உள்ளது.

இங்கு எழுந்தருளியுள்ள சிவபிரான்: அகஸ்தீஸ்வரர். இறைவி: அகிலாண்டேஸ்வரி. தீர்த்தம்: அகஸ்தீஸ்வர தீர்த்தம். தலமரம்: மந்தாரமரம். அம்பிகை விசுவரூபம் எடுத்ததனால் இத்தலம் விசுவ மாநகர் எனப்படுகின்றது.

இங்கு முருகப் பெருமான் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு மயில் பின்புறம் நிற்க நின்ற கோலத்தில் காட்சி தருகின்றார். இருபுறமும் தேவியர் இருவரும் எழுந்தருளியுள்ளனர்.

சித்திரா பௌர்ணமி, மார்கழி திருவாதிரை, தைப்பூசம், மாசிமகம் சிறப்பு விழாக்களாகும்.

தைப்பூசத்தன்று செய்யாறில் 20 கோயில்களின் மூர்த்திகள் எழுந்தருளுவர். மாசிமகத்தன்று 10 மூர்த்திகள் எழுந்தருளுகின்றனர்.

திருப்புகழில் ஒரு பாடல் உள்ளது.

## 184. விராலிமலை

திருச்சியிலிருந்து மதுரை செல்லும் வழியில் 30 கி.மீ. தொலைவில் உள்ளது.



குராமரங்கள் வடிவில் முனிவர்கள் விராவி (நிரம்பி) இருந்து முருகப் பெருமானை வழிபடுவதனால் 'விராலிமலை' எனப் பெயர் பெற்றது. மயில்கள் அதிகம் உள்ளன. 177 படிகள் உள்ளன.

வசிஸ்டர், அவர் மனைவி அருந்ததி, காசிப முனிவர், நாரதர் ஆகியோர் வழிபட்டு பாப விமோசனம் பெற்றனர்.

நாரதர் உற்சவ விக்கிரகம் உள்ளதும் விழாக் காலங்களில் வீதியுலா வருவதும் வேறு எங்கும் காண முடியாத காட்சியாகும்.

அருணகிரிநாதர் இளைஞராக இருந்த போது முருகப் பெருமானே ஞானோபதேசம் செய்து சந்தன கோட்டம் என்னுமிடத்தில் அருள்பேறு

காட்டி வயலூர் வரப்பணித்ததாக வரலாறு. இதைக்காட்டும் சிற்பங்கள் சந்தானக் கோட்ட மண்டபத்தில் உள்ளன.

அடிவாரத்தில் சரவணப் பொய்கையும், மெய்க்கண்ணுடையாள் என்னும் வரப்பிரசாதி பெற்ற அம்மன் ஆலயமும் உள்ளது.

மலைமேல் செல்லும் வழியில் இடும்பன் சந்நிதியும் குடவரைக் கோயிலாக மீனாட்சி சுந்தரேசுவரர் ஆலயமும் உள்ளன.

சண்முக மண்டபத்தில் உற்சவ மூர்த்தியாக முருகப் பெருமான் எழுந்தருளியுள்ளார். அருகே காசி விசுவநாதர், விசாலாட்சி சந்நிதிகள் உள்ளன.

கருவறையில் ஆறுமுகப் பெருமான் பன்னிரு திருக்கரங்களுடன் இருபுறமும் தேவியர் விளங்க மயில் மீது அமர்ந்து கிழக்கு நோக்கிக் காட்சி தருகின்றார். வலது கரத்தில் சூலமும் இடதுகரத்தில் வஜ்ஜிராயுதமும் அமைந்துள்ளது. உற்சவரும் மூலவர் போன்றே காட்சி தருகின்றார். ஸ்ரீசண்முகனின் திருமுகங்கள் மூன்று முன்னும் மூன்று பின்னுமாக உள்ளன. தீப்பாராதனையில் போது கண்ணாடியில் பின்பக்க மூன்று முகங்களையும் தரிசிக்கலாம்.

ஸ்ரீசண்முகருக்குத் தங்கக் கவசம் உண்டு. சித்திரை மாதப் பிறப்பு முதல் 11 நாட்கள் நடக்கும் பூச்சொறிதல் விழா சிறப்பாகும். கோயிலின் தென்பக்கம் நாகதீர்த்தம் உள்ளது. தவம் செய்வதற்குரிய சில குகைகள் உள்ளன.

இங்கு வைகாசி விசாகம், தைப்பூசம், சஷ்டி விழாக்கள் சிறப்பான விழாக்கள்.

திருப்புகழில் 17 பாடல்கள் உள்ளன.

## 189. விரிஞ்சிபுரம்

வேலூரிலிருந்து 10 கி.மீ. தொலைவில் உள்ளது.

பிரம்மா சிவசர்மாவாக அவதரித்து இறைவனது திருமுடியைக் கண்டதனால் திருவிரிஞ்சுபுரம் எனப் பெயர் பெற்றது. பிரம்மபுரம், விஷ்ணுபுரம், கரம்புரம், கௌரிபுரம், மார்க்க பந்தீசுவரம் எனப் பல பெயர்களும் உண்டு.

இத்தலச் சிவபிரான்: வழித்துணை நாதர். இறைவி: மரகதவல்லி. தீர்த்தம் பாலாறு, சிம்ம, திரிசூல, சோம, பிரம்ம தீர்த்தங்கள்.

இங்கு இரு முருகன் சந்நிதிகள் உள்ளன. சிவன் கோவிலில் எழுந்தருளியுள்ள முருகப் பெருமான் போர்க்கோலம் பூண்டவராகக் கிழக்கு நோக்கி ஆறு திருமுகங்களும் பன்னிரண்டு திருக்கரங்களும் கொண்டு 6 அடி உயரம் கொண்டு மயில் மீது அமர்ந்து காட்சி தருகிறார். இவர் அமர்ந்துள்ள மயில் தன் வாயில் சீறும் பாம்பினைக் கொண்டு வளைந்த திருக்கழுத்துடன் தூக்கிய ஓர்க் காலுடன் காட்சி தருகின்றது.

50 படிகள் ஏறி மற்றொரு முருகப் பெருமானைத் தரிசிக்க வேண்டும். இவர் உக்ரரூபம் கொண்டவர். ஆறு திருமுகங்களும் பன்னிரு திருக்கரங்களும் கொண்டு மயில் மீது போர்க்கோலம் பூண்டு காட்சி தருகின்றார். தேவியர் இருவரும் அருகே நிற்கின்றனர்.

ஐந்து திருப்புகழ்ப் பாடல்கள் பெற்ற தலம்.

## 190. விருத்தாசலம்

சென்னை - திருச்சி புகைவண்டி மார்க்கத்தில் உள்ள தலம். சிவபெருமான் முதலில் படைத்த மலை எனவே திருமுதுகுன்றம் எனவும், விருத்தகாசி, பழமலை, முதுமலை, முதுகிரி என்றும் பெயர் பெற்றது.



பிரகார மண்டபத்தின் கீழே 16 படிகள் இறங்கினால் 'ஆழத்துப் பிள்ளையார்' திருக்கோயில் உள்ளது. காமிகலிங்கம் முதல் 28 ஆகம லிங்கங்களும் உள்ளன.

இங்கே உயிர்விடும் பிராணிகளுக்கெல்லாம் பார்வதி தேவியார் தமது வஸ்திரத்தினால் வீசி இளைப்பாற்ற, இறைவன் பஞ்சாட்சரம் ஓதி முத்தி அளிப்பார் என்பது புராணம்.

இத்தலச் சிவபிரான்: பழமலை நாதர். இறைவி: பெரியநாயகி. தீர்த்தம்: மணிமுத்தாநதி. தலமரம்: வன்னிமரம்.

மூன்றாம் பிரகாரத்தில் ஆறுமுகப் பெருமான் பன்னிரு திருக்கரங் களுடன் தேவியர் இருபுறமும் விளங்க மயில்வாகனனாகக் காட்சி தருகின்றார்.

நான்காம் பிரகாரத்தில் 28 ஆகமங்களுடன் கூடிய குமரேசர் சந்நிதி உள்ளது. இவர் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு தேவியர் இருவருடன் கிழக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார்.

கந்தசஷ்டி, திருக்கார்த்திகை, ஆனித்திருமஞ்சனம், ஆவணிமூலம், நவ ராத்திரி, மாசிமகம் பெருவிழாக்களாகும்.

திருப்புகழில் மூன்று பாடல்கள் இத்தலத்திற்குரியன.

## 191. வில்லுடையான்பட்டி - அத்திப்பட்டு

நெய்வேலி நகர் அருகில் உள்ளது. மிகப் பழமையான கோயில். இதனை வேல்ராம்பட்டு, அத்திப்பட்டு என்பர்.

அருணகிரிநாதர் வேண்டுதலை ஏற்று முருகப் பெருமான் வள்ளி தேவசேனாதேவி சமேதரராகக் கையில் வில் அம்புடன் காட்சி தந்தார். முருகப் பெருமான் வில்லுடன் காட்சி தருவதனால் வில்லுடையான்பட்டு எனப் பெயர் வந்தது.

அருணகிரிநாதர் முருகப் பெருமானிடம், "சூலம், வாள், தண்டு, செஞ்சவேல் கோதண்ட முஞ்சூடு தோளும் நடந்திரு மார்பும் தூயதாள் தண்டையுங் காண ஆர்வஞ் செயுந் தோகை மேல் கொண்டு முன் வர வேணும்" என வேண்ட பெருமானும் அடியாரின் வேண்டுகோளை ஏற்று அடியவர் அனைவருக்கும் அத்திருக்கோலத்துடன் காட்சி தர எண்ணி ஒரே முகத்தினை ஞானசக்தியான வேலினை விடுத்து வில் அம்புடன் விரிசடையுடன் இடுப்பில் சல்லடத்துடன் கிழக்கு நோக்கி எழுந்தருளினார். இவர் சுயம்புமூர்த்தி. இவருக்குச் சிவசுப்பிரமணியர் என்று பெயர்.

மூலத்திருமேனி சிவலிங்க வடிவாயும் உள்ள சிறப்புடையது. கீழே ஆவுடை வடிவாயும் அரை அடி உயரத்தில் வில்லேந்திய கோலத்தில் காட்சி தருகின்றார். உற்சவரும் மூலவர் போன்ற தோற்றத்துடன் விரித்த சடையுடன் வேடுவக் கோலத்தில் காட்சி தருகின்றார்.

வில்லேஜ் சமுத்தியார் என்னும் பிரிவினர் இக்கோவிலைக் கட்டினர். இவர்கட்கே இங்கு முதல் மரியாதை அளிக்கப்படுகிறது.

சுவாமி வளையாபதி யோகி பெருமான் விக்கிரகத்தை நிலத்திலிருந்து மண்வெட்டி கொண்டு தோண்டி எடுக்க ரத்தம் வந்தது. பின் கைகளினால் தோண்டி எடுத்து முருகனைப் பிரதிஷ்டை செய்தார். மண் வெட்டி பட்ட தழும்பு பின்புற இடத்தோளில் உள்ளது.

கந்தசஷ்டி, பங்குனி உத்திரம் சிறப்பு விழாக்கள். திருப்புகழில் ஒரு பாடல் உள்ளது.

## 192. விஜயமங்கலம்

ஈரோடு - திருப்பூர் புகைவண்டிப் பாதையில் புகைவண்டி நிலையம் உள்ளது.

இங்கு சிவபெருமான் நாகேசப் பெருமான். இறைவி: கோவர்த்தனாம்பிகை. இங்கு ஆறுமுகப் பெருமான் பன்னிரு கரங்கள் கொண்டு மயில் மீது அமர்ந்து கிழக்கு நோக்கிக் காட்சி தருகின்றார். தேவியர் இருவரும் உடன் விளங்குகின்றனர். மயிலின் முகம் இடப்பக்கம் உள்ளது. இவர் 5 அடி உயரம் கொண்டவர். உற்சவர் ஒரு திருமுகம் கொண்டு தேவியருடன் காட்சி தருகிறார்.

திருப்புகழில் ஒரு பாடல் உள்ளது.

## 193. வெஞ்சமாக்கடல்

கருவூருக்குத் தெற்கே 19 கி.மீ. தூரத்தில் உள்ளது.

வெஞ்சன் என்னும் அசுரன் வழிபட்டதலம். சுந்தரமூர்த்தி நாயனாரின் பாடல்களைக் கேட்டு மகிழ்ந்த சிவபிரான் தன் இரு குமாரர்களைத் தம் பக்தையான ஒரு மூதாட்டியிடம் ஈடு காட்டிப் பொன் பெற்று சுந்தரமூர்த்தி நாயனாருக்கு வழங்கிட்ட தலம். இத்தலச் சிவபிரான் வகிர்தநாதேசுரர். இறைவி: விகிர்தநாயகி.

இங்கு முருகப் பெருமான் ஆறு திருமுகங்களுடன் பன்னிரு திருக்கரங்களும் கொண்டு மயில் மீது அமர்ந்து தேவியர் இருவருடன் கிழக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார். உற்சவர் கல்யாணக் கோலத்தில் நான்கு திருக்கரங்களுடன் காட்சி தருகிறார். மாசி மாத பிரமோற்சவம் பெரிய விழாவாகும். திருப்புகழில் ஒரு பாடல் இத்தலத்திற்குரியது.

## 194. வேப்பூர் - வேப்பஞ்சத்தி

உளுந்தூர்ப்பேட்டைக்குத் தெற்கே 24 கி.மீ.இலும், திட்டக்குடி புகை வண்டி நிலையத்திலிருந்து 13 கி.மீ. தொலைவிலும் உள்ளது.

முன்னர் முருகப் பெருமான் மட்டுமே காட்சி அளித்தார். பிற்காலத்தில் தேவியர் இருவரும் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளார்.

அருகிலுள்ள நல்லூரில் முருகப் பெருமான் எழுந்தருளியுள்ளார்.

சிலர் வ.ஆ.மாவட்டம் ஆற்காட்டிலிருந்து 5 கி.மீ. தொலைவில் பாலாற்றின் கரையிலுள்ள வசிஷ்டேஸ்வரர் ஆலய முருகப் பெருமானே 'வேப்பூர்' என திருப்புகழில் போற்றப்பட்டவர் என்பர்.

இவர் தேவியருடன் பாலசுப்பிரமணியராகக் காட்சி தருகின்றார்.

திருப்புகழில் மூன்று பாடல்களில் வேப்பூர், வேப்பஞ்சத்தி, நிம்பபுரம் எனக் குறிப்பிடப்பட்டுள்ளன என்பர்.

## 195. வெள்ளிகரம்

திருத்தணியிலிருந்து 36 கி.மீ. பள்ளிப்பட்டிலிருந்து 3 கி.மீ. தூரத்தில் உள்ளது.

மலைமேல் சுயம்பு மூர்த்தியாக சோமநாதர் கோவிலில் எழுந்தருளியுள் ளார். இறைவி: மரகதவல்லி. மலையடிவாரத்தில் முக்தீசுவரர் ஆலயத்தில் முருகப் பெருமான் தேவியருடன் எழுந்தருளியுள்ளார். இத்தலச் சிவபிரான் பிருதிவீசுவரர். இறைவி: புவனேஸ்வரி.

இங்கு முருகப் பெருமான் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு அருகில் மயில் நிற்க தேவியர் இருவருடன் கிழக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார். தலமரம் நெல்லி.

மலைக்கோவிலில் முருகப் பெருமான் சந்நிதி இல்லை. திருப்புகழில் ஒன்பது பாடல்கள் உள்ளன.

## 196. வேதாரண்யம்

சப்தவிடங்கத் தலங்களில் ஒன்று. புவனிவிடங்கர் -ஹம்ஸபாத நடனம். வேதங்கள் பூசித்ததால் வேதாரண்யம் எனப் பெயர் பெற்றது.

வேதங்களால் திருக்காப்பு செய்த கதவை திருநாவுக்கரசரும், ஞானசம் பந்தரும் முறையே திறக்கவும், மூடவும் பதிகம் பாடிய தலம்.

ஸ்தல விநாயகர் சிந்தாமணிக் கணபதி. வெளிப்பிரகாரத்தில் மேல்பக்கம் வீரஹத்தி விநாயகர் மேற்கு நோக்கி எழுந்தருளியுள்ளார்.

'வேதாரண்ய விளக்கு அழகு' என்பது வழக்கு. ஆலய விளக்கில் தீப நெய்யை உண்ண வந்த எலியின் மூக்கு பட்டு திரி உயர சுடர் பிரகாசமானது. இறைவன் அவ்வெலிக்கு அருள்புரிந்து அடுத்த பிறவியில் மாவலிச் சக்கரவர்த்தியாக்கிய தலம். 96 தீர்த்தங்கள் உள்ளன.

இராமர் வழிபட்ட தலம். எனவே இத்தலம் ஆதிசேது என்பர். சத்தியகிரி என்ற பெயரும் உண்டு.

இங்கு ஆறுமுகப் பெருமான் பன்னிரு திருக்கரங்களுடன் கிழக்கு

நோக்கி நின்ற கோலத்தில் இரு தேவியருடன் எழுந்தருளியுள்ளார். மயில் பின்புறம் உள்ளது.

மேலக்குமரன் ஒரு திருமுகமும் இரு திருக்கரங்களுடன் தேவியருடன் மேற்கு நோக்கி மயிலின் முன் காட்சி தருகின்றார்.

சித்ரா பௌர்ணமி, கந்தசஷ்டி சிறப்பான விழாக்களாகும். திருப்புகழில் மூன்று பாடல்கள் உள்ளன

## 197. வேப்பூர் (ஆற்காடு)

சென்னை - வேலூர் பேருந்து வழியில் ஆற்காட்டிலிருந்து 5 கி.மீ. தொலைவில் பாலாற்றின் கரையில் அமைந்த தலம்.

வசிஷ்டர் ஆசிரமம் அமைத்து வழிபட்டார். சிவபெருமான் வசிஷ்டேசு வரர். இறைவி: மணோன்மணி.

முருகப் பெருமான் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு இரு தேவியருடன் நின்ற கோலத்தில் காட்சி தருகின்றார். திருப்புகழில் ஒரு பாடல் உள்ளது.

## 198. வைத்தீசுவரன் கோயில் - புள்ளிருக்கு வேளூர்

சீர்காழிக்குத் தெற்கே 6 கி.மீ. தொலைவில் உள்ளது. இதனைப் புள்ளிருக்கு வேளூர் என்பர்.

சடாயு, சம்பாதிப் பறவைகளும் (புள்), ரிக் வேதமும் (இருக்கு) முருகனும் (வேள்) சூரியனும் இத்தல வைத்தியநாதனை வணங்கியதனால் இத்தலப் பெயர் 'புள்ளிருக்கு வேலூர்' ஆயிற்று. முருகன் வணங்கியதனால் கந்தபுரி என்ற பெயரும் ஏற்பட்டது.

முதல் பிரகாரத்தில் உற்சவர் செல்வ முத்துக்குமாரசாமி தேவியருடன் கிழக்கு நோக்கிக் காட்சி தருகின்றார். இவருக்கு வைரவேல், தங்கக்கவசம், நவரத்தின கவசம் சாத்துகின்றனர். கார்த்திகையன்று சிறப்பு வழிபாடு உண்டு. உற்சவர் முத்துக்குமாரசாமி சுந்தர ரூபத்தோடு வீற்றிருக்கின்றார்.

சிவபெருமான் பூஜிக்க வேண்டி முருகப் பெருமான் மேற்கு நோக்கி எழுந்தருளியுள்ளார். சிவன் கிழக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார். ஆறுமுக மும் பன்னிரு கரங்களும் கொண்டு மயில் மீது முருகவேள் இருபுறமும் தேவியர் சூழ எழுந்தருளியுள்ளார்.

ஆறுமுகனை ஒரு முகமுடையவனாகக் காண விரும்பிய தாயின் மனம் மகிழ இத்தலத்தில் ஒரு முகத்துடன் பேரெழில் விளங்க முருகப் பெருமான் காட்சி தருவதாகக் கூறுவர். சிக்கல் சிங்காரவேலனையும் ஸ்ரீசெல்வக்குமர னையும் ஒரே சிற்பி வடித்ததாகக் கூறுவர்.

திருமுடிக் காணிக்கை சிறப்பு. தைப்பூசமும் கந்தசஷ்டியும் சிறப்பான விழாக்களாகும்.

குமரகுருபரர் முத்துக்குமரன் மீது முத்துக்குமாரசாமி பிள்ளைத் தமிழ் பாடியுள்ளார். திருப்புகழ் பாடல் பெற்ற தலம்.

இத்தலச் சிவபிரான்: வைத்தியநாதர். இறைவி: தையல் நாயகி. தலமரம்: வேம்பு. இங்கு அம்மை மக்களின் நோய்களைத் தீர்க்க வைத்தியநாதருக்கு உதவியாகக் கையில் தைல பாத்திரமும் சஞ்சீவியும் தலமரமாம் வில்வ மரத்தடி மண்ணும் எடுத்து இறைவனுடன் நோய் தீர்க்கும் கோலத்தில் காட்சி தருகின்றார்.

திருப்புகழில் ஆறு பாடல்கள் உள்ளன.

## 199. வைரவி வனம்

தமிழகத்தில் எங்கும் இத்தலம் இருப்பதாகத் தெரியவில்லை. திருப்புகழ் மணி தணிகைமணியவர்கள் பஞ்சாப் மாநிலத்தில் அமைந்த தலம் என்று குறிப்பிடுகின்றார். இத்தலம் சரஸ்வதி நதிக்கரையில் இருப்பதாகக் குறிப்புகள் உள்ளன.

''வளமுறு தடத்தினோடு சரஸ்வதி நதிக்கண் வீறு
வயிரவி வனத்தில்மேவு பெருமானே''
என்ற வரிகள் திருப்புகழில் காணப்படுகின்றன.

சக்திபீடங்கள் 64-ல் ஒன்றாக இருக்கலாம் என்பர்.

## 200. ஸ்ரீசைலம் - திருமலை

ஆந்திர மாநில கர்னூர் மாவட்டத்தில் நந்தியால் புகைவண்டி நிலையத்திற்கு வடகிழக்கு 106 கி.மீ. தொலைவில் உள்ளது. இதனைத் திருமலை, மல்லிகார்ஜுனம் என்பர். மலைமேல் அமைந்த தலம்.

சுந்தரமூர்த்தி சுவாமிகள் இத்தலத்தைக் குறிப்பிடும் போது ''தூரத்திலிருந்து தொழுவார்க்கும் வீடருளும் தலம்'' என்னும் பொருளில் ''சேண் பார்த்தவர்க்கு வீடருள் சீபர்ப்பத நற்றலம்'' என்று பாடியுள்ளார்.

இத்தலச் சிவபிரான்: பருப்பதநாதர். இறைவி: பருப்பத நாயகி. தீர்த்தம்: பாதாள கங்கை. தலமரம்: ஆல், அத்தி, அரசு. இங்கு பக்தர்களே இறைவருக்கு அபிஷேகம் செய்வித்து வழிபடலாம்.

ஜோதிர்லிங்கத் தலங்களில் ஒன்று. அம்பிகை சந்நிதிக்கு முன்புள்ள ஜோதிர்லிங்கங்களுடன் முருகப் பெருமான் சந்நிதியும் உள்ளது.

இங்கு கந்த பெருமான் ஆறு திருமுகங்களும் பன்னிரு திருக்கரங்களும் கொண்டு மயில் மீது அமர்ந்த கோலத்தில் கிழக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார். தேவியர் இல்லை.

ஆதிசங்கரர் இத்தலத்தில் தான் சிவானந்த லஹரி பாடினார்.

சிவராத்திரி சிறப்பு விழாவாகும். திருப்புகழில் ஒரு பாடல் உள்ளது.

## 201. ஸ்ரீமுஷ்ணம் - முட்டம்

சிதம்பரத்திற்கு மேற்கே 35 கி.மீ. தொலைவில் விருத்தாசலத்திலிருந்து 18 கி.மீ. தொலைவில் அமைந்த தலம்.

இங்குள்ள சிவன் கோவில் மிகப் பழமையானது. இறைவன் நித்யீசுவரர். இறைவி: பெரியநாயகி.

இங்கு முருகப் பெருமான் ஆறு திருமுகங்களும் பன்னிரு திருக்கரங்களும் கொண்டு மயில் மீது அமர்ந்து கிழக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார். உற்சவர் மயில் மீது சாய்ந்த நிலையில் ஒரு கால் காலணியுடனும் ஒரு கால் தாழ்ந்தும் உள்ளது.

ஆடிக்கிருத்திகை, தை கிருத்திகை, பங்குனி உத்திரம் சிறப்பு விழாக்களாகும். இங்கு விபூதி அலங்காரம் சிறப்பாகும்.

இங்கு பூவராக சுவாமி என்னும் விஷ்ணு ஆலயம் ஒன்றும் உள்ளது. மங்களா சாஸனப்பதி. இப்பெருமானையும் திருப்புகழில் அருணகிரியார் போற்றியுள்ளார்.

இரு திருப்புகழ் பாடல்கள் இத்தலத்திற்குரியன.

## 202. ஹரித்துவார் - மாயாபுரி

இமயமலையில் ஹரித்துவாருக்கு அருகில் உள்ள தலம். இங்குத் தட்சிணேஸ்வரர் என்னும் விஷ்ணு கோவில் உள்ளது. இங்கு முருகன் திருவுரு இல்லை.

அருணகிரிநாதர் இத்தலத்தை மாயை என்று (மாயாபுரி) வாழ்த்திப் பாடியுள்ளார். அருவ வடிவில் இமயமலையில் எழுந்தருளியுள்ளதாக எண்ணிப் பணிவோம்.

திருப்புகழில் ஒரு பாடல் உள்ளது.



# திருப்புகழ் வைப்புத் தலங்கள் புகழ் பெற்ற தலங்கள்

## 203. அழகு மலை

திருப்பூரிலிருந்து நகரப் பேருந்து உள்ளது.

சிறிய மலை மீது குமரப் பெருமான் தண்டாயுதபாணியாய் கிழக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார். 300 படிகள் ஏறிக் கோயிலை அடைய வேண்டும். பழைய கோயில். தேவியர் இருவரும் ஒரே சந்நிதியில் எழுந்தருளி உள்ளனர்.

சஷ்டி, கிருத்திகை, அமாவாசை மிகவும் சிறப்பாகக் கொண்டாடப்படுகின்றது.

## 204. ஆனூர்

செங்கல்பட்டிலிருந்து 5 கி.மீ. தூரத்தில் உள்ளது.



கருவறையும் அர்த்த மண்டபமும் கொண்ட சிறிய திருக்கோயில். இங்கு எழுந்தருளியுள்ள குமரப் பெருமான் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு 4 அடி உயரத்துடன் நின்ற திருக்கோலத்தில் காட்சி தருகின்றார். பின் வலக்கையில் அக்கமாலையில் பின் இடக்கையில் கமண்டலமும், முன் இடக் கையில் ஊருமுத்திரையும், முன் வலக்கையில் தாமரை மலரும், தலையில் மகுடமும் காணப்படுகின்றன. இப்பெருமான் அணிகலன்கள் அணியப் பெற்று அழகனாகக் காட்சி தருகின்றார்.

கையில் மலர் தாங்கிய பிரம்ம சாஸ்தா திருக்கோலம் வேறு எங்கும் காண முடியாதது.

முருகப் பெருமான் தன் குமரப் பருவத்தில் பிரம்மனைச் சிறையில் அடைத்து படைப்புத் தொழிலை மேற்கொண்ட நிலையைக் காட்டும் தலம். இங்கு முருகப் பெருமானின் ஊர்தியாக யானை உள்ளது.

## 205. இரத்தினகிரி

வேலூரிலிருந்து ஆற்காடு செல்லும் வழியில் 10 கி.மீ. தூரத்தில் உள்ளது.

கீழ் மின்னல் என்னும் கிராமத்தில் உள்ள சிறிய மலை மீது அமைந்த திருக்கோயில். 177 படிகள் ஏறி கோயிலை அடைய வேண்டும். மலையடி வாரத்தில் வரசித்தி விநாயகர் சந்நிதி உள்ளது.

இத்தலத்தின் பழைய பெயர் மோர்க்குளத்து மலை. கிழக்கு நோக்கிய மலை. வள்ளி, தேவசேனா தேவி சமேதரராய் ஆறுமுகப் பெருமான் கிழக்கு நோக்கியவாறு நின்ற திருக்கோலத்தில் வேலுடன் காட்சி தருகின் றார்.

மூலவருக்கு முன் கருவறையில் பெரிய வேல் ஒன்றுள்ளது. ஆடிமாதம் பெருவிழா நடைபெறும். ஆடிக்கிருத்திகை சிறப்பு.

பாலமுருகனடிமை சுவாமிகள் இக்கோவிலைப் பராமரித்து வருகின்றார். இச்சுவாமிகள் அருள் வாக்கும் வழங்குகின்றார்.

## 206. இரெட்டிபட்டி கந்தகிரி

நாமக்கல்லிலிருந்து துறையூர் செல்லும் வழியில் 3 கி.மீ. தூரத்தில் உள்ளது. கூலிப்பட்டி பழனியாண்டவர் மலை என்றும் கூறுவர்.

சிறிய மலை மீது அமைந்த திருக்கோயில். 171 படிகள் உள்ளன. தண்டாயுதபாணியான குமரேசப் பெருமான் மேற்கு நோக்கிக் காட்சி தருகின்றார்.

இம்மலையின் அடிவாரத்திலுள்ள குகையில் வாழ்ந்த ஸ்ரீலஸ்ரீ வெறி கோவிந்தன் என்ற துறவி ஒருவரே இக்கோவில் தோன்றக் காரணம் என்பர். அவர் சித்தி பெற்ற சமாதியின் மீதே முருகப் பெருமான் கோயில் கொண்டுள்ளார். துறவி தவம் இருந்த குகை உள்ளது.

மாதக் கிருத்திகை, அமாவாசை, வளர்பிறை சஷ்டி, விசாகம் சிறப்பாகும்.

## 207. இளங்குன்னபுழா

கேரளாவில் ஆல்வாய்க்கு மேற்கே பரூரிலிருந்து 20 கி.மீ. தூரத்தில் உள்ளது. கேரளத்தின் முக்கிய முருகன் திருத்தலங்களில் ஒன்று.

இதைக் 'கேரளத்தின் திருச்செந்தூர்' என்பர். சுமார் 800 ஆண்டுகட்கு முன் இங்கிருந்து 6 கி.மீ. இல் உள்ள 'வல்லார் பாடம்' என்ற சிறு தீவில் ஒரு சிலை ஒதுங்கியது. ஒரு பெண் இச்சிலையில் தன் அரிவாளைத் தீட்டிய போது இரத்தம் பெருகியது. உடனே அவள் மயக்கமானாள். பின் அப்பெண் அருள் வாக்கு கொடுத்தாள். ''இங்கிருந்து ஐந்து அம்புகள் விட வேண்டும். வெவ்வேறு திசைகளில் நான்கு அம்புகள் விழும். அது

காவிலின் எல்லையாகும். ஐந்தாவது அம்பு விழுந்த இடத்தில் கோயில் ட்ட வேண்டும்'' என்றாள். அதன்படி இக்கோவில் கட்டப்பட்டது. ற்சவத்தின் போது அம்பு விழுந்த நான்கு திசைகளிலும் கொடியேற்று ிழா நடக்கும். இக்கருவறையும் சிறிது உயரத்தில் அமைக்கப்பட்டது.

பீடத்துடன் சேர்ந்து மூல விக்கிரகம் சுமார் 5.5 அடி உயரம். நான்கு ருக்கரங்களில் கீழ வலது கை. அபய ஹஸ்தமாகவும் இடது கை இடுப்பில் ஊன்றியபடியும் உள்ளது. மேலிரு கரங்களிலும் சக்தி ஆயுதமும் ஜபமாலை டனும் சுப்பிரமணியர் எழுந்தருளியுள்ளார்.

இவ்விக்கிரகம் திருச்செந்தூர் மூல விக்கிரகம் என்பர். சிறிது பின்னம் ற்பட்டதனால் அதைக் கடலில் போட்டதாகவும் அப்பெருமான் இங்கு ந்து கரை ஒதுங்கியதாகவும் வரலாறு. இப்பெருமான் ஸ்ரீ சனத் குமார ால் திருச்செந்தூரில் பிரதிஷ்டை செய்யப்பட்டது என்பர்.

இவ்விக்கிரகம் இடுப்புக்குக் கீழே பின்னமாகி இருந்தது. இடுப்புவரை சிலையாகவும் அதற்குள் கீழ் பஞ்ச லோகமாகவும் அமைந்துள்ளனர்.

கார்த்திகை மாதம் திருவிழா நடைபெறும். சஷ்டி. தைப்பூச நாட்களில் வடி எடுக்கும் விழா நடக்கிறது.

## 208. உதயணாபுரம்

எர்ணாகுளம் - கொல்லம் புகை வண்டி மார்க்கத்தில் வைக்கம் ரோடு ்ற நிலையத்தில் இறங்க வேண்டும்.

கேரளத்தில் முருகன் கோவில்கள் அரிது. அவற்றுள் மிகப் பிரசித்தி ற்ற முருகன் கோவில் இதுவாகும். சுப்பரமணியர் 4 அடி யரமுள்ளவர்.

மலையாளக் கோவில்கள் அமைப்பினை உடையது. கார்த்திகை மாத ஷ்டமி அன்று வைக்கத்தப்பனுடன் திருமுருகன் அருங்காட்சி தருகின் ர். இது பெரிய விழாவாக நடக்கிறது. ஸ்ரீ வைக்கத்தப்பன் தன் ஆறாட்டு ாத்தன்று உதயணாபுரம் சென்று அங்கு ''கூடிப்பூஜை''யை ஏற்பர். அதே ால் உதயணாபுரம் ஆறாட்டு விழாவன்று ஸ்ரீ சுப்பிரமணியர் வைக்கம் ன்று ''கூடிப் பூஜையை'' ஏற்றுக் கொள்வார்.

## 209. உள்ளூர்

திருவனந்தபுரத்திலிருந்து கொல்லம் செல்லும் பாதையில் வடமேற்கே கி.மீ. இல் உள்ளது.

கிழக்கு நோக்கிய திருக்கோவிலில் சுப்பிரமணியர் வலக்கை அபய ஸ்தமாகவும் இடது கையை இடுப்பில் ஊன்றியபடியும் அருள்பாலிக்கின்

தைப்பூசம் மிகவும் சிறப்பு. அப்போது இங்குப் பலவகையான காவடிகள் எடுக்கின்றனர்.

## 210. உறையூர்

திருச்சியை அடுத்துள்ளது. இங்குள்ள திருமுக்கீசுவரம் திருக்கோயிலில் சிவபெருமான் பஞ்சவர்ணேசுரர், இறைவி: காந்திமதி.

இங்கு ஒரு திருமுகமும் இரு திருக்கரங்களும் விளங்க இரு தேவியருடன் முருகப் பெருமான் எழுந்தருளியுள்ளார்.

இங்குக் கோழி யானையைத் தூக்கும் சிற்பம் சிறப்பானது.

திருப்புகழ் வைப்புத் தலங்களில் ஒன்று.

## 211. எலத்தூர்

திருவண்ணாமலையிலிருந்து 24 கி.மீ. இல் உள்ள பாக்கம் என்ற ஊரின் அருகில் உள்ளது.

186 படிகளைக் கொண்ட பரந்தமலை மேல் திருக்கோவில் அமைந்துள்ளது. மலை அடிவாரத்தில் முதல் படியில் செல்வ விநாயகர் எழுந்தருளியுள்ளார். 25-ஆம் படியில் இடும்பனுக்கும் 186-ம் படியில் வரசித்தி விநாயகருக்கும் சந்நிதிகள் உள்ளன.

இது ஒரு சுயம்பு க்ஷேத்திரம். நட்சத்திரக் கோயில் என்பர். கிருத்திகை நட்சத்திரத்தன்று சிவன் சுயம்பு மூர்த்தியாகத் தோன்றினார்.

இங்கு முருகப் பெருமான் வள்ளி, தேவசேனா தேவி சமேதராய் தண்டாயுதபாணியாக மயில் மீது ஒரு திருமுகத்துடன் நின்ற கோலத்தில் காட்சி தருகின்றார். இவர் சிவசுப்பிரமணியர் என்று அழைக்கப்படுகின்றார். இடப்புறம் தண்டாயுதபாணி சந்நிதி உள்ளது. ஆடிக்கிருத்திகை, பங்குனி உத்தரம் சிறப்பாகும்.

## 212. ஏடகம்

சோழவந்தான் புகை வண்டி நிலையத்திற்குத் தெற்கே 5 கி.மீ. இல் உள்ளது.

ஞானசம்பந்தர் சமணர்களுடன் வாதிட்டு ''வாழ்க அந்தணர்'' என்னும் பதிகம் ஏட்டில் எழுதி வைகையில் விட அவ் ஏடு வைகையில் எதிர்த்துச் சென்றது. ''வன்னியும் மத்தமும்'' என்னும் பதிகம் பாட அவ் ஏடு இத்தலத்தில் ஒதுங்கியது. தலம் ஏடகம் எனப் பெயர் பெற்றது.

இந்தச் சிவபிரான் ஏடக நாதேசுரர். இறைவி: ஏலவார் குழலி, தீர்த்தம்; வைகை, பிரம்மதீர்த்தம்.

வடக்குப் பிரகாரத்தில் முருகப் பெருமான் மயில் மீது அமர்ந்து வள்ளி தேவசேனா தேவியருடன் எழுந்தருளியுள்ளார். உற்சவர் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு தேவியருடன் நின்ற கோலத்தில் காட்சி தருகின்றார்.

திருப்புகழ் வைப்புத் தலங்களில் ஒன்று.

## 213. ஒத்தக் கடை

மதுரையிலிருந்து மேலூர் செல்லும் வழியில் ஆனைமலையில் அமைந்த தலம். முருகப் பெருமானுக்கு அமைந்த ஒரே குடவரைக் கோயில் இதுதான்.

கருவறையின் பின் சுவறில் கந்தவேளும் தெய்வயானையும் புடைச் சிற்பமாக எழுந்தருளியுள்ளனர். முருகப் பெருமான் இரு திருக் கரங்களுடன் சுகாசனத்தில் உட்கார்ந்த நிலையில் காட்சி தருகின்றார். வலக்கையில் மலரும் இடது கை தொடை மீது வைத்தும் தலையில் மகுடம் கொண்டும் காட்சி தருகின்றார்.

## 214. ஒற்றைக் கண்ணூர்

புதுக்கோட்டையில் அருகே உள்ளது.

முருகப் பெருமான் ஒரு திருக்கரத்தில் ஜபமாலையும் மறுதிருக்கரத்தில் சின் முத்திரையுடனும் காட்சி தருகின்றார். இங்கு வாகனமாக யானை உள்ளது.

இக்கோவிலே முருகப் பெருமானுக்குக் கட்டப்பட்ட முதல் கோவில் என்பர். இது முதலாம் ஆதித்த சோழனால் கட்டப்பட்டது என்பர்.

## 215. கங்கை கொண்ட சோழபுரம்

தஞ்சை மாவட்டம் பந்தணை நல்லூரிலிருந்து 3 கி.மீ. தொலைவில் உள்ளது. முதலாம் இராசராஜனால் கட்டப்பட்ட அரிய கலைக்கூடம். இங்குள்ள இறைவன் லிங்க வடிவில் பெரிய வடிவம். ஆவுடையார் 50 முழம் சுற்றளவு. லிங்கம் 3.5 அடி குறுக்களவு. சாளரத்தின் மீது ஏறியே அபிஷேகம் செய்வர்.

நாலடி சதுரம் கொண்ட ஒரே கல்லில் அமைந்த நவக்கிரகங்கள் வேறு எங்கும் காண முடியாது. தேவி சுமார் 8 அடி உயரம். உக்கிர வடிவில் காட்சி தரும் மகிஷாசுரமர்த்தினி. இறைவி திருவுரு வாணாசுரனால் பிரதிஷ்டை செய்யப்பட்டது. சிங்கமுகக் கிணறு 27 அடி குறுக்களவு கொண்டு உட்காந்திருக்கும் சிங்கத்தின் முன்கால்களுக்கிடையே படிகள் செல்கின்றது. சண்டிகேஸ்வரருக்குச் சிவபிரான் மகுடம் சூட்டும் அரிய

வடிவம் உள்ளது. 18 கைகளுடன் பெரிய விஷ்ணு துர்க்கை உள்ளார்.

இங்கு முருகப்பெருமான் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் விளங்க காட்சி தருகின்றார். முன்வலக்கையில் கத்தியும், பின் வலக்கையில் சக்தியும் முன் இடக்கையில் கேடயமும் பின் இடக்கையில் கேடயமும் விளங்க அரிய திருவுருவாகக் காட்சி தருகின்றார்.

## 216. கஞ்ச மலை

சேலத்திலிருந்து 21 கி.மீ. தூரத்தில் உள்ளது. சித்தர் கோவில், எடப் பண்ணி பேருந்துகளில் செல்லலாம்

குமரன் எழில் கொஞ்சும் பாலமுருகனாக இத்தலத்தில் எழுந்தருளியுள் ளார்.

ஸ்ரீ ஞான சற்குரு பால முருகன் கோயில் என்பர். 100 படிகள் ஏறி திருக்கோயிலை அடையலாம். ஆலயத்தின் மூன்று பக்கங்களிலும் மலை கள் சூழ்ந்துள்ளன. படிகளின் தொடக்கத்தின் இரு புறங்களிலும் சிறிய யானைக் கன்று உருவங்கள் உள்ளன.

முருகப் பெருமான் சிறு குழந்தை போல் பாலமுருகனாக மேற்கு நோக்கிக் காட்சி தருகின்றார். கார்த்திகை, அமாவாசை, ஞாயிறு சிறப்பு நாட்கள்.

தனிச் சந்நிதியில் வேல் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளது. மலையின் கீழ் சித்தர் கோயிலும், காந்தி தீர்த்தமும் உள்ளது. தீராத நோய்களைத் தீர்க்கும் குணமுடையது. வேம்பும் அரசும் இணைந்த பீடத்தினைச் சுற்றி நான் உருவங்கள் உள்ளன.

அருகிலுள்ள சித்தர் கோயில் சிங்கமுகக் கிணறு மாடு ஒன்று படுத்திருப் பது போன்று உள்ளது. இங்குள்ள காந்தி தீர்த்தக்குளம் தீராத பிணிகளைத் தீர்க்கும் குணமுடையது. அரசும் வேம்பும் இணைந்துள்ள இடத்தில் நாகம் பிரதிஷ்டைகளும் நவக்கிரக சந்நிதியும் உள்ளது. அருகில் நாகம் படமெ டுத்து நிற்க கிழக்கு நோக்கி விநாயகரும் மேற்கு நோக்கி அமைந்த அற்புதக் கோலத்தினைக் காணலாம். அருகில் சிறிய அருவியும் உள்ளது.

இங்குள்ள சித்தர் ஆசிரமத்தில் ஞாயிறு அன்று மக்கள் கூட்டம் கூட்டமாக வருவர்.



# 217. கதித்தமலை

ஈரோட்டிலிருந்து 38.5 கி.மீ; ஊத்துக் கோட்டை புகைவண்டி நிலையத்தி லிருந்த 21.5 கி.மீ. தூரத்திலும் உள்ளது.

சுவாமி மலை சுவாமிநாதன் போன்று ஆஜானு பாஹுவாய் விளங்குகின் றார்.

சிறிய மலையான இம்மலை இரு சிகரங்களைக் கொண்டது. ஒரு உயர்ந்த சிகரமும் அதன் பின்பக்கம் சிறிய சிகரமும் உள்ளது. உயர்ந்த சிகரத்தில் முருகப் பெருமானும் தாழ்ந்த சிகரத்தில் வள்ளி தெய்வயானையும் காட்சி தருகின்றனர்.

மயிலாசனப் பெருமாள் 'கதிகாசலப பெருமாள்' என வழங்கப்படுகின் றார். மலைமீது ஏற ஒத்தையடிப் பாதையே உள்ளது. முதலில் புற்றிடம் கொண்ட சுப்பராயர் சந்நிதி உள்ளது. இச்சந்நிதியில் வழிபட்டால் பாம்பு, விஷ சந்துக்கள் கடித்தவர்களுக்கு நஞ்சு நீங்கப் பெறும்.

இடும்பன் சந்நிதி அடுத்துள்ளது. சுப்பிரமணியா, ஈசுவரன் சந்நிதிகள் அடுத்துள்ளன. வேலாயுதப் பெருமான் வேலால் உருவாக்கப்பட தீர்த்தச் சுனை உள்ளது.

மூலஸ்தானத்தில் மூலவர் சுயம்புத் திருவுருவமுடையவர். ஓரடி உயரம் கொண்டவர். இவர் வலப் பக்கத்தில் 4 அடி உயரத்தில் தண்டபாணிக் கோலத்தில் வலக்கரம் தண்டு கொண்டு இடக்கரம் தொடை மீது அமர்த்தி கதிரைப் பெருமான் காட்சி தருகிறார். உற்சவர் திருநாமம் குழந்தைக் குமரர்.

பின் பக்கம் உள்ள மலையில வள்ளி, தெய்வசேனா தேவி எழுந்தருளி யுள்ளனர்.

தை மாதம் பிரம்மோற்சவம். தை உததரத்தன்று தேர் விழா. தைப்பூசம் சிறப்பு விழாவாகும்

# 218. கந்தகோட்டம்

சென்னையின் மையப்பகுதியான பூக்கடையை அடுத்துள்ளது.

கந்த பெருமான் கதிர்வேல் தாங்கி எழுந்தருளியிருக்கும் திருத்தலங் களுள் ஒன்று. கந்தசாமிக் கோயில் என்றும் கூறுவர். இப்பெருமான் முத்துக் குமாரசாமி என்னும் திருநாமத்துடன் வழங்கப் பெறுகின்றார்.

இத்தலம் திருவருட்பாப் பாடல் பெறற தலம். இராமலிங்க வள்ளலா 'சென்னை கந்த கோட்டத்தில் எழுந்தருளியுள்ள கந்தவேளே'' எனப் போற்றியுள்ளார்.

கந்தவேல் கிழக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார். சிற்ப திருவுருவம்.

உர்சவருக்குத் தனிச் சந்நிதி உள்ளது. பிரகாரத்தில் புஷ்கரணி உள்ளது. தட்சணாமூர்த்தி, விநாயகர், பிரம்மா, விஷ்ணு, சிவன், கிருஷ்ணன், நவவீரர்கள், துர்க்கை, சண்டிகேசுவரர், சந்நிதிகள் சுற்றுப் பிரகாரத்தில் உள்ளன. கர்ப்பக் கிரகத்தில் கந்த வேல் சந்நிதியுடன் விநாயகர், சூரியன், வீரபாகு, மீனாட்சி சுந்தரேசர், வள்ளி தேவசேனா தேவி சந்நிதிகள் உள்ளன.

## 219. கந்தாசிரமம்

சேலம் ஆத்தூர் மார்க்கத்தில் உடையார் பாளையத்திலிருந்து 3 கி.மீ. இல் உள்ளது.

கந்தகிரி என்ற பெயரும் உண்டு. மூன்று மலைகளின் அடிவாரத்தில் அமைந்த இந்தத் திருக்கோவில் புதுக்கோட்டை புவனேஸ்வரி பீடம் ஸ்ரீலஸ்ரீ சந்தானந்த சுவாமிகளால் கட்டப்பட்டது.

இங்குக் கந்தன் நின்ற திருக்கோலத்தில் கிழக்கு நோக்கிக் காட்சி தருகின்றார். ஸ்கந்தமாதா என்னும் பராசக்தி பன்னிரு திருக்கரங்களுடன் அருளாட்சி புரிகின்றார். பஞ்சமுக ஆஞ்சனேயர், அஷ்ட, சதபுஜ துர்க்கா தேவியையும் தரிசிக்கலாம்.

இங்குள்ள அஷ்டசதபுஜ துர்க்கா (ஸ்கந்தமானை) அற்புதக் கோலத்தில் காட்சி தருகின்றார்.

ஞாயிறு, அமாவாசை, கிருத்திகை சிறப்பு நாட்கள். இங்கு அர்ச்சனைகள், கற்பூர ஆராதனை நடைபெறுவதில்லை. திருவிளக்கு ஆராதனையே நடைபெறுகின்றது.

ஆஸ்ரமத்திற்குச் செல்லு முன் வடதிசை நோக்கியிருக்கும் பெரிய அனுமனைத் தரிசிக்கலாம். வலப் பக்கம் கோர அனுமன் உருவம், இடப்பக்கம் பன்றி உருவம், தலைக்கு மேல் ஆட்டின் உருவம், பின்புறம் பரமசிவன் உருவம் என்னும் ஓர் அரிய காட்சியினைக் காணலாம்.

## 220. கபிலர் மலை

நாமக்கல் அருகில் உள்ளது. நன்கு பரந்த சிறிய மலைமீது குகையில் அமைந்த திருக்கோவிலில் பால முருகன் திருக்காட்சி தருகின்றார். 131 படிகள் உள்ளன. இவருக்கு அருகில் சுயம்புலிங்க மூர்த்தி காட்சி தருகின்றார்.

மூலவரான பால முருகனுக்கு இடப் பக்கத்தில் உற்சவர் வள்ளி, தேவசேனா தேவி சமேதரராய் நாகாபரண சொரூபணாய்க் கிழக்கு நோக்கிக் காட்சி தருகின்றார். நாகாபரணம் பொருந்திய பெருமானை வேறு எங்கும் காண முடியாது.

பாலமுருகனுக்கு வலப்புறம் சுயம்பினையும் காணலாம். கர்ப்பக்கிரகமும் அதற்கு முன் உள்ள மண்டபமும் குடவரையேயாகும். மூலவருக்குப் பின் பக்கம் மேற்குத் திசையில் உள்ள சிறு துவாரத்தின் வழியே நல்ல காற்று வந்து கொண்டிருக்கிறது.

நாகாபரணத்தோடு பெருமான் இருப்பதனால் விஷமுள்ள ஜந்துகள் இக்கோவிலை அணுகுவதில்லை. மூலவர் கருவறை நேராக இல்லாமல் சிறிது (நூலிழை அளவு) சாய்ந்து காணப்படுகின்றது.

இம்மலையின் உச்சியில் விநாயகர் ஆலயம் ஒன்று உள்ளது. செல்லும் வழியில் தலமரமான குறுந்தை மரத்தடியில் கபில தேவர் தவக் கோலத்தில் காட்சி தருகின்றார். இவராலேயே இத்தலம் 'கபிலர்மலை' எனப் பெயர் பெற்றது. விநாயகருக்கும், அடுத்து கபில தேவருக்கு இரண்டாவதாகவும், வேல் தாங்கிய கபிலர் திருமேனிக்கு மூன்றாவதாகவும் பூசைகள் நடைபெறு கின்றன. மலை மீது சுனை உள்ளது.

கிருத்திகைதோறும் படி உற்சவம் நடைபெறும். கந்த சஷ்டி விழா சிறப்பாகும்.

## 221. கன்னிமங்கலம்

பாலக்காட்டின் அருகே அமைந்துள்ளது. இங்கு முருகப் பெருமான் நாகவடிவில் அரசமரத்தடியில் எழுந்தருளியுள்ளார். குமார சுப்பிரமணியர் என்ற திருநாமம் உடையவர்.

பணா மகுடத்துடன் பாம்பு விக்கிரகத்தின் கீழே சிறிய உருவில் முருகனைத் தரிசிக்கலாம். அரச மரத்தை வலம் வந்து வணங்குவர்.

## 222. காந்த மலை

நாமக்கல்லை அடுத்த மோகனூரிலிருந்து 1.5 கி.மீ. நாமக்கல்லிலிருந்து 11 கி.மீ. தொலைவில் உள்ளது.

வைப்புத் தலங்களில் ஒன்று. இங்கு மலைமீது முருகப் பெருமான் எழுந்தருளியுள்ளார். கட்டழகனான காந்தமலைக் கந்தன் கண்கவர் வனப் புடையவர். அபயானந்த சுவாமி வழிபட்டது. தைப்பூசம் அன்று தேர்த் திருவிழா நடைபெறும்.

அருகிலுள்ள மோகனூரில் அசலதீபேசுவரர் மதுகரவேணி எழுந்தருளி யுள்ளனர். பல அதிசயங்களை உடையது. இங்குக் காவிரி தென்வடலாக ஓடுவது சிறப்பு. இறைவன் மூலஸ்தானத்தில் உள்ள தீச்சுடர் காற்றில் ஆடுவதில்லை, அசைவதில்லை.

புரட்டாசி மாதம் முதல் வாரத்திலும் பங்குனி இரண்டாவது வாரத்திலும் இருநாட்கள் சூரிய ஒளி காலையில் அம்மன் மீதும் மாலையில் இறைவன் மீதும் விழுந்து பூசிக்கின்றார்.

## 223. காவிரிப்பூம்பட்டினம்

தஞ்சை மாவட்டத்தில் உள்ளது. இங்கு பல்லவனீச்சுரம் என்ற கோயில் உள்ளது. இங்கு அன்னையும் ஆறுமுகப் பெருமானும் சேர்ந்துள்ள பஞ்சலோக வடிவம் உள்ளது. இத்தலத்தில் ஒரு முகமும் நான்கு திருக்கரங் களும் கொண்டு இரு தேவியருடன் நின்ற கோலத்தில் பெருமான் காட்சி தருகின்றார்.

சாயாவனம் திருக்கோயிலில் (இரத்தின சாயாவனேசுவரர் - இன்மொழி யம்மை) வில்லேந்திய கோலத்திலும், செந்திலாண்டவன் கோலத்தில் பாலசுப்பிரமணியரும் எழுந்தருளியுள்ளனர். திருப்புகழ் வைப்புத் தலங்க ளில் ஒன்று.

அன்னை மடிமீது தவழும் முருகப் பெருமான் மடியை விட்டுக் கீழே அமர்ந்த நிலையில் காட்சி தருகிறார்.

இத்தகு அன்னையும் குமரனும் உள்ள திருக்காட்சி வேறு எத்தலத்திலும் காணக் கிட்டாத ஒன்றாகும்.

வழக்கமாக சிவன், உமை, முருகன் (சோமாஸ் கந்தவடிவம்) தான் காணப்படும். இங்கு வழக்கத்திற்கு மாறாக வலக்கால் குத்திட்டு இடக்கால தொங்க (உத்குடி இருக்கை) தலையில்கரந்த மகுடமும் வலக்கையில் பூவும் இடக்கை தொடையிலும் வைத்து அமர்ந்துள்ளார்.

## 224. கிடங்கூர்

புலியனூரிலிருந்து ஏற்றுமானூர் செல்லும் வழியில் 10 கி.மீ. இல் உள்ள தலம்.

கேரளத்தில் உள்ள முருகன் தலங்களில் சிறப்பானது. இங்கு ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி கோவில் உள்ளது. கிருஷ்ணன் தனிச் சந்நிதி.

சஷ்டி சிறப்பாகக் கொண்டாடப்படுகின்றது. தைப் பூசமன்று காவடி எடுப்பது மிகச் சிறப்பான விழாவாகும்.

## 225. கீழையூர்

திருச்சியிலிருந்து அரியலூர் செல்லும் வழியில் சுமார் 50 கி.மீ. தூரத்தில் உள்ளது. இதை 'மன்னு பெரும் பழுவூர்' என்பர். இங்கு ஒரே திருச் சுற்றில் இரு கோவில்கள் உள்ளன. ஒன்று அருணாசலேசுவரர். மற்றொன்று அகஸ்தீசுவரர்.

அகஸ்தீஸ்வரத்தில் கருவறையின் பின்புறம் உள்ள புரையில் முருகப் பெருமான் நின்ற நிலையில் காட்சி தருகின்றார். 4 திருக்கரங்களில் முன் வலக்கை அபய முத்திரையும், இடக்கை ஊரு முத்திரையும் பின் வலக்கை சக்தியும், இடக்கை வச்சிரமும் கொண்டுள்ளன வச்சிரத்தின் அடிப்பாகம் மணிபோல் அமைந்துள்ளது.

மார்பில் மாலைகளும் சன்ன வீரமும், கைகளில் கடகங்கள், தோள்களில் லாகு வலயங்கள் இடுப்பில் கடிபந்தம் போன்ற அணிகலன்களுடன் மலரால் அலங்கரித்த கிரீடமும் கொண்டு எழிலார்ந்த கோலம் கொண்டுள் ளார்.

அருணாசலேசுவரத்தின் கருவறையின் பின்புறம் உள்ள புரையில் முருகப் பெருமான் அமர்ந்த நிலையில் சுகாசனத்தில் காட்சி தருகின்றார். முன் வலக்கை அபய முத்திரையும் இடக்கை தொடை மீதும், பின் வலக்கை வச்சிரமும்; இடக்கை சக்தியும் கொண்டு தலையில் மணிக்கிரீடமும் பின்னால் திருவாசியும் உள்ளன.

இங்குள்ள மீனாட்சி சுந்தரேசுரர் திருக்கோயிலின் பிரகாரத்தின் மேல புறம் முருகப் பெருமான் சந்நிதி உள்ளது. நின்ற திருக்கோலத்தில் நான்கு திருக்கைகளுடன் காட்சி தருகின்றார். முன் வலக்கை அபய முத்திரையுட னும் இடக்கை ஊரு முத்திரையுடனும் காணப்படுகின்றது. பின் வலக்கை யில் சக்தி இருக்க பின் இடக்கையில் கோழியைப் பிடித்துள்ளார். வேழ, வேட மங்கையர் தனியாக உள்ளனர். வாகனமான மயில் இல்லை.

தன் கையில் கோழி ஏந்திய நான்கு திருக்கரங்களை உடைய முருகப் பெருமான் அழகிய அரிய படைப்பாகும்

## 226. கீழ்வேளூர்

திருவாரூர் - நாகப்பட்டினம் வழியில் திருவாரூருக்குக் கிழக்கே 11 கி.மீ. தூரத்தில் உள்ளது. இப்போது இது 'கீவளூர்' என வழங்கப் பெறுகின்றது.

குமாரவேளுக்குத தேவலோகத்தில உள்ள ஊர் 'மேலவேளூர்' என்றும் பூலோகத்திலுள்ள ஊரைக் 'கீழ்வேளூர்' என்றும் அழைத்ததாகப் புராணம். கீழ் வேள்வி ஊர் கீழ் வேளூர் ஆனது.

சோழ மன்னன கோச்செங்கணான் கட்டிய 70 மாடக் கோவில்களில் ஒன்று. சூரபத்மனைச் சம்ஹரித்த வெற்றி வேலாயுதம் தம்மைச் சூழ்ந்த வீரஹத்திகளை நீக்க இத்தலம் வந்து நவலிங்க பூஜையும், துவாரலிங்க பூஜையும் செய்து தவம் இருந்தார். மஞ்சளால் பிடித்து வைத்த பிள்ளை யாரே மஞ்சாடி விநாயகர்.

முருகப் பெருமான் பிரதிஷ்டை செய்த நவலிங்கங்கள் கடம்பனூர், ஆழியூர், இளங்கடம்பனூர், வல்லமங்கலம், பட்ட மங்கலம், தேயூர் முதலிய இடங்களில் உள்ளன.

முருகப் பெருமான் பூஜையைச் செய்ய விடாமல் தடுத்த வீரஹதத்திகளை 5 திக்குகளில் காவல் புரிந்த அம்மை அஞ்சுவட்டத்தம்மை என்னும் காளி உருவில் வந்து விரட்டினார். அவர் சந்நிதி முருகன் சந்நிதிக்கு முன்னே தனியே உள்ளது.

இங்கு முருகப் பெருமான் பாலசுப்பிரமணியராய் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு வடக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார். இவர் பிரம்மச்சாரி கோலத்தில் உள்ளார். செந்தில் முருகன், இந்த முருகன் இருவரும் ஒரே சிற்பியால் செய்யப்பட்டவர்களாகும்.

## 227. குமரகிரி

சேலம் நகரிலிருந்து 1.6 கி.மீ. தூரத்தில் அம்மாப் பேட்டையில் அமைந்துள்ளது.

ஊரின் நடுவே குன்றின் மீது முருகப் பெருமான் திருக்கோவில் ராஜகோபுரத்துடன் அமைந்துள்ளது. தண்டாயுதபாணியாகக் குமரவேல் வடக்கு நோக்கி நின்ற திருக்கோலத்தில் காட்சி தருகின்றார்.

ஸ்ரீலஸ்ரீ கருப்பண்ண சுவாமிகள் பழனிக் கோயில் மலையடிவார முதல் படியில் தவமிருக்க முருகப் பெருமான் வயோதிக உருவெடுத்து வந்து, ''இவ் இலங்கோட்டினை அணிந்து குமரகிரியில் என் பாதங்களின் அடையாளமுள்ள இடத்தில் பிரதிஷ்டை செய்து பணி செய்க'' என அருள்வாக்கு கொடுத்தார். முருகன் திருவருளை எண்ணி வந்து அவ் வாறே குமரக் கடவுளை எழுந்தருளச் செய்துள்ளார்.

ஒரே பிரகாரத்துடன் அமைந்த இக்கோவிலில் இடும்பன், விநாயகர் சந்நிதிகள் உள்ளன.

பங்குனி உத்தரத்தின் போது பத்து நாட்கள் பிரமோற்சவம் சிறப்பாக நடைபெறும்.

## 228. குமரன் மலை

புதுக்கோட்டையிலிருந்து குடுமிடான் மலை செல்லும் வழியில் 16 கி.மீ. தொலைவில் உள்ளது. 'திருப்புல்வயல்' என்ற பெயரும் உண்டு.

குன்றாடும் குமரனின் திருமுன்பு சரவணப் பொய்கை என்னும் திருக்கு ளம் உள்ளது. குமரப் பெருமான் தண்டாயுதபாணியாய் மேற்கு நோக்கி எழுந்தருளியுள்ளார்.

குருபாத தாசர் இப்பெருமாள் மீது 'குமரேச சதகம்' என்னும் சதகத்தி னைப் பாடியுள்ளார்.

''மயிலேறி விளையாடு குகனே புல் வயல் நீடு
மலை மேவு குமரேசனே.''

கார்த்திகை சோமவாரம் சிறப்பு.

கட்டு மலைமேல் அமைந்த கோயில். இங்குச் சிவபெருமான் கேடில் யப்பர், உமை வளமுலை நாயகி. சரவணப் பொய்கை உள்ளது.

அகத்தியர் பூஜித்த லிங்கம் உள்ளது. நடராசப் பெருமான் அகத்தியருக்கு இத்தலத்தில் வலது பாத தரிசனம் கொடுத்தார்.

இத்தல முருகப் பெருமாள் மீது அந்தகக் கவி வீரராகவ முதலியார் பிள்ளைத் தமிழ்பாடியுள்ளார்.

## 229. குமார குப்பம்

விழுப்புரத்திலிருந்து பாண்டிச்சேரி செல்லும் வழியில் அமைந்த தலம். வளவனூர் என்னும் பெயருடன் விளங்குகின்றது. விழுப்புரத்திலிருந்து கிழக்கே 11 கி.மீ.

முருகப் பெருமான் வள்ளி, தேவசேனா தேவி சமேதரராய் மயில் மீது அமர்ந்த கோலத்தில் கிழக்கு நோக்கி எழுந்தருளிக் காட்சி தருகின்றார். சிறிய திருவுருவம். உற்சவர் மூலவர் போன்றே தோற்றம் உடையவர்.

அகத்தியர், வீரபாகு தேவர், முத்துக்குமரன், நின்ற கோலத்தில் காட்சி தரும் முருகன் சந்நிதிகள் உள்ளன. முருகப் பெருமானை வலம் வரும் வழியில் மூல்வர் போன்று செப்பு வார்ப்படத் திருமேனி உள்ளது. இதனை அடுத்து மயிலம் மூலவர் போன்ற உருவத் தோற்றமுடைய மூர்த்தம் காணப்பெறும். (மயிலம் போன்று பெரிய திருவுருவம் அல்ல.

மாதக் கிருத்திகை சிறப்பு.

வண்ணச் சரபம் தண்டபாணி சுவாமிகள் இத்தல முருகப் பெருமான் மீது பாடியுள்ளார்.

## 230. குமார கோயில் - வெளிமலை

நாகர்கோவிலிலிருந்து திருவனந்தபுரம் செல்லும் வழியில் 10 கி.மீ. தொலைவில் உள்ளது. 38 படிகள் ஏறி குன்றின் மீதுள்ள திருக்கோயிலை அடைய வேண்டும்.

முருகப் பெருமான் கிழக்கு நோக்கி நின்ற கோலத்தில் 8.5அடி உயரத்துடன் அருள்காட்சி தருகின்றார். வழக்கமாக வலப்பக்கம் இருக்கும் வள்ளி தேவி இங்கு இடப்பக்கத்தில் 6 அடி உயரத்துடன் காட்சி தருகின்றார். தெய்வயானை இல்லை. காங்கேயத்திற்கு அருகிலுள்ள சிவன் மலையிலும் தெய்வயானை இன்றி வள்ளி தேவியே உள்ளார். இவரது வலது கரம் அபயமாகவும் இடது கரம் வரதமாகவும் விளங்குகின்றது.

இத்திருவுரு சிற்ட சாத்திரத்தில் கூறிய - குமாரசாமி வடிவத்தினின்று மாறுபட்டுள்ளது. பெருமானுக்கு அபிஷேக அலங்காரம் செய்யச் சிவாச்சாரியார் ஏணி மீது ஏறியே செய்கிறார்.

3 கி.மீ. இல் திருமண மண்டபமும் வள்ளி எழுந்தருளிய குகை, தினைப்புனம், வள்ளி சோலை, கிழவன் சோலை ஆகிய தலங்களும் உள்ளன. வள்ளியை முருகப்பெருமான் இங்கேதான் திருமணம் செய்தார். வள்ளி திருமணம் பெரிய விழாவாகக் கொண்டாடப்படுகின்றது.

## 231. குழூர்

திருச்சூர் மாவட்டத்தின் தெற்குக் கோடியில் ஐராணிக் குளம் என்ற தலம் உள்ளது. அதற்குக் கிழக்கே இத்தலம் உள்ளது.

பெரிய கோவில். இங்குள்ள சுப்பிரமணியர் 5.5 அடி உயரம் உள்ளவர். இங்கு பஞ்சாமிர்த அபிஷேகம் சிறப்ப. தென்பக்கப் பிரகாரத்தில் சிவன், பகவதி, கணபதி சந்நிதிகள் உள்ளன.

ஐராணிக் குளம் ஆலயத்தில் சிவன், பார்வதி, சுப்பிரமணியர் சோமாஸ் கந்த மூர்த்தியாய் எழுந்தருளியுள்ளனர். இப்போது சிதலமடைந்த நிலையில் உள்ளது.

## 232. குருந்தமலை

கோவை மாவட்டம் காரமடையிலிருந்து 6.4 கி.மீ. தூரத்தில் உள்ளது. குருந்த மரங்கள் நிறைந்ததால் குருந்தமலை என்பர். தலமரம் குருந்தமரம்.

தந்தைக்கு உகந்தது திருமுது குன்றம். குமரனுக்கு உகந்தது இளங் குன்றமான குருந்த (இளமையான) மலை. நான்கு புறமும் பெரிய மலைகள் சூழ நடுவில் இளமையான மலையாகக் காட்சி தருகின்றது.

இங்கு முருகப் பெருமான் குழந்தை வேலாயுத சுவாமி என்னும் திருப்பெயரில் காட்சி தருகின்றார். 5 நிலைகளும் சிற்பங்களும் கொண்ட ராஜகோபுரத்துடன் விளங்குகின்றது.

120 அடி உயர இம்மலையில் 180 படிகள் உள்ளன. இரு சுனைகள் சுகபுஷ்கரணி, அனுமந்தச் சுனை என்னும் பெயர்களில் உள்ளன.

அனுமந்தச் சுனையின் எதிரே அனுமன் கோயில் உள்ளது. அனுமன் சஞ்சீவி மலையில் ஒரு காலும் இங்கு ஒரு காலும் வைத்ததாக ஐதீகம். இங்கு அனுமன் 3 அடி உயரமும் வலக்கை ஓங்கிய நிலையிலும் இடக்கையில் நாளத்துடன் தாமரை மொட்டும் உள்ளது. கையில் கடகமும் விரலில் மோதிரமும் இடையில் சலங்கையும் வாலில் மணியும் காணப்படுகின்றது.

கருவறையில் ஞானத் தண்டாயுதபாணியாக 4 அடி உயரமுள்ள முருகப்

பெருமான் நின்ற திருக்கோலத்தில் மேற்கு நோக்கிக் காட்சி தருகின்றார். அருகிலுள்ள - அகத்தியர் வணங்கிய மூர்த்தி இவர். இவருக்குச் செய்யும் இராஜ அலங்காரமும் வேட அலங்காரமும் சிறப்பு.

மூலவரின் திருவடிகளில் மார்ச் மாதம் 21, 22, 23 ஆகிய தேதிகளில் கதிரவன் தன் ஒளிக் கிரணங்களைப் பாய்ச்சி பாத பூசை செய்கிறான்.

இங்கு அறுகோண வடிவ அறுமுகச் சுனையில், மயில் வடிவான மயில்சுனை உள்ளன. இடப்பக்கம் ஆதியில் சிவலிங்க வடிவில் காட்சி தந்த மூலவர் உள்ளார்.

இங்கு காணாசசுனை என்னும் ஒரு சிறு பொந்து உள்ளது. அதில் குறுகிய பாத்திரத்தால் நீர் எடுக்கலாம். மீதிச் சுனை கண்ணுக்குத் தெரிவதில்லை.

திருக்கார்த்திகை சோமவாரம், தைப்பூசம், மாதக் கிருத்திகை சிறப்பு. தைப் பூசத்தை ஒட்டிய பிரமோற்சவம் சிறப்பாகும்.

## 233. குனறத்தூர்

சென்னையிலிருந்து 30 கி.மீ. பல்லாவரத்திலிருந்து 5 கி.மீ. தொலைவில் உள்ளது.

சிறிய மலை மீது அமைந்த திருக்கோயில். 83 படிகளைக் கொண்டது. முருகப் பெருமான் வள்ளி, தேவசேனா தேவி சமேதரராய் கல்யாண மூர்த்தியாய் வடக்கு நோக்கிக் காட்சி தருகின்றார். அடிவாரத்தில் சோழர் காலச் சிவாலயமும், பெருமாள் கோயிலும் உள்ளன.

சேக்கிழார் பிறந்த புண்ணிய தலம். வடநாகேஸ்வரம் சிவாலயத்திலும் முருகப் பெருமான் எழுந்தருளியுள்ளார். குன்றக்குடிக்கு உரிய திருப்புகழ் பாடல் இத்தலத்திற்குரியன என்பர் சிலர்.

## 234. கோயமுத்தூர் - சுக்கிரவாரப்பேட்டை

கோவை நகரின் மையப் பகுதியில் அமைந்த தண்டாயுதபாணித் திருக்கோயில். ஸ்ரீ பால தண்டாயுதபாணி கிழக்கு நோக்கி எழுந்தருளியுள் ளார். முருகப் பெருமானின் வலப்புறம் ''கல்வி விநாயகர்'' காட்சி தருகிறார்

கோயிலின் நுழைவாயிலின் அருகே நவக்கிரக சந்நிதி கங்கை கொண்ட சோழபுர அமைப்பினைப் போல அமைந்துள்ளது.

அமாவாசை, சஷ்டி, கிருத்திகை சிறப்பாகும்.



## 235. சாயாவனம்

சீர்காழிக்குத் தென்கிழக்கே 15 கி.மீ. தொலைவில் உள்ளது. காசிக்குச் சமமான ஆறு திருத்தலங்களுள் ஒன்று. இந்திரன் வழிபட்டதலம். இறைவன் இந்திரேசுவரர், சாயாவனேசுவரர். இறைவி: குயிலினு நன்மொழியம்மை. தீர்த்தம்: காவிரி, சங்கமுடி தீர்த்தம், ஐராவதத் தீர்த்தம்.

இங்கு முருகப் பெருமான் வில்லேந்திய அபூர்வ வடிவில் காட்சி தருகின்றார். ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு அருகில் மயில் விளங்கக் காட்சி தருகின்றார். ஒரு கரத்தில் கோதண்டமும், அம்பு ஒரு கரத்திலும், வில் ஒரு கரத்திலும், கொடி ஒரு கரத்திலும் விளங்குகின் றன. இத்திருமேனியின் கீழ் ''திருச்செந்திலாண்டவன்'' எனப் பொறிக்கப் பட்டுள்ளது.

திருச்செந்தூர் கோயிலைச் சார்ந்த இத்திருவுருவினை வெளிநாட்டுக்குக் கடத்திச் சென்றபோது கடலில் புயலில் கப்பல் சிக்கவே இத்திருவுருவினை காவிரிப்பூம்பட்டினக் கரையில் போட்டுச் சென்றதாகவும் அதனை இத் திருக்கோயிலில் வைத்துள்ளதாகவும் கூறுவர்.

## 236. சிவகவகை

பங்களூர் பூனே ரயில் பாதையில் டாப்ஸ்பெட் ரயில் நிலையத்திலிருந்து 6 கி.மீ. தூரத்தில் உள்ளது.

இங்குள்ள சிவகங்கை மடாதிபதி ஸ்ரீ சச்சிதானந்த அபிநவ சுப்பிரமணிய பாரதி சுவாமிகள் மடத்தின் அருகில் சிறு குன்றின் மீது தண்டாயுதபாணி யாக எழுந்தருளியுள்ளார்.

இக்குமரன் சுவாமிகள் கனவில் தோன்ற, ஒருநாள் மலையில் செல்லும் வழியில் ஒரு பாறைக்கு அருகில் புற்றில் நாகவடிவமும் கீழே இரு திருவடிகளும் இருந்ததைக் கண்டார். பின் அப்புற்று இறுகி விட்டது. அங்கு தண்டாயுதபாணியை பிரதிஷ்டை செய்துள்ளார். இவர் ஆண்டிக் கோலத் தில் காட்சி தருகிறார்.

அருகிலுள்ள பாறையில் சுயம்புவாக விநாயகர் தோன்றியுள்ளார்.

## 237. சிரவை கௌமார மடம்

கோவையிலிருந்து சத்தியமங்கலம் செல்லும் வழியில் 6 கி.மீ. இல் உள்ள கணபதியை அடுத்த அத்திப் பாளையத்திலிருந்து 3 கி.மீ. இல் உள்ளது.

இங்குள்ள தண்டபாணிக் கோயில் கௌமார மடத்தைச் சேர்ந்தது. முருகப் பெருமான் தண்டு ஊன்றிய கோலத்தில் காட்சி தருகின்றார். பெருமுக்கு வேட்டுவ வடிவம், ராஜ அலங்காரம், பெண் அலங்காரம்

செய்வர். இருபுறமும் இரு தேவியரும் எழுந்தருளியுள்ளனர். உற்சவர்: குமரகுருபரர்.

இவர் சிறந்த வரப் பிரசாதி.

## 238. சின்னாளப்பட்டி

மதுரை திண்டுக்கல் பாதையில் அமைந்த தலம்.

இத்தலப் பெருமான் சதுர்முகப் பெருமானாகக் காட்சி தருகின்றார். இது தனிச் சிறப்புடையது. மயில் வாகனனாகிய முருகப் பெருமான் நான்கு திருமுகமும் பன்னிரு திருக்கரங்களும் கொண்டு மயில் மீது எழுந்தருளி அருளாட்சி புரிகின்றார்.

பிரமனைத் தண்டித்து பிரமனின் படைப்புத் தொழிலை முருகப் பெருமானே மேற்கொண்ட போது நான்முக முருகன், சதுர்முக முருகன், பிரணவ முருகன் என்ற நாமங்களைப் பெற்றார். அப் பெருமானே இங்கு கோயில் கொண்டுள்ளதாக ஐதீகம்.

இக்கோயிலில் வேல் வடிவில் ஜோதி ஒன்று தோன்றுவதாகவும் அது பழனி மலையிலிருந்து வருவதாகவும் ஐதீகம்.

## 239. ஸ்ரீ சுப்பிரமணியம்

கர்நாடக மாநிலம் மங்களூருக்குத் தெற்கே சுமார் 104 கி.மீ. தூரத்தில் உள்ளது. புத்தூர் வழியாக, அல்லது தர்மஸ்தலாவிலிருந்து உப்பினங்குடி வழியும் செல்லலாம்.

மலை உச்சியில் குமரனின் இருபாதங்கள் செதுக்கப்பட்டுள்ளன. அவற்றிலிருந்து குமார தாரா நதியும் தர்ப்பண நதியும் உற்பத்தியாகின்றன. அவ்விரு நதிகளும் சுப்பிரமணியாவைச் சுற்றி ஓடுகின்றன. இம்மலையில் சண்முக லிங்கங்கள் கிடைக்கும். அதிலுள்ள ஆறு பட்டைகள் ஆறு முகங்களாகக் கருதப்படுகின்றன. அதனைச் சாளக்கிராமங்கள் போலவும் சிவலிங்கம் போலவும் வைத்து வழிபடலாம்.

மேற்கு நோக்கிய திருக்கோயில். இங்குள்ள ஆதி சுப்பிரமணியாவில் சுப்பிரமணியர் பிரம்மஹத்தி தோஷம் நீங்கத் தவம் இருந்ததாக ஐதீகம். இங்கு ஒரு பெரிய பாம்புப் புற்றுக்கு ஆராதனை உண்டு. புற்று மண் பிரசாதமாகும். இது சகல நோய்களையும் தீர்க்கும் சக்தி வாய்ந்தது. பாம்பு விஷம் நீங்க இதனைக் கடிவாயில் தேய்த்தால் போதும். நீரில் அறைத்துக் குடித்தால் சகல நோய்களும் நீங்கும். அந்தப் புற்றில் கருநாகம் ஒன்று உள்ளது. எனவே இத்தலத்தில் யாரையும் பாம்பு கடித்ததில்லை. கடித்தாலும் விஷம் ஏறாத சிறப்பு பெற்றது.

கருவறையில் சண்முகப் பெருமான் மயில் மீது அமர்ந்திருக்கிறார். கீழே

வாசுகி நாகம் உள்ளது. அதன் கீழே பல சாளக்கிராமங்கள் உள்ளன. புற்று ஒன்று உள்ளது. இங்கும் புற்று மண்ணே பிரசாதம்.

ஒரு கி.மீ. இல் உள்ள பிலத்துவாரத்தில் உள்ள சுரங்கப் பாதையில் வாசுகி கருடனிடமிருந்து தப்பி தவம் இருந்ததாகவும் சுப்பிரமணியர் வாசுகியைக் காத்து தம்முடன் வைத்துக் கொண்டதாகவும் ஐதீகம்.

இத்தலம் பழநியைப் போல் புனிதம் மிக்கதாகக் கருதப்படுகின்றது. இங்குக் குமரக் கடவுளின் அருள் சக்தி பரிபூரணமாக உள்ளதாகவும் அவரைப் பிரார்த்தித்தால் மன அமைதியும் உடல் நலமும் ஏற்படும் என்பது உண்மை.

இங்கு நடைபெறும் நாகசாந்தி, சர்பப் பூஜை விசேஷம். கார்த்திகை துவாதசியிலிருந்து மார்கழி அமாவாசை வரை இங்கு உற்சவம் நடைபெறு கின்றது.

## 240. சுருளிமலை

மதுரையிலிருந்து கம்பம் வழியாகச் செல்ல வேண்டும். சுமார் 160 கி.மீ. சுருளிப்பட்டி என்னும் கிராமத்திலிருந்து 3.2 கி.மீ. தூரத்தில் உள்ளது.

கோவில் அமைந்த பகுதி கைலாசப் படவு என அழைக்கப்படுகின்றது.

தேவர்கள் சனிபகவானின் கொடுமையிலிருந்து விடுபட இத்தல முருகப் பெருமானை வணங்கி வேண்டினர். சனி பகவானும் முருகப் பெருமானி டம் தன் அன்பர்களைத் தன் திசையும் தெசாபுத்தியும் உள்ள காலத்தில் துன்புறுத்தாதிருப்பதாகக் கூறியதாக ஐதீகம்.

இக்கோயில் இயற்கையான குகையில் அமைந்துள்ளது. முருகப் பெரு மான் ஆண்டிக் கோலத்தில் குகன், சுருளியாண்டி, சுருளி வேல் என்னும் திருநாமம் பெற்று விளங்குகின்றார். விநாயகர், சிவலிங்கம், சந்தான கிருஷ்ணன், வீரபாகுத் தேவர் முதலியோர் திருவுருவங்கள் உள்ளன.

வள்ளி திருமணத்திற்காக நம்பிராஜன் முருகப் பெருமானுக்குச் சீதன மாகக் கொடுத்த தலங்களில் ஒன்று.

சுருளி தீர்த்தத்தில் நீராடினால் தீராத நோய்களும் தீரும்.

இம்மலையின் அடிவாரத்தில் சிவபெருமானுக்கும் வீரநாராயணப் பெரு மாளுக்கும் சிறிய கோயில்கள் உள்ளன.

இங்கு ஒரு ஆள் மட்டுமே தவழ்ந்து செல்லும் வகையில் குகை ஒன்று உள்ளது. அதில் பிருங்கி முனிவர் பூஜித்த சிவலிங்கம் உள்ளது.

ஆடி அமாவாசை சிறப்பு. ஆலயத்தின் கிழக்கே சப்த கன்னியர் சுனை உள்ளது.

## 241. செங்கனாச்சேரி

திருவல்லாவிலிருந்து கோட்டயம் செல்லும் வழியில் 5 கி.மீ. சென்று இடப்பக்கம் 4 கி.மீ. செல்ல வேண்டும்.

இங்கு 'பெருந்ந' சுப்பிரமணியர் ஆலயம் உள்ளது. மிகப் பழைமையான கோயில். சுமார் 1200 ஆண்டுகட்கு முற்பட்டது. சிலப்பதிகாரத்தில் 'பெருந்நேதில்' என இத்தலம் குறிப்பிடப்பட்டுள்ளது.

இத்தலக் குமரப் பெருமான் சிறந்த வரப்பிரசாதி.

நம்பூதிரி ஒருவர் பழநி சென்ற போது பாலசுப்பிரமணியர் வடிவில் ஒரு ஜோதி தரிசனமாகியது. அப்போது அசரீரி ஒன்று "கொடுந்துறை ஆற்றில் தன் விக்கிரகம் இருப்பதாகவும் அதை எடுத்துப் பிரதிஷ்டை செய்து வணங்கினால் பழநியில் தரிசனம் செய்த பலன் கிட்டும்" என்றது.

பிரதிஷ்டை செய்த நாளான பங்குனி மாதம் 16-ம் தேதியன்று மூலவர் தலைமுதல் கால்வரை சூரிய ஒளி ஒரு நிமிடம் படுகின்றது.

சஷ்டி சிறப்பாகக் கொண்டாடப்படுகின்றது.

## 242. செட்டிக் குளம்

திருச்சியிலிருந்து பெரம்பலூர் செல்லும் வழியில் உள்ளது. இத்தலம் வடபழனி என்றும் அழைக்கப்படுகின்றது. இங்கு முருகப் பெருமான் ஆண்டிக் கோலம் பூண்டு சிறிய குன்றின் மீது மேற்கு நோக்கி எழுந்தருளி யுள்ளார். குன்றின் மீது ஏற மேற்கு, வடக்கு ஆகிய இருதிசைகளிலும் படிகள் உள்ளன. மேற்குப் பக்கம் 255 படிகள் உள்ளன.

பழனியைப் போன்று இங்கும் காவடியும் பால்குடமும் எடுப்பதனைச் சிறப்பாகக் கருதுகின்றனர். இதனை 'வடபழனி' என அழைக்கின்றனர்.

பங்குனி உத்தரம் சிறப்பாகக் கொண்டாடப்படுகின்றது.

## 243. செந்துறை

திருச்சி மாவட்டம் ஜெயம்கொண்ட சோழபுரத்திலிருந்து 25 கி.மீ. தூரத்தில் உள்ளது.

இயற்கை வளம் கொழிக்கும் சோலையின் நடுவே அமைந்த கோயில், மடத்துக் கோயில், பழனியாண்டார் கோயில் என்னும் பெயர்களும் பெற்றது.

மெய்வரத் தம்பிரான் என்னும் மகானின் சமாதி உள்ளது. பங்குனி உத்தர பெருவிழாவும், தைப்பூச விழாவும் சிறப்பாகக் கொண்டாடப்படுகின்றது.

## 244. சென்னிமலை (சேலம்)

சேலம் - கடலூர் புகை வண்டிப் பாதையில் காட்டுக் கோட்டை புகை வண்டி நிலையம் எதிரே உள்ளது. இதனை வடசென்னை மலை என்பர்.

சிறமலையின் முகட்டில் அமைந்த கோயில்.

இங்கு முருகப் பெருமான் பாலமுருகனாக மயில் மீது நின்ற திருக்கோலத்தில் மேற்கு நோக்கி எழிலோடு எழுந்தருளியுள்ளார்.

அமாவாசை, கிருத்திகை சிறப்பான நாட்களாகும்.

முருகப் பெருமானுக்கு இங்குப் பங்குனி உத்தர விழா சிறப்பாகக் கொண்டாடப்படுகின்றது.

## 245. சேவூர்

அவிநாசியிலிருந்து மொண்டிப் பாளையம் அன்னூர் செல்லும் வழியில் 8 கி.மீ. இல் உள்ளது.

இதனை மாட்டூர், ரிஷபபுரி என்பர்.

இங்குள்ள மொக்கனீசுவரம் திருக்கோவிலில் சொக்கர், மீனாட்சி, விநாயகர், முருகர் எழுந்தருளியுள்ளனர்.

இங்கு முருகப் பெருமான் தண்டபாணியாய் எழுந்தருளியுள்ளார். ''நாராலே தோள் நீராலே'' என்னும் திருப்புகழ் இத்தலத்திற்குரியது என்பாரும் உண்டு.

ஆறுமுகப் பெருமான் சந்நிதியை அடுத்து அறப்பெரும் தேவி சந்நிதி உள்ளது.

## 246. தண்டலைச்சேரி

திருத்துறைப் பூண்டி நிலையத்திற்கு வடக்கே 3 கி.மீ. மணலி புகை வண்டி நிலையத்தின் அருகில் அமைந்த தலம். இத்தலம் தண்டலை நீளெறி. இது தண்டலைச்சேரியாயிற்று.

கூர்ம அவதாரம் கொண்ட விஷ்ணு பெருமான் அகங்காரத்துடன் கடலைக் கலக்க அக்கூர்மத்தின் அகத்தினை அடக்கி அதன் ஓட்டை அணிந்தருளிய தலம். இத்தல இறைவன்: நீணெரி நாதேசுவரர். இறைவி: ஞானாம்பிகை. தலமரம்: குருஞ்சுமரம். (இவைகளில் ஒரே இதழ் உள்ளது.)

இங்கு ஆறுமுகப் பெருமான் பன்னிரு திருக்கரங்களுடன் இரு தேவியர் சூழக் காட்சி தருகின்றார். திருப்புகழ் வைப்புத் தலங்களுள் ஒன்று.

## 247. தாராசுரம்



கும்பகோணத்தை அடுத்த புகை வண்டி நிலையம். தாரன் என்னும் அசுரன் தவம் இருந்ததனால் தாராசுரம் எனப் பெயர் வந்தது.

துர்வாசர் சாபத்தினால் கறுப்பு நிற மாகிய ஐராவதம் இங்கு வழிபட்டு மீண்டும் வெள்ளை நிறம் பெற்றது. எனவே இறைவன் ஐராவதேசுவரர் எனப் பெயர் பெற்றார். இறைவி: தேவநாயகி. அரிய கலைப்படைப்பு கள் நிறைந்த திருக்கோயில். இங் குள்ள மண்டபம் ரதம் போல் சக்கரங்க ளுடன் அமைக்கப்பட்டுள்ளது.

இங்குக் கார்த்திகேயன் ஆறு திருமு கங்களுடன் ஆறு திருக்கரங்களில் ஒன்று அபய முத்திரையுடனும் மீதி ஐந்து கரங்களில் ஜபமாலை, கத்தி, வாள், கேடயம், கோழி ஆகியவை ஏந்தியும் மணி மகுடத்துடன் மயில் வாகனனாகக் காட்சி தருகின்றார்.

## 248. திண்ணியம்

திருச்சியிலிருந்து மகாஜனம் செல்லும் வழியில் உள்ளது. திருச்சியிலி ருந்து லால்குடி, காட்டூர் பேருந்துகளிலும் செல்லலாம்.

இத்தலச் சிவபிரான்: கோடீசுவரர், இறைவி: பெரியநாயகி. இப்போது இத்திருக்கோயில் அருள்மிகு சுப்பிரமணிய சுவாமி திருக்கோயில் என்றே அழைக்கப்படுகின்றது. இங்கு முருகப் பெருமான் தெற்கு நோக்கி உள்ளது சிறப்பாகும்.

இங்கு முருகப் பெருமான் முன்னும் பின்னுமாக ஆறு திருமுங்களும் பன்னிரு திருக்கரங்களுடனும் சுகாசனத்தில் மயில் மீது அமர்ந்துள்ளார். அவரது வலக் கரங்களில் அபய முத்திரையும் சக்தி, சூலம், அங்குசம்,

அம்பு, வாள் காணப்படுகின்றன. இடக்கரங்களில் வரத முத்திரையும் வச்சிரம், கோழிக் கொடி, பாசம், வில், கேடயம் காணப்படுகின்றன.



வள்ளி, தெய்வயானை இருவரும் தனித்தனியே மயில் மீது அமர்ந்துள்ளனர். மூவரும் மூன்று மயில்கள் மீது அமர்ந்து காணப்பெறுவது அரிய காட்சியாகும்.

இதுபோன்ற காட்சியினைக் குன்றக்குடியிலும் காணலாம். வேறு எங்கும் இவ்வாறு காட்சி தருவதில்லை. மாதக் கார்த்திகை சிறப்பு. பங்குனி உத்தரத்தன்று காவடிகள் எடுப்பர்.



## 249. திருக்கண்டியூா

தஞ்சையிலிருந்து திருவையாறு செல்லும் வழியில் திருவையாறுக்குத் ற்கே 2 கி.மீ. தூரத்தில் உள்ளது.

அட்ட வீரட்டத் தலங்களில் ஒன்று. பரமனின் தலைகளில் ஒன்றைக் ாளி எடுத்த தலம்.

வீரட்டேசுவரர் கருவறையின் நுழைவாயில் இருமருங்கும் முருகப் ருமான் எழுந்தருளியுள்ளார். இது அபூர்வப் படைப்பாகும். வலப்புறம் ளையாருக்குப் பதில் முருகனே எழுந்தருளியுள்ளார்.

இங்கு முருகப் பெருமான் வலக்கையில் ஜபமாலையும் இடக்கரத்தில் ஜ்ர சக்தியும் கொண்டு 'ஞான சக்தீதரராக'க் காட்சி தருகின்றார். இவரை ானஸ்கந்தர்' என்று அழைக்கின்றனர்

மாசி மாதம் 13, 14, 15 ஆகிய நாட்களிடல் சூரியன் தன் ஒளிக் ணங்களை வீரட்டேசுவரர் திருமேனியில் சாத்தி வழிபடுகின்றார்.

## 250. திருக்கச்சூர்

செங்கல்பட்டை அடுத்த சிங்க பெருமாள் கோவிலிலிருந்து 2.5 கி.மீ. தாலைவில் உள்ளது.

இத்தலத்தின் தலமரம் ஆலமரம் ஆதலால் இதனை ஆலக் கோயில் ன்பர். கச்சபம் - (ஆமை) பூசித்ததனால் கச்சூர் ஆயிற்று.

சுந்தரமூர்த்தி சுவாமிகள் பசியாய் இருந்தபோது இத்தலச் சிவபெருமான் டுகள் தோறும் சென்று அன்னம் யாசித்து சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்குக் காடுத்த தலம். இத்தல இறைவி: அஞ்சநா க்ஷியம்மை. இறைவன்: ச்சபேசுவரர் தீர்த்தம்: கூர்ம தீர்த்தம். அமுதம் திரளுவதற்காக விஷ்ணு பருமாள் கூர்ம வடிவெடுத்துப் பூசித்தார் பிரகாரத்தில் விருந் திட்ட ஈசுவர் ந்நிதி உள்ளது.

இங்கு முருகப் பெருமான் ஒரு முகமும் நான்கு திருக்கரங்களும் காண்டு இருதேவியருடன் எழுந்தருளியுள்ளார்.

இத்தலம் திருப்புகழ் வைப்புத்தலம்.

இவ் ஆலயத்திற்கு ½ கி.மீ. இல் மருத்தீசர் ஆலயம் உள்ளது. தேவி ருணீக்கித் தாயார். அருகிலுள்ள மலை ஔஷதகிரி (ஆலக் கோயில்) னப்படும். இவ்வாலயத்திற்குச் செல்லும் வழியில் தாலமூல விநாயகர் கருக்கடி விநாயகர்) உள்ளார். அருகில் இரந்திட்ட ஈசுவரர் சந்நிதி ள்ளது.

இத்தலத்தின் பைரவர் சந்நிதி சிறப்பு. சித்திராபவுர்ணமி அன்று நடை பறும் நடனம் சிறப்பு.

## 251. திருக்களர்

திருத்துறைப்பூண்டி புகைவண்டி நிலையத்திலிருந்து மன்னார்குடி செல்லும் வழியில் 10 கி.மீ. சென்று தீவட்டிக்கரை செல்லும் வழியில் 4 கி.மீ. செல்ல வேண்டும்.

பராசர முனிவரும் காளவ முனிவரும் பூசித்த தலம். துருவாச முனிவருக்கு இத்தல நடராஜப் பெருமான் திருநடனக் காட்சி கொடுத்தார். இத்தலம் பாரிஜாத வனம் எனப்படும். தல விநாயகர் வலம்புரி விநாயகர். இத்தலச் சிவபிரான்: களர்முளை நாதேசுவரர். இறைவி: அழகேசுவரியம்மை. தீர்த்தம்: துருவாச தீர்த்தம்.

இங்கு ஆறுமுகப் பெருமான் பன்னிரு திருக்கரங்களுடன் மயில் மீது அமர்ந்து காட்சி தருகின்றார். திருப்புகழ் வைப்புத் தலங்களுள் ஒன்று.

## 252. திருக்குமரன் கூடம்

திருச்சூரை அடுத்த ஐயன்தோள் கார்த்தியாயினி கோவிலிலிருந்து 2 கி.மீ. தூரத்தில் உள்ளது.

இங்குள்ள சுப்பிரமணியர் பழனியாண்டியாக எழுந்தருளி அருள் பாலிக்கின்றார்.

ஆலயத்திற்குத் தென்புறம் ஏரியைப் போன்ற பெரிய திருக்குளம் உள்ளது.

சஷ்டி, தைப்பூசம் சிறப்பாகக் கொண்டாடப்படுகின்றது.

ஐயன் தோள் கார்த்தியாயினி சிறந்த வரப்பிரசாதி. பரசுராமர் பிரதிஷ்டை செய்த 108 பகவதித் தலங்களில் ஒன்று.

## 253. திருக்கோகர்ணம்

புதுக்கோட்டையிலிருந்து 1.5 கி.மீ. தொலைவில் உள்ளது. மலையடிவாரத்தில் கோகர்ணேசுவரர் - பிருகதாம்பாள் கோயில் உள்ளது. ஒரே கற்பாறையில் குடைந்து அமைந்த கர்ப்பக்கிரகம். இங்கு கங்காதரர் 6 அடி உயரத்தில் யோகநிலையில் காணப்படுகின்றார்.

குடவரையின் மேலே சுனையின் அருகில் சுப்பிரமணியர் கோயில் உள்ளது. அருகே இரு சரி நேரான பாதைகள் உள்ளன. அவை தெய்வத் தேர்ச் சக்கரத்தால் ஏற்பட்டவை. இங்கு வகுளேசுவரர், மங்கள நாயகி சந்நிதி உள்ளது. இங்குள்ள உற்சவ அம்மன் திருவுரு மிகவும் அழகானது.

பிருகதாம்பாள் சந்நிதியின் பின்புறம் 4 அடி உயரமுள்ள ஆறுமுகப் பெருமான் பெரிய திருவாசி மயிலின் மீது அமர்ந்து காட்சி தருகின்றார்.

மயிலின் செதில்களும், தோகையிலுள்ள கண்களும் அருமையாகச் செய்யப்பட்டுள்ளன. மயிலின் வாய் படமெடுத்தாடும் பாம்பைக் கவ்வியபடியுள்ளது. பெருமான் அபய, வரத ஹஸ்தங்களுடன் பிற கரங்களில் ஆயுதங்களுடன் காட்சி தருகின்றார். அருகில் திரிபங்கி வடிவில வள்ளி தெய்வயானையர் உள்ளனர்.

மலைமேலுள்ள சுப்பிரமணியர் கோயிலில் பழனியாண்டவர், சரஸ்வதி, லெட்சுமி, துர்க்கை சந்நிதிகள் உள்ளன.

## 254. திருக்கைச் சினம்

திருவாரூர் திருத்துறைப் பூண்டி பேருந்து வழியில் 19 கி.மீ. தொலைவில் உள்ளது.

இந்திரனின் கைச்சின்னம் சிவலிங்கத் திருமேனியில் உள்ளதனால் திருக்கைச் சின்னம், திருக்கரச்சின்னம் எனப் பெயர் பெற்றது. மாடக்கோயில் இத்தலச் சிவபிரான்: திருக்கைச்சினநாதர். இறைவி: வெள்வளை நாயகி.

இங்கு ஆறுமுகப் பெருமான் பன்னிரு திருக்கரங்களுடனும் இரு தேவியருடனும் எழுந்தருளியுள்ளார்.

திருப்புகழ் வைப்புத் தலங்களில் ஒன்று.

## 255. திருச்செம்பொன்பள்ளி - செம்பனார் கோயில்

மாயூரத்திலிருந்து 11 கி.மீ. இல் உள்ள புகைவண்டி நிலையம். இறைவன்: சொர்ணபுரீசர், இறைவி: மருவார் குழலியம்மை. சித்திரை மாதம் 7-ம் தேதி முதல் 18-ம் தேதி வரை சூரிய ஒளி இறைவன் மீது விழுகின்றது.

இங்கு முருகப் பெருமான் பிரம்ம சாஸ்தா கோலத்தில் மாறுபட்ட அரிய வடிவாகக் காட்சி தருகின்றார். கருவறையின் பின்புறம் சடாமகுடம் தாங்கி, முன் இரு கைகள் அபய, ஊரு முத்திரையுடனும் பின் இரு கைகளில் அக்கமாலையும் சக்தியும் கொண்டு தவக் கோலத்தில் காட்சி தருகின்றார்.

## 256. திருத்தங்கல்

சிவகாசியிலிருந்து 4 கி.மீ. தூரத்தில் உள்ளது. சாலை ஓரத்தில் சிறு குன்றின் மீது அமைந்த எழில் மிக்க திருக்கோயில். மலை ஏற 51 படிகள் உள்ளன.

கற்பக்கிரகத்தில் தண்டாயுதபாணிக் கோலத்தில் முருகப் பெருமான் கிழக்கு நோக்கி அருள் பாலிக்கின்றார்.

இக்கோவிலின் அருகே தண்டபாணிக் குமரனின் மாமனுக்கும் (பெருமாள்) தந்தைக்கும் (சிவன்) கோயில்கள் உள்ளன.

## 257. திருநெல்வேலி - குறுக்குத்துறை

திருநெல்வேலி தாமிரபரணி ஆற்றின் நடுவே குறுக்குத் துறை சுப்பிரம ணியர் திருக்கோயில் உள்ளது.

இங்குச் சுப்பிரமணியர் வள்ளி தேவசேனாதேவி சமேதரராக எழுந்தருளி யுள்ளார். கோயிலைச் சுற்றி தாமிரபரணி ஆறு ஓடுகின்றது. வெள்ளம் பெருக்கெடுத்து ஓடும்போது சுவாமியைக் கரையில் உள்ள மண்டபத்தில் எழுந்தருளச் செய்வர்.

ஆற்றில் உள்ள பாறைகள் திருவுருவங்கள் அமைப்பதற்குத் தகுதியான சிறந்த கற்களாகும். எனவே திருவுருமாமலை எனப் பெயர் பெற்றது. இதிலிருந்தே திருச்செந்தூர் முருகப் பெருமான் திருவுருவினை 1653-ல் அமைத்தனர். அதனை உருவாக்கும்போது வடமலையப்ப பிள்ளையின் தாயார் அதனை நாடோறும் பூசித்து வந்ததால் அப்பாறை 'ஆச்சிப்பாறை' எனப் பெயர் பெற்றது. அதைத் தொடர்ந்து ஊர் மக்கள் பலரும் பூசிக்க அங்கு கோயில் உருவானது.

திருநெல்வேலியிலிருந்து ஆற்றின் துறைக்குச் செல்ல குறுக்கு வழியாக அமைந்ததால் குறுக்குத் துறை எனப் பெயர் பெற்றது. இங்குச் சித்திரையி லும் ஆவணியிலும் பெருவிழாக்கள் நடைபெறுகின்றன.

## 258. திருநெல்வேலி சாலைக் குமாரசாமி

நெல்லை - பாளையங்கோட்டை சாலையில் உள்ளது. திருச்செந்தூருக்கு அமைக்கப் பெற்ற மூலவரும் ஆறுமுகப் பெருமானும் உலாவரும் போது தங்கிய இடம். இங்கு மூலவர் ஆறுமுகப் பெருமானாகவே காட்சி தருகின்றார். இவர் முன்னும் பின்னும் ஆறு திருமுகங்களுடன் மயிலின் மீது இடக்காலை மடித்து வலது காலைத் தொங்கவிட்ட நிலையில் கிழக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார். வள்ளி தெய்வானை இருபுறமும் உள்ளனர்.

கிருத்திகை, சஷ்டி, வெள்ளிக்கிழமை சிறப்பாகும்.

## 259. திருநெல்வேலி நெல்லையப்பர் திருக்கோவில்

இங்கு ஆறுமுகர் தெற்கு நோக்கி மயிலின் மீது முன்னும் பின்னுமாக ஆறு திருமுகங்களுடன் வள்ளி தேவியுடன் காட்சி தருகின்றார்.

நெல்லையப்பர் திருக்கோயிலில் ஆறுமுக நயினார் என்னும் திருநாமத்து டன் மயில் மீது எழுந்தருளியுள்ளார். ஒரே கல்லில் ஆறுமுகமும் பன்னிரு கரங்களும் கொண்டு மயில் மீது அமர்ந்த கோலம். இருபுறமும் தேவியர் இருவரும் எழுந்தருளியுள்ளனர். தெற்குப் பார்த்த சந்நிதி. இச்சந்நிதியை வலம் வந்து வணங்கலாம்.

உற்சவர் ஆறுமுகநயினார்- அம்பாள் சந்நிதி பிரகாரத்தில் காட்சி தருகிறார்

இத்தலச் சிவபிரான்: நெல்லையப்பர். இறைவி: காந்திமதியம்மை. தலமரம்: மூங்கில்.

திருப்புகழ் வைப்புத் தலங்களில் ஒன்று.

## 260. திருப்பறியலூர்

மாயூரத்தை அடுத்த செம்பொன்னார் கோவிலுக்குத் தென் மேற்கே 2 கி.மீ. தொலைவில் உள்ளது.

வீரட்டத் தலங்களுள் ஒன்று. தக்ஷனின் யாகத்திற்கு வந்திருந்த மாயன் முதலிய விண்ணவர்களின் தீமையைப் பறித்த தலம். மேற்கு நோக்கிய சந்நிதி. வீரபத்திரர் தெற்கு நோக்கி எட்டு கரங்களுடன் உள்ளார். அவர் காலடியில் தக்ஷன் காட்சி தருகிறார். இத்தலச் சிவபிரான்: வீரட்டேசுவரர். இறைவி: இளங்கொடியம்மை.

முருகப் பெருமான் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு விளங்குகிறார். திருப்புகழ் வைப்புத் தலங்களுள் ஒன்று.

## 261. திருப்புக்கொளியூர்

திருப்பூர் - ஈரோடு சாலையில் 13 கி.மீ. இல் உள்ள வஞ்சிப்பாளையத்தி லிருந்து 8 கி.மீ. இல் உள்ளது. ஏரியின் அருகே இருந்த இத்தலம் இன்று அழிந்து விட்டது. சமவெளியாகக் காட்சி தருகின்றது. கோயில் இல்லை. தேவாரத்திலும் இத்தலக் குறிப்பு உள்ளது.

திருப்புகழில் மூன்று பாடங்கள் உள்ளன.

## 262. திருப்புறம்பயம்

கும்பகோணத்திற்கு வடமேற்கே 8 கி.மீ. இல் உள்ளது. தெற்கே மண்ணியாறும் வடக்கே கொள்ளிடமும் உள்ளது.

பிரளயத்திற்குப் புறம்பாய் இருந்தமையால் புறம் பயம் எனப் பெயர் வந்தது. (புறம்பு - அயம் = நீர்)

ஒரு பக்தனின் மகளுக்கு நிச்சயித்த மணமகனைப் பாம்பு கடித்து இறக்க திருஞானசம்பந்தர் பதிகம் பாடி உயிர் மீட்ட தலம். செட்டிப் பெண் ஒருத்திக்கு வன்னி மரம், மடைப்பள்ளி, கிணறுகளைச் சாட்சியாகக் கொண்டு அவளுரிமை நாயகனுக்கு மணம் செய்வித்த தலம். எனவே இத்தலச் சிவபிரான் சாட்சி நாதர் எனப் பெயர் கொண்டார். இறைவி: கரும்பன்னச் சொல்லம்மை. தலமரம்: வன்னி இறைவருக்குப் புன்னை

வன நாதர் என்ற பெயரும் உண்டு. இங்குள்ள பிரளயங்காத்த விநாயகர் வெண்மை நிறம் கொண்டவர். விநாயகர் சதுர்த்தி அன்று ஒரு குடம் தேன் அபிஷேகம் செய்வர். பிற நாட்களில் அபிஷேகம் கிடையாது.

இங்கு முருகப் பெருமான் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு இரு தேவியருடன் நின்ற கோலத்தில் காட்சி தருகின்றார்.

பஞ்சமூர்த்தி மண்டபத்தில் அம்பிகை குகாம்பிகை முருகனைக் கையில் ஏந்திக் காட்சி தருகிறார்.

திருப்புகழ் வைப்புத் தலங்களில் ஒன்று.

## 263. திருப்பைஞ்ஞலி (லாலிகெடி)

திருச்சி மண்ணச்சநல்லூருக்கு மேற்கே 2.5 கி.மீ. தொலைவில் உள்ளது. தலமரமான வாழையின் பெயரால் பைஞ்ஞலி எனப் பெயர் பெற்றது. பசியினால் வருந்திய திருநாவுக்கரசருக்கு மனித வடிவில் சிவபிரான் வந்து கட்டமுது கொடுத்த தலம். எமனுக்குத் தனிச் சந்நிதியுள்ளது. இத்தல மக்கட்கு யமப் பயம் கிடையாது.

நவக்கிரகங்களுக்குப் பதிலாக 9 விளக்குகளை வைத்து வணங்குகின்றனர். இங்குச் சிவனுக்கு வலப்புறம் தேவி அமர்ந்துள்ள வடிவிலான சோமாஸ் கந்தர் வடிவம் தனிச் சிறப்புடையது.

## 264. திருமருகல்

நன்னிலத்திற்குக் கிழக்கே 13 கி.மீ. தொலைவில் உள்ளது.

பெண் ஒருத்தி இத்தலத்தின் மணம் முடிக்கத் தன் நாயகனுடன் வந்தபோது அவன் பாம்பு தீண்டி இறந்துவிட அப்பெண்ணின் துயறுற்ற நிலையைக் கண்ட சம்பந்தப் பெருமான் பதிகம்பாடி அம்மணமகனுக்கு உயிர் கொடுத்த தலம். விஷம் தீர்த்த விநாயகர் தேவி சந்நிதி எதிரே உள்ளார். இத்தலச் சிவபிரான்: மாணிக்க வண்ணர். இறைவி: வணடுவார் குழலம்மை.

முருகப் பெருமான் ஒரு திருமுகமும் இரு திருக்கரங்களும் கொண்டு இரு தேவியருடன் காட்சி தருகின்றார். உற்சவர் வில் ஏந்திய கோலத்தில் காட்சி தருகின்றார். இங்கு முருகப் பெருமானின் வடிவங்களில் ஒன்றான கஜாரூடரும் காட்சித் தருகின்றார்.

திருப்புகழ் வைப்புத் தலங்களுள் ஒன்று.

## 265. திருமுக்கூடல்

மைசூரிலிருந்து 56 கி.மீ. தூரத்தில் உள்ளது. காவிரியும், கபில நதியும் கண்ணுக்குத் தெரியாத மற்றொரு நதியும் ஒன்று கூடுவதனால் இப்பெயர் வந்தது.

சங்கமக் கரையில் ஸ்ரீ அகஸ்தீஸ்வரர் ஆலயம் உள்ளது. இங்கு சிவலிங்கம் பிரதிஷ்டை செய்ய விரும்பிய அகத்தியர் ஆஞ்சநேயரிடம் நர்மதைக் கரையிலிருந்து ஒரு லிங்கம் கொண்டு வரும்படிக் கூறினார். உரிய நேரத்தில் லிங்கம் வராததனால் அகத்தியர் மணலில் லிங்கம் பிடித்து பிரதிஷ்டை செய்தார். பின் சிறிது நேரத்தில் ஸ்ரீ அஞ்சநேயரும் லிங்கம் கொண்டு வந்தாராம். இரண்டும் கோயிலில் உள்ளன. அகத்தியர் பிர திஷ்டை செய்த சிவன் அகஸ்தீஸ்வரர்.

இவர் தலையில் ஒரு சிறு பள்ளம் உள்ளது. அதில் எப்போதும் நீர் ஊறிக் கொண்டே இருக்கும். அந்நீர் தீர்த்தமாகக் கொடுக்கப்படுகின்றது. அம்மை: பூரணமங்கள காமாட்சி.

சந்நிதிக்கு முன்னுள்ள மண்டபத்தில் முருகப் பெருமான் மயில் மீது எழுந்தருளியுள்ளார். பழைமை வாய்ந்த திருவுரு. சிற்பக்கலை நுணுக்கங் கள் நிறைந்துள்ளன.

## 266. திருவஞ்சிக் குளம்

கேரளாவில் கொடுங்கலூர் பகவதி அம்மன் கோயிலுக்குத் தெற்கே 1.5 கி.மீ. தூரத்தில் உள்ளது.

இந்திரன் வெள்ளை யானையுடன் வந்து சுந்தரரைக் கயிலாயம் அழைத் துச் சென்ற தலம்.

வெளிப் பிரகாரத்தில் இடப்பக்கம் சுப்பிரமணியர் தனிச் சந்நிதி உள்ளது. முருகப் பெருமான் நான்கு திருக்கரங்களுடன் காட்சி தருகிறார். அழகிய கருங்கல்லால் ஆன திருவுரு.

இங்குத் துலா சஷ்டியன்றும் தைப்பூசத்தன்றும் சிறப்பான விழாக்கள் கொண்டாடப்படுகின்றன.

சக்தி பஞ்சாக்ஷி சந்நிதியின் சிவபெருமான் இடது தொடை மீது உமையம்மை அமர்ந்திருக்கும் திருக்கோலம் வெகு அழகு.



## 267. திருவாதவூர்

மதுரையிலிருந்து 23 கி.மீ. தொலைவில் உள்ளது. மாணிக்கவாசகப் பெருமானின் அவதாரத் தலம்.

இத்தலச் சிவபிரான் திருமறை நாயகர். இறைவி: ஆரண வல்லி. இங்கு வடக்குப் பிரகாரத்தில் முருகப் பெருமான் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு மயில் மீது அமர்ந்து தேவியர் இருவருடன் எழுந்தருளியுள்ளார்.

மகாமண்டப வாயிலில் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு தேவியர் இருவருடன் எழுந்தருளியுள்ளார்.

மயிலின் தோகை விரிந்தும் இடப்புறமாயும் மயிலின் முகம் வலப்புறமும் உள்ளது.

தீர்த்தம்: பிரம்ம, பைரவ, கபில, சிவ, விஷ்ணு, வாயு, அக்னித் தீர்த்தங்கள். தலமரம்: மகிழமரம்.

## 268. தீண்டல் மலை

ஈரோட்டிலிருந்து 8 கி.மீ. தூரத்தில் உள்ளது. குன்றாடும் குமரன் இங்கும் சிறு குன்றின் மீது கிழக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார். மலைப்பாறை யிலேயே 120 படிகள் செதுக்கப்பட்டுள்ளன.

பாலசுப்பிரமணியர் இங்குப் பாலகனாகக் கிழக்கு நோக்கிக் காட்சி தருகின்றார். குன்றின் கீழே இரு விநாயகர்கள் காட்சி தருகின்றனர். மலைமேல் பாலசுப்பிரமணியரை வலம் வரலாம்.

## 269. தேவூர்

திருவாரூரை அடுத்த கீழ்வேளூருக்குத் தெற்கே 5 கி.மீ. இல் உள்ளது. கோச்செங்கட் சோழன் கட்டிய மாடக் கோயில்களில் ஒன்று. பஞ்சபாண்டவர் அஞ்ஞானவாசம் செய்த தலம்.

இத்தலச் சிவபிரான்: தேவபுரீசர். இறைவி: தேன் மொழியம்மை. தலமரம்: வாழை. கட்டு மலையில் வாழை தலமரமாகத் திகழ்வது சிறப்பாகும்.

இங்கு ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களுடன் மயில் உடன் விளங்க முருகப் பெருமான் நின்ற திருக்கோலத்தில் காட்சி தருகிறார்.

திருப்புகழ் வைப்புத் தலங்களுள் ஒன்று.



## 270. தேனீ

புதுக்கோட்டையிலிருந்து 25.5கி.மீ. தூரத்தில் உள்ளது. குமரன் மலையைத் தாண்டிச் செல்ல வேண்டும்.

குன்றுதோறாடும் குமரன் இங்கு ஒரு சிறு குன்றின் மேல் எழுந்தருளியுள்ளார். 242 படிகளைக் கொண்ட அழகிய மலை.

சிறு மண்டபத்துடன் கூடிய கருவறையில் குமரப் பெருமான் முன்னும் பின்னுமாக மூன்று திருமுகங்களுடன் ஆறுமுகப் பெருமானாய் வள்ளி தேவசேனா தேவியருடன் மயில் மீது கிழக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார். பெரும்பேறு முருகனின் திருவுருவினை ஒத்ததாயினும் மயிலின் ஒரு கால் மட்டும் தனித்தும் மற்றொன்று முருகப் பெருமான் திருவுருடன் சேர்ந்தும் வேறுபட்டுக் காணப்படுகின்றது.

மாதக் கிருத்திகை சிறப்பு.

## 271. தைக்காடு

திருவனந்தபுரம் நகரின் மையப் பகுதியில் அமைந்துள்ளது.

இத்தலக் குமரன் தண்டாயுதபாணியாக எழுந்தருளியுள்ளார். சுவாமி புஷ்கரணி கோவிலின் அருகே உள்ளது.

சஷ்டி, தைப்பூசம் சிறப்பாகக் கொண்டாடப்படுகின்றது.

## 272. தோவாளை

நாகர்கோயிலிலிருந்து திருநெல்வேலி செல்லும் நெடுஞ்சாலையில் 4 கி.மீ. இல் உள்ளது.

சாலையின் அருகில் ஒரு பெரிய பாறையின் மீது (சிறு குன்று) அமைந்த கோயில். குன்றில் செதுக்கப்பட்ட 103 படிகள் உள்ளன. குன்றின் அடிவாரத்தில் விநாயகர் கோவில் உள்ளது.

குன்றின் மீது குமரப் பெருமான் ஒரு திருமுகம் கொண்டு கிழக்கு நோக்கிக் காட்சி தருகிறார். குமரனின் அண்ணன் விநாயகரும் நின்ற கோலத்தில் காட்சி தருகிறார். நர்த்தன விநாயகரையே சில கோவில்களில் காணலாம். ஆனால் இங்கு இரு கால்களையும் கீழே ஊன்றி நன்முறையில் நிமிர்ந்த திருமேனியான விநாயகரை இங்கு மட்டுமே காண முடியும்.

மலையடி வாரத்தில் விநாயகர், அம்மன் கோவில்கள் உள்ளன. மருமகனான குமரன் மலை மீதும் மாமன் பெருமாள் குன்றில் அடிவாரத்திலும் கோயில் கொண்டுள்ளனர்.

குன்றை ஒட்டி செக்ககிரி என்ற முருகன் கோயில் உள்ளது. பெரிய மலை மீது முருகப் பெருமான் காட்சி தருகிறார்.

பூக்களுக்குப் பெயர் பெற்ற ஊர். ஒடுக்கத்து வெள்ளி என்னும் கடைசி வெள்ளி, சஷ்டி விழா சிறப்பு. ஆவணி மாதம் விழா நடைபெறும்.

## 273. நஞ்சன் கூடு

கர்நாடகாவின் சாம்ராஜ் நகர் வழியாகச் செல்ல வேண்டும். மைசூருக்குத் தெற்கே 19 கி.மீ.

ஸ்ரீ நஞ்சுண்டேஸ்வரர் திருக்கோயில் உள்ளது. இங்கு நந்தி இறைவனை நோக்காமல் பிரதான சந்நிதிக்கு வடக்குப் பக்கமாய் வருபவர்களை எதிர் நோக்கும் வகையில் அமைந்துள்ளது. அலங்கார நந்தி எனப் பெயர். 63 நாயன்மார்களும் பெரிய திருவுடன் காட்சி தருகின்றனர். 63 சிவலீலைகள் சிலை வடிவில் வடிக்கப்பட்டுள்ளன.

இங்கு ஸ்ரீ தண்டபாணி தலைமேல் ஐந்து தலை நாகம் குடை பிடிக்கக் காட்சி தருகின்றார். அவர் காலடியில் உள்ள பீடத்தில் கிருஷ்ண தேவராயர் திருவுரு செதுக்கப்பட்டுள்ளது.

கன்னி மூலையில் பிரசன்ன கணபதி காட்சி தருகின்றார். சக்தி வாய்ந்தவர். கபினி நிதிக் கரையில் பரசுராமருக்கும் ஆலயம் ஒன்றுள்ளது.

## 274. நல்லூர்

இலங்கை நாட்டில் யாழ்ப்பாணத்திலிருந்து 1.5 கி.மீ. தூரத்தில் உள்ளது. சப்புமால் குமரையன் என்னும் சிங்கள மன்னனால் அமைக்கப்பட்ட திருக் கோயில்.

இவ்வாலயத்தில் இரு கோபுரங்கள் உள்ளன. கிழக்கு வாசலில் இசைக் கோபுரமும் தெற்கில் ஆறுமுக சுவாமி வாசலில் ஒரு கோபுரமும் உள்ளது. இராச கோபுரத்தில் வேலும் ஓம் முருகா என்றும் பொறிக்கப்பட்டுள்ளது.

மூலஸ்தானத்தில் வேல் பிரதிஷ்டை செய்யப்பட்டு வழிபடப்படுகின்றது. வேலின் இருபுறமும் வள்ளி, தெய்வானை எழுந்தருளியுள்ளனர்.

இங்குள்ள தீர்த்தம் சண்முக தீர்த்தம். திருவிழாக் காலங்களில் முருகப் பெருமான் இதில்தான் தீர்த்தமாடுவார்.

குமார தந்திரம் என்னும் சிறப்பான ஆகமத்தின் படியே நித்திய பூஜைகள் நடக்கின்றன.

இக்கோவிலுக்குள் வேட்டி அணிந்து மேல் சட்டையின்றியே செல்ல வேண்டும் என்ற மரபு உள்ளது.

சிங்கைப் பரராசசேகரன் என்பவன் இக்கோயிலின் அருகில் பெரிய ஏரியை வெட்டி அதில் முதன் முதலாக யமுனா நதி நீரைக் காவடி கட்டிக் கொண்டு சேர்ந்தான். யமுனா ஏரி என்றழைக்கப்பட்டு இப்போது 'யமுனா ரி' எனப்படுகின்றது. இவ்வேரி பகர வடிவாக உள்ளது. இம்மன்னன்

இக்கோயிலின் கிழக்கே வெயிலுகந்த பிள்ளையார் ஆலயமும் மேற்கே வீரமாகாளியம்மன் ஆலயத்தையும் வடக்கே சட்டைநாதர் ஆலயத்தையும் தெற்கே கயிலைநாதர் ஆலயத்தையும் கட்டுவித்தான்.

ஆடி மாதம் 25 நாட்கள் பெருவிழா நடைபெறும்.

## 275. பண்புளி - திருமலை

தென்காசியின் அருகில் அமைந்த தலம். 300 அடி உயரம் கொண்ட மலையின் மீது குமரப் பெருமான் திருமலைக் குமாரசாமி என்னும் பெயருடன் எழுந்தருளியுள்ளார். இம்மலையில் கோயிலுக்குச் செல்ல 547 படிகள் உள்ளன. 322 படிகள் பாறையில் அமைக்கப்பட்டுள்ளன. அதன் பின் இருவழிகள் உள்ளன. சாய்வான பாதையில் 225 படிகள் உள்ளன. மற்றொன்று செங்குத்தான பாதை. மலை ஏறும் முன் மிகப் பெரிய திருவுருவம் கொண்ட விநாயகரைத் தரிசிக்கலாம். குமரனின் சன்னதிக்கு ஒன்பது படிகளைக் கடக்க வேண்டும்.

இங்குள்ள பூஞ்சுனை, இடும்பன் தீர்த்தம் விசேஷம். பூஞ்சுனைத் தீர்த்தத்தில் மூன்று குழிகள் உள்ளன. அவை சூரியன், சந்திரன், அக்னி ஆகியோரின் மூன்று கண்களாகக் கருதப்படும். இத்தலத்தில் பன்னீர் இலையில் விபூதி கொடுக்கின்றனர். இது மருத்துவ குணங்களை உடையது. இத்தல முருகப் பெருமானை அகத்தியர், சப்த கன்னியர், அருணகிரிநாதர் முதலியோர் பூசித்துப் பேறு பெற்றனர். பூஞ்சுனை தீர்த்தம் அருகில் சப்த கன்னியர் திருவுருவங்கள் உள்ளன. இத்தலத்தின் தலமரம் புளியமரம். இம்மரத்தின் அடியில் வேலும் மயிலும் கொண்ட கற்சிலை உள்ளது. இதுவே ஆதிச்சந்நிதி. திருமலையாண்டவர், திருமலையாண்டி, திருமலை வடிவேல், திருமலைக்குமரன், திருமலைக்குமாரசாமி இத்தலப் பெருமான் தண்டைக்கு நல்லான். திருமலைச் செல்வன், திருமலை வித்தகன், திரும லைக் குருபரன் கலியுக மெய்யன் என வழங்கப் பெருகின்றார். திருச்செந் தூர் போன்று இங்கும் முன் மண்டபம் 'சண்முக விலாசம்' என அழைக்கப்ப டுகின்றது.

இம்மலைக்குத் தென் கிழக்கே ஒரு கி.மீ. இல் அனுமனாற்றின் தென் கரையில் கோட்டைத்திரடு என்னும் இடம் உள்ளது. அங்கு ஒரு பழைய கோட்டையும் உள்ளது. அங்கு இருந்த குமாரசாமிப் பெருமான் திருவுரு வமே பெருமானின் கட்டளைப்படி இம்மலைக்குக் கொண்டு வரப்பட்டது.

இங்கு முருகப் பெருமான் ஒரு திருமுகத்துடன் நின்ற கோலத்தில் கிழக்கு நோக்கி மயில் பின்னே இருக்கக் காட்சி தருகின்றார். உள்ளே சண்முகரும் உற்சவரும் உள்ளனர். உற்சவர் ஆறு முகங்களை உடையவர். உற்சவருக் குச் சண்முகன், முத்தையன் என்ற பெயர்களுண்டு. இங்குள்ள விநாயர் அனுக்கை விநாயகர் என அழைக்கப் பெறுகின்றார். விழாக் காலங்களில்

முருகப் பெருமான் மலையினின்று இறங்கி அடிவாரத்தில் உள்ள ஸ்ரீ நாகீசுவரர் ஆலயத்திற்குச் செல்வார். சுவாமி மலை போல் இங்கும் குமரன் மேலேயும் இறைவன் கீழேயும் எழுந்தருளியுள்ளனர்.

ஊரின் வடகிழக்குப் பகுதியில் நகரீசுர முடையார், அறம் வளர்த்த நாயகி திருக்கோயில் உள்ளது.

தைப்பூசத் திருநாளின் ஒன்பதாம் நாள், திருத்தேரும் கார்த்திகை மாதம் கடைசித் திங்களன்று தெப்பத் திருவிழாவும் நடைபெறுகின்றது. ஐப்பசி மாதம் பத்து நாட்கள் பிரமோற்சவம் நடைபெறும். சித்திரை மாதம் வசந்த விழா நடைபெறும்.

## 276. பட்டீச்சரம்

தஞ்சை மாவட்டம் தாராசுரம் புகைவண்டி நிலையத்திலிருந்து தென் மேற்கே 3 கி.மீ. தொலைவில் உள்ளது. காமதேனுவின் புதல்வி பட்டி



வழிபட்டதனால் பட்டீஸ்வரம் எனப் பெயர் பெற்றது. பசு தன் முலைக் காம்பால் பால் அபிஷேகம் செய்யும் காட்சி தூண் ஒன்றில் காணப் பெறுகின்றது.

தேவி தவம் செய்ததனால் தேவி வனம், சக்தி வனம் என்ற பெயர்களும் உண்டு. ஒற்றைக் காலில் கையினைத் தலைக்கு மேல் வைத்துத் தவம் செய்யும் அம்மன் சிலை ஒன்றுள்ளது. இங்கு எல்லா நந்திகளும் விலகிக் காணப்படுகின்றது. சோமாஸ் கந்தர், சண்முகர் உள்ளனர். உள்கோபுர வாயிலை அடுத்து அனுக்கை விநாயகரும், முருகரும் உள்ளனர். இங்கு முருகப்பெருமான் வில்லேந்திய வேலவனாக மயில் மீது ஒரு காலினை வைத்துக் காட்சி தருகின்றார். மயில் அருகில் விளங்க ஆறாமுகராகவும், பன்னிரு திருக்கரங்களுடன் காட்சி தருகிறார்.

6 அடி உயரத்துடன் ஆஜானுபாகுவான ஆறுமுகர் தேவியர் இருவருடன் காட்சி தருகின்றார். மயிலின் தோகை வரிகளும் கழுத்தின் வளைவும் அபூர்வக் காட்சியாகும்.

## 277. பத்துமலை

மலேசிய நாட்டின் கோலாலம்பூரிலிருந்து 17.6 கி.மீ. தூரத்தில் உள்ளது.

தமிழர்கள் வாழும் இடமெல்லாம் தமிழ்க் கடவுள் முருகவேள் எழுந்தருளி உள்ளார். மலேசிய நாட்டின் பத்துமலை முருகன் அருள்மணக்கும் மலைத் தலமாகும்.

குகை வடிவில் அமைந்த இத் திருக்கோயிலில் முருகப் பெருமான் மூன்று பக்கமும் கம்பிபோட்டு அமைக்கப்பட்ட ஓர் இடத்தில் மலைச் சுவரில் உள்ள பள்ளத்தில் எழுந்தருளியுள்ளார். இயற்கையாக அமைந்த குகை. இதன் நீளம் தெரியவில்லை. சுமார் 1 கி.மீக்கு மேலும் செல்கிறது.

குளிர்ந்த காற்றும் சூரிய ஒளியும் கிடைக்கும் வகையில் அமைந்துள்ளது. இம்மலையில் மேலும் பல குகைகள் உள்ளன.

300 படிகள் ஏறி முருகனைத் தரிசிக்க வேண்டும். மலைமேல் ஏறவும் இறங்கவும் இரு தனி வழிகள் உள்ளன. இடைவழியில் தங்கி இளைப்பாரவும் மண்டபங்கள் உள்ளன.

தைப்பூசம் பெரிய திருவிழாவாகக் கொண்டாடப்படுகின்றது. அன்று ஆறுமுகப் பெருமான் தம்பதி சமேதரராகத் திருவுலா வருவார். இதில் தமிழர்கள் மட்டுமின்றி சீன, மலேசிய நாட்டவரும் கலந்து கொள்வர்.

## 278. பழுவில்

கேரளத்தின் திருப்பறையாறிலிருந்து காஞ்சாணி வழியாக குருவாயூர் செல்லும் வழியில் உள்ள அந்திக் காடிலிருந்து 3 கி.மீ. உள்ளது.

வலக் கையில் வேல் வைத்துக் கொண்டு இடக்கையை இடுப்பில் ஊன்றியவாறு ஸ்ரீ சுப்பிரமணியர் எழுந்தருளியுள்ளார்.

ஆறாட்டுப் புழா பூரம் முடிந்ததும் அந்திக்காடு பகவதி உத்தரம் திருநாளில் இத்தலம் வந்து மதியம் ஓய்வெடுத்துத் திரும்புகின்றார்.

இக்கோவிலுக்கு வெளியேயுள்ள பெரிய ஆலமரத்தின் அடியில் பல முடிச்சுகள் யாழியைப் போன்றும் பிற உருவிலும் காட்சி தருகின்றன.

## 279. பாக மண்டலா

கர்நாடக மாநிலம் மெர்க்காராவிலிருந்து 40 கி.மீ. தூரத்தில் உள்ளது.

காவிரியும் கனகாவும் கண்ணுக்குத் தெரியாத சுஜ்யோதி நதியும் சங்கம மாகும் தலம். பகண்ட மகரிஷி தவம் செய்த தலம். இங்கு பகண்டேஸ்வரர் ஆலயம் உள்ளது.

இங்கு அகத்தியர் தவமிருந்து ஸ்ரீ சுப்பிரமணியர் அருள் பெற்றதனால் இத்தலம் ஸ்கந்தவனம் எனப் பெயர் பெற்றது. முன்னோர்க்கு இங்குத் திதி கொடுப்பதனால் பிரேதாரண்யம் என்னும் பெயர் பெற்றது.

கேரள பாணியில் அமைந்த கோயில். பிரகாரத்தில் விநாயகர் கிழக்குப் பக்கம் எழுந்தருளியுள்ளார்.

வடபுரம் பாலசுப்பிரமணியர் தனிச் சந்நிதி உள்ளது. ஒரு கையில் தண்டம் ஏந்தி மற்றொரு கையை இடுப்பில் ஊன்றிய திருக்கோலத்துடன் அருள் பாலிக்கின்றார். இங்குக் கந்த சஷ்டி விழா சிறப்பாகக் கொண்டாடப் படுகின்றது.

தனிச் சந்நிதியில் மகாவிஷ்ணு காட்சி தருகின்றார்.

## 280. பார்வதி மலை (பூனா)

பூனா நகரின் அருகே அமைந்த சிறிய மலைக் கோவில்.

இங்குக் கோயில் கொண்டுள்ள ஆறுமுகப் பெருமான் ''கார்த்திகேயன்'' என்னும் திருநாமம் கொண்டவர். இவர் பிரம்மச்சரிய விரதம் அனுஷ்டிப்ப தாக ஐதீகம். எனவே பெண்களை இக்கோவிலில் அனுமதிப்பதில்லை.

பளிங்கினால் அமைந்த அழகிய திருவுருவம். மயில் மீது அமர்ந்த கோலத்தில் ஆறுமுகங்களுடன் காட்சி தருகின்றார்.

மலை உச்சியில் அமைந்த இவ் ஆலயத்தில் சிவன், பண்டரிபுரம் விட்டல், பவானி, மகாவிஷ்ணு, விநாயகர், சூரியன் தனிச் சந்நிதிகள் உள்ளன.



## 281. பெரம்பூர்

மாயவரத்திலிருந்து திருவாரூர் செல்லும் வழியில் மங்களூரிலிருந்து 6 கி.மீ. தொலைவில் உள்ளது.

பெரிய திருக்கோயில். முருகப் பெருமான் மயிலுக்கு உபதேசம் செய்த தலம். இங்கு முருகப் பெருமான் முன்னும் பின்னுமாக அமைந்துள்ள ஆறு திருமுகங்களுடன் மயில் மேல் அமர்ந்த கோலத்தில் வள்ளி தேவசேனா தேவி சமேதரராய் கிழக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார். முருகப் பெருமானின் முன் மயிலும் அதன் அருகில் அகத்தியரும் உள்ளனர். உள் கட்டில் யானையும் உள்ளது.

தேவசேனா தேவிக்குத் தனிச் சந்நிதி உள்ளது. இது போல் கந்தன் குடியிலும், திருவிடைக் கழியிலும் தனிச் சந்நிதிகள் உள்ளன.

மாதக் கார்த்திகை, கந்த சஷ்டி சிறப்பான விழாக்களாகும்.

## 282. பூராண்டான் பாளையம்

கோவையிலிருந்து 40 கி.மீ. தூரத்தில் உள்ளது.

இங்கு வேல் பிரதிஷ்டை செய்யப்பட்டு முருகப் பெருமானாக வணங்கப் படுகின்றது. எனவே இதனைப் பஞ்சவேல் முருகன் கோயில் என்பர்.

குமாரசாமி என்னும் சித்தர் இவ் வேலை வழிப்பட்டு வந்தார். அவர் மறைவுக்குப் பின் நீண்டகாலம் கவனிப்பாரின்றி இருந்து பின் அவர் குடும்பத்தினர் கனவில் வந்து வேலைக்காட்ட அவ்வேல் மீண்டும் வழிப டப்பட்டது.

இத்தல மக்கள் வேண்டுகோளின்படி அவ்வேல் இக்கோவிலில் பிரதிஷ்டை செய்யப்பட்டது. சித்தருக்கும் சமாதி கட்டப்பட்டது. சமாதி அருகேயுள்ள புற்று மண் தீராத நோய்களைத் தீர்க்கும் குணமுடையது.

## 283. பெருங்கரணை

செங்கை மாவட்டம் அச்சிறுப்பாக்கத்தின் அருகில் அமைந்த தலம். இதனை நடுப்பழனி என்பர்.

இங்கு முருகப் பெருமான் பழனி தண்டாயுதபாணியைப் போனறு ஒரு திருமுகமும் இரு திருக்கரங்களும் கொண்டு வலக்கையில் தண்டம் ஏந்தி இடக்கையினை இடுப்பில் ஊன்றிக் காட்சி தருகின்றார்.

பழனிக்குச் சென்று வழிபட முடியாதவர்கள் இவரை வழிபடுகின்றனர் சென்னையில் இருப்பது வடபழனி. இரண்டுக்கும் நடுவே அமைந்துள்ளத னால் காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு சந்திரசேகர சரஸ்வதி சுவாமிகளும், ஜகத்குரு ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகளும் இங்கு

வந்தபோது பழனிக்கும் சென்னை வடபழனிக்கும் இடையே அமைந்த இது ''நடுப்பழனி'' எனப் பெயர் சூட்டினர்.

## 284. பெரும்பேடு

செங்கை மாவட்டம் பொன்னேரியிலிருந்து 7 கி.மீ. தொலைவில் அமைந்த தலம். இதனைக் குமாரசாமி மேரு என்பர்.

இங்கு முருகப் பெருமான் தன் இரு தேவியருடன் காட்சி தருகின்றார். முருகப் பெருமான் சுமார் 6 அடி உயரம் கொண்ட ஆஜானுபாவான அழகிய திருவுருவம். நான்கு திருக்கரங்களில் முன்வலக்கை அபய முத்திரையுடனும் முன் இடக்கை வரத முத்திரையுடனும் பின் வலக் கையில் அக்கமாலையும் பின் இடக்கையில் கமண்டலமும் தலையில் கிரீடமும் விளங்கக் காட்சி தருகின்றார்.

பொதுவாக வள்ளி இடப்பக்கமும் தெய்வ யானை இடப்பக்கமும் காட்சி தருவர். இங்கு அபூர்வமான காட்சியாக வள்ளி தேவி பெருமானின் இடப்பக்கம் தலையில் குறத்திக் கொண்டையும் அதைச் சுற்றி மாலையும் காதுகளில் ஓலை ஆபரணங்களும், தலையில் குறவர் பெண்கள் அணிவ தைப் போன்ற மணிகளாலான மாலையும் வலக்கையில் தாமரை மலருக்குப் பதில் நீலோர்பல மலரும், இடக்கை கடி முத்திரையுடனும் காட்சி தருகின்றார்.

தெய்வயானை பெருமானின் வலப்பக்கம் தலையில் கிரீடமும், காது களில் மகர குண்டலங்களும், வலக்கை கடி முத்திரையுடனும் இடக்கையில் நீலோற்பல மலருக்குப் பதில் தாமரை மலரும் கொண்டு தலையில் கிரீடத்துடன் காட்சி தருகின்றார்.

இத்திருவுருவங்கள் பூமியின் அடியில் இருந்து 1976 இல் தோண்டி எடுக்கப்பட்டு திருக்கோயிலில் எழுந்தருளச் செய்துள்ளனர். திருவுருவங் கள் எடுக்கப்பட்ட இடத்தில் சிறிய தேர் ஒன்று காட்சி தருகின்றது.

## 285. பெருவாரம்

ஆல்வாய் - வைப்பின் பாதையில் 16 கி.மீ. இல் பரூர் உள்ளது. அங்கிருந்து 1 கி.மீ. இல் பெருவாரம் திருக்கோயில் உள்ளது.

இறைவன் பெயர்: பெருவாரத்தப்பன், சிவலிங்கம் சிறியது. இங்கு இவரைக் கிராத மூர்த்தியாக வழிபடுவர்.

இங்கிருந்து 2 கி.மீ. இல் மன்னத்து சுப்பிரமணியர் ஆலயம் உள்ளது. வலக்கையில் திருவேலுடனும் இடக்கையை இடுப்பில் ஊன்றியும் சுமார் 5 அடி உயர சுப்பிரமணியர் காட்சி தருகின்றார்.

## 286. பொரவாச் சேரி

சிக்கலின் அருகில் அமைந்த தலம். குளத்தின் கரையில் அமைந்த



கோயில். பொரவாச்சேரி, எட்டிககுடி, எணகண ஆகிய மூனறு தலங்களின் முருகப் பெருமானும் ஒரே சிற்பியால் வடிக்கப்பட்டது.

இங்கு முருகப் பெருமான் முன்னும் பின்னுமாக ஆறு திருமுகங்களுடன் ஆஜானுபாகுவாய் பன்னிரு திருக்கரங்களுடன் பெரிய மயிலின் மீது தன் இடக்காலை மடித்து வலக் காலைத் தொங்க விட்ட நிலையில் தெற்கு நோக்கி எழுந்தருளியுள்ளார். முருகப் பெருமானின் பன்னிரு திருக் கரங்களும் மிகச் சிறந்த வேலைப்பாடுகளைக் கொண்டன. மயில் சிறந்த கலை நயத்துடன் தன் அலகில் ஒரு பாம்பினைக் கொண்டு முருகப் பெருமானைத் தாங்கியவாறு தன் இரு நீண்ட கால்களும் தனித்தனியே தெரியக் காட்சி தருகின்றது. கால்களின் உயரம் 9 அங்குலம். முருகப் பெருமானைச் சுற்றி மிகச் சிறந்த வேலைப்பாடுகளுடன் திருவாசி உள்ளது. அதன் இருபுறங்களிலும் இரு தேவியரும் எழுந்தருளியுள்ளனர்.

இத்திருவுருவினை வடித்து வாங்கிய மன்னன் தன்கோயிலில் உள்ள இம் முருகப் பெருமான் மட்டுமே இச்சிறப்பினைப் பெற வேண்டுமென எண்ணி இதனை வடித்த சிற்பியின் கைகளில் உள்ள கட்டை விரல்களைத் துண்டித்து விட்டார். உளிகளை இனி பிடிக்க முடியாதா கையால் இனி வேறு திருவுருவங்களைச் செய்ய முடியாது என்பது எண்ணம். அதன்பின் அச்சிற்பி எட்டுக்குடி திருமுருகனை வடித்தார். அதைக் கண்டு கோபம் கொண்ட மன்னன் சிற்பியின் கண்களையும் தோண்டி விட்டார். அதன்பின் இறைவனையே கண்ணாக எண்ணி வணங்கி எண்கண் முருகப் பெரு மானை வடித்து இழந்த கண்ணை மீண்டும் பெற்றார் என்பது வரலாறு.

எட்டிக்குடி, எண்கண் முருகப் பெருமான் திருவுருவும், மயிலும் உருவத்தில் சிறியன. வேலைப்பாடுகளும் குறைவாகும்.

## 287. பொன்மலை

கோவையிலிருந்து பொள்ளாச்சி செல்லும் வழியில் 21 கி.மீ. இல் உள்ளது. இப்போது கிணத்துக் கடவு எனப் பெயர்.

மூர்த்தி, தலம், தீர்த்தம் மூன்று சிறப்புகளும் உடையது. இத்தலப் பெருமான் மீது பிள்ளைத் தமிழ் உள்ளது.

மலைமேல் செல்லும் வழியில் இடும்பன் சந்நிதி உள்ளது. மலை உச்சியில் இரு சுனைகள் உள்ளன. முதல் சுனையில் நீராடி கோயிலை வலம் வர வேண்டும். 2-ம் சுனையில் நீராடி திருக்கோயிலுக்குச் செல்ல வேண்டும்.

முருகப் பெருமான் வலக்கையில் வேலுடன் எழுந்தருளியுள்ளார். கருவறையின் எதிரிலுள்ள மயிலின் அருகிலிருந்து எதிரில் பார்த்தால் முருகப் பெருமானும் வலப்பக்கம் ஆடற் கடவுளும் இடப்பக்கம் சோமாஸ் கந்தரும் காட்சி தருவது சிறப்பாகும்.

இத்தலமும் திருப்புகழ் பாடல் பெற்றது என்பர் சிலர்.

## 288. பையனூர்

கேரளாவில் ஸ்ரீ மடாயிக்காவு பகவதி கோயிலிலிருந்து 15 கி.மீ. தொலைவில் உள்ளது. பழைமையான திருக்கோயில்.

கந்த பெருமான் ஆள் உயரத்தில் நின்ற திருக்கோலத்தில் காட்சி தருகிறார். வலக் கையில் வேல் தாங்கி இடக்கையை இடுப்பில் ஊன்றி அருள் வடிவாக விளங்குகிறார்.

பரசுராமத் தலத்தில் பொதுவாக நாக வடிவிலேயே சுப்பிரமணியர் இருப்பார். இங்கு மட்டுமே இவ்வளவு பெரிய சிலை உள்ளது தனிச் சிறப்பாகும்.

## 289. ஸ்ரீ மஞ்சேஸ்வரர்

கேரளாவில் கும்பளாவிலிருந்து 18 கி.மீ. தூரத்தில் உள்ளது. இங்குள்ள சிவபிரான் சுயம்பு மூர்த்தி. கருவறையில் அனந்தேஸ்வரர், ஸ்ரீ பத்ர நரசிம்மர், சுப்பிரமணியர் எழுந்தருளியுள்ளனர். பின்னால் பாம்புப் புற்றும் உள்ளது. முன்னால் நாக வடிவில் சுப்பிரமணியர் எழுந்தருளியுள்ளார்.

ஸ்ரீ மஞ்சேஸ்வர் தலபுராண மகிமை பற்றி ஸ்காந்த புராணத்தில் சஹ்யாத்ரி காண்டத்தில் மஞ்சுள மகாத்மியத்தில் விவரிக்கப்பட்டுள்ளது.

கோவையைச் சேர்ந்த ரங்க சர்மா கனவில் முருகப் பெருமான் தெரிவித்தபடி ஆதிசேஷன் வடிவில் ஸ்ரீ சுப்பிரமணியரைப் பிரதிஷ்டை செய்துள்ளார்.

இங்குப் பாம்புப் புற்று மண் பிரசாதமாகக் கொடுக்கப்படுகிறது.

## 290. மருங்கூர்

குமரி மாவட்டத்தில் சுசீந்திரத்திற்கு வடக்கே 3 கி.மீ. தூரத்தில் உள்ளது.

இத்தல முருகப் பெருமான் 'மருங்கூர் திருமலை அமரர் பதிகாத்த பெருமான் சுப்பிரமணிய சுவாமி' எனப் பெயர் கொண்டுள்ளர். இந்திர னுக்கு வந்த ஆபத்தைக் காத்து அவருக்கு மீண்டும் வாழ்வு அளித்த பெருமான்.

சுசீந்திரத்தில் அர்த்த சாமப் பூசை முடிந்ததும் இந்திரன் இங்கு வந்து நீராடி முருகனையும் இங்குள்ள ஆபத்துக் காத்த வீரநங்கை என்ற தேவியையும் வணங்குவதாக ஐதீகம்.

சிறு குன்றின் மேல் 120 படிகளுடன் அமைந்த கோயில், கிழக்கு, தெற்கு இருபக்கமும் படிகள் உள்ளன. தென்பக்கப் பாதையில் 81 படிகள் உள்ளன. (கிழக்கு நோக்கிய பாதை இயற்கையான பாறையில் வெட்டப்பட்டப் படிகளைக் கொண்டது. முருகப் பெருமான் கீழே உலாவர இப்பாதையே

பயன்படுத்தப்படுகின்றது. பாதை ஆரம்பமாகும் இடத்தில் குளம் உள்ளது. கிழக்கு நோக்கிய சந்நிதியில் மூலவர் ஒரே கல்லில் பிரபையோடு மயில் வாகனனாக பூர்வ ஹஸ்தங்கள், அபய வரதமாகவும் பரஹஸ்தங்கள் சக்தியையும், வஜ்ஜிரத்தையும் தாங்கிக் காட்சி தருகின்றார். இருபுறமும் வள்ளி தெய்வயானையுடன் துவாரபாலகர்களாக வீரபாகுவும் வீர மகேந்திரரும் காட்சி தருகின்றனர்.

மூலவரின் அபயகரம் பழுதுபட்டு முறிந்து விட்டது. மன்னன் வேறு திருவுருவினை அமைக்க விரும்பியபோது பெருமான் கனவில் தோன்றி பழுதுபட்ட கையினை ஐம்பொன் கொண்டு சரி செய்யவும். எம்மை மாற்ற வேண்டாம் என அருளினாராம். மன்னரும் அவ்வாறே செய்தார்.

ஒடுக்கத்து வெள்ளி என்னும் கடைசி வெள்ளி சிறப்பு. வேறு எவரும் காண முடியாத செம்மரி ஆட்டுக்கடா வாகனம் இங்கு உள்ளது. சஷ்டியன்று 22 அடி உயரச் சூரனை அமைத்து முருகப் பெருமான் சம்ஹாரம் செய்வது காண வேண்டிய ஒன்று.

நின்ற திருக்கோலத்தில் சரஸ்வதியும், விநாயகர், ஸ்ரீ சண்முகர் வள்ளி தேவசேனா தேவி சமேதரராக பிரமாசோபிதராகப் பெரிய திருவுருவுடன் பஞ்சலோகப் பிம்பமாக செந்தில் சண்முகரை விடச் சற்று பெரிய உருவில் காட்சி தருகிறார்.

தமிழகத்தின் தென் கோடியில் அமைந்த தலம்.

## 291. மருதமலை

கோவைக்கு வடமேற்கே 11.2 கி.மீ. தூரத்தில் உள்ளது. மருதமலை முருகப் பெருமான் தன்னை வணங்கும் மெய்யன்பர்கட்கு மங்காத வாழ்வு அளிப்பவர்.

மேற்கு, வடக்கு, தெற்கு ஆகிய மூன்று திசைகளிலுமுள்ள மூன்று மலைகள் சேருமிடம்.

500 அடி உயர மலை மீது அமைந்த கோயில். 829 படிகள் உள்ளன. கார் செல்லும் பாதையும் உள்ளது. படிக்கட்டின் அருகில் உள்ள தோன்றி விநாயகர் ஆலயம் உள்ளது. மலைப் பாதையின் நடுவில் இடும்பன் சந்நிதி உள்ளது. தான்தோன்றி விநாயகர் எழிலார்ந்த தோற்றம் உடையவர்.

கோயிலின் முன்பக்கம் மருத தீர்த்தமும் தலமரமாம் மருத மரமும் உள்ளது.

இங்கு 4 அடி உயர முருகப் பெருமான் தண்டாயுதபாணியாகக் கிழக்கு நோக்கி நின்றவாறு அருள் பாலிக்கின்றார்.

வெளிப் பிரகாரத்தில் பழைய கோயிலில் 3 சுயம்பு மூர்த்திகள் உள்ளனர். வள்ளி, சுப்பிரமணியர், தெய்வவானை என்பர்.

இத்தலம் பற்றிய குறிப்பு திருமுருகன் பூண்டியில் 800 ஆண்டுகட்கு ...பட்ட கல்வெட்டில் உள்ளது.

திரிபுரமதனை' என்ற பாடலில் வரும் பாடபேதம் 'அணி செயுமருத ..ல யோனே' என உள்ளதால் இத்தலம் திருப்புகழ்த் தலமாகக் ..ள்ளலாம். பாம்பாட்டிச் சித்தர் தவவலிமை பெற்றதலம். தனிச் சந்நிதி ..ளது.

## 292. மயிலாடி

..ர்காழி - சிதம்பரம் பேருந்து, புகைவண்டிப் பாதையில் உள்ளது. ..கவண்டி நிலையமும் உள்ளது.

இங்கு முருகப் பெருமான் பால முருகனாகத் தனித்த தவக் கோலத்தில் ..க்கு நோக்கி எழுந்தருளியுள்ளார். இவருக்கு 'யோக சுப்பிரமணியர்' ..ற பெயரும் உண்டு. பொதுவாக வடக்கு நோக்கி எழுந்தருளிய ..ங்கள் குறைவு. திருப்பரங்குன்றம், கீழ் வேளூர், குன்றத்தூர், மாகறால் ..ன்று இங்கு வடக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார்.

..ந்தர் சஷ்டி சிறப்பு.

## 293. மாகரல்

..ஞ்சிபுரத்திலிருந்து உத்திரமேரூர் செல்லும் வழியில் 13 கி.மீ. தொலை .. உள்ளது. இங்குச் சம்பந்தப் பெருமானால் பாடல் பெற்ற சிவாலயம் ..ளது

இங்கு முருகப் பெருமான் மயில் மீது முன்னும் பின்னுமாக அமைந் ..ள ஆறு திருமுகங்களுடன் இருதேவியருடன் வடக்கு நோக்கி எழுந்தரு ..ள்ளார்.

## 294. மாவிட்டபுரம்

இலங்கை நாட்டில் பருத்தித்துறை துறைமுகத்தின் அருகில் அமைந்த ..ம். சோழ நாட்டு இளவரசியான மாருதப் பிரவாக வல்லிக்குத் தீராத ..மநோய் ஏற்பட்டது. வைத்தியத்தால் குணம் பெறாத நிலையில் ..தலிங்கம் என்னும் சந்நியாசி இலங்கையின் வடமூலையில் உள்ள ..லையில் சுத்த தீர்த்தமும் மலையருவித் தீர்த்தமும் கலந்த தீர்த்தமுள் .. அதில் நீராடினால் உன்நோய் அகலும் என்றார். அவ்வாறே ..வரசியும் சென்று வரும்போது அம்மலையில் ஒரு பெரியவர் மரத்தடி .. வேல் ஒன்றினை வைத்து வணங்கி வரக் கண்டு விபரம் கேட்டபோது .. வழியாகத் தம் குடும்பத்தினர் அவ்வேலை வைத்து வழிபடுவதாகக் ..னார். இளவரசியும் அங்குக் கோயில் கட்ட முடிவு செய்து சோழ

பயன்படுத்தப்படுகின்றது. பாதை ஆரம்பமாகும் இடத்தில் குளம் உள்ளது. கிழக்கு நோக்கிய சந்நிதியில் மூலவர் ஒரே கல்லில் பிரபையோடு மயில் வாகனனாக பூர்வ ஹஸ்தங்கள், அபய வரதமாகவும் பரஹஸ்தங்கள் சக்தியையும், வஜ்ஜிரத்தையும் தாங்கிக் காட்சி தருகின்றார். இருபுறமும் வள்ளி தெய்வயானையுடன் துவாரபாலகர்களாக வீரபாகுவும் வீர மகேந்தி ரரும் காட்சி தருகின்றனர்.

மூலவரின் அபயகரம் பழுதுபட்டு முறிந்து விட்டது. மன்னன் வேறு திருவுருவினை அமைக்க விரும்பியபோது பெருமான் கனவில் தோன்றி பழுதுபட்ட கையினை ஐம்பொன் கொண்டு சரி செய்யவும். எம்மை மாற்ற வேண்டாம் என அருளினாராம். மன்னரும் அவ்வாறே செய்தார்.

ஒடுக்கத்து வெள்ளி என்னும் கடைசி வெள்ளி சிறப்பு. வேறு எவரும் காண முடியாத செம்மரி ஆட்டுக்கடா வாகனம் இங்கு உள்ளது. சஷ்டியன்று 22 அடி உயரச் சூரனை அமைத்து முருகப் பெருமான் சம்ஹாரம் செய்வது காண வேண்டிய ஒன்று.

நின்ற திருக்கோலத்தில் சரஸ்வதியும், விநாயகர், ஸ்ரீ சண்முகர் வள்ளி தேவசேனா தேவி சமேதரராக பிரமாசோபிதராகப் பெரிய திருவுருவுடன் பஞ்சலோகப் பிம்பமாக செந்தில் சண்முகரை விடச் சற்று பெரிய உருவில் காட்சி தருகிறார்.

தமிழகத்தின் தென் கோடியில் அமைந்த தலம்.

## 291. மருதமலை

கோவைக்கு வடமேற்கே 11.2 கி.மீ. தூரத்தில் உள்ளது. மருதமலை முருகப் பெருமான் தன்னை வணங்கும் மெய்யன்பர்கட்கு மங்காத வாழ்வு அளிப்பவர்.

மேற்கு, வடக்கு, தெற்கு ஆகிய மூன்று திசைகளிலுமுள்ள மூன்று மலைகள் சேருமிடம்.

500 அடி உயர மலை மீது அமைந்த கோயில். 829 படிகள் உள்ளன. கார் செல்லும் பாதையும் உள்ளது. படிக்கட்டின் அருகில் உள்ள தோன்றி விநாயகர் ஆலயம் உள்ளது. மலைப் பாதையின் நடுவில் இடும்பன் சந்நிதி உள்ளது. தான்தோன்றி விநாயகர் எழிலார்ந்த தோற்றம் உடையவர்.

கோயிலின் முன்பக்கம் மருத தீர்த்தமும் தலமரமாம் மருத மரமும் உள்ளது.

இங்கு 4 அடி உயர முருகப் பெருமான் தண்டாயுதபாணியாகக் கிழக்கு நோக்கி நின்றவாறு அருள் பாலிக்கின்றார்.

வெளிப் பிரகாரத்தில் பழைய கோயிலில் 3 சுயம்பு மூர்த்திகள் உள்ளனர். வள்ளி, சுப்பிரமணியர், தெய்வவானை என்பர்.

இத்தலம் பற்றிய குறிப்பு திருமுருகன் பூண்டியில் 800 ஆண்டுகட்கு முற்பட்ட கல்வெட்டில் உள்ளது.

'திரிபுரமதனை' என்ற பாடலில் வரும் பாடபேதம் 'அணி செயுமருத மலை யோனே' என உள்ளதால் இத்தலம் திருப்புகழ்த் தலமாகக் கொள்ளலாம். பாம்பாட்டிச் சித்தர் தவவலிமை பெற்றதலம். தனிச் சந்நிதி உள்ளது.

## 292. மயிலாடி

சீர்காழி - சிதம்பரம் பேருந்து, புகைவண்டிப் பாதையில் உள்ளது. புகைவண்டி நிலையமும் உள்ளது.

இங்கு முருகப் பெருமான் பால முருகனாகத் தனித்த தவக் கோலத்தில் வடக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார். இவருக்கு 'யோக சுப்பிரமணியர்' என்ற பெயரும் உண்டு. பொதுவாக வடக்கு நோக்கி எழுந்தருளிய தலங்கள் குறைவு. திருப்பரங்குன்றம், கீழ் வேளூர், குன்றத்தூர், மாகறால் போன்று இங்கு வடக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார்.

கந்தர் சஷ்டி சிறப்பு.

## 293. மாகரல்

காஞ்சிபுரத்திலிருந்து உத்திரமேரூர் செல்லும் வழியில் 13 கி.மீ. தொலைவில் உள்ளது. இங்குச் சம்பந்தப் பெருமானால் பாடல் பெற்ற சிவாலயம் உள்ளது

இங்கு முருகப் பெருமான் மயில் மீது முன்னும் பின்னுமாக அமைந்துள்ள ஆறு திருமுகங்களுடன் இருதேவியருடன் வடக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார்.

## 294. மாவிட்டபுரம்

இலங்கை நாட்டில் பருத்தித்துறை துறைமுகத்தின் அருகில் அமைந்த தலம். சோழ நாட்டு இளவரசியான மாருதப் பிரவாக வல்லிக்குத் தீராத குன்மநோய் ஏற்பட்டது. வைத்தியத்தால் குணம் பெறாத நிலையில் சாந்தலிங்கம் என்னும் சந்நியாசி இலங்கையின் வடமூலையில் உள்ள கீரிமலையில் சுத்த தீர்த்தமும் மலையருவித் தீர்த்தமும் கலந்த தீர்த்தமுள்ளது. அதில் நீராடினால் உன்நோய் அகலும் என்றார். அவ்வாறே இளவரசியும் சென்று வரும்போது அம்மலையில் ஒரு பெரியவர் மரத்தடியில் வேல் ஒன்றினை வைத்து வணங்கி வரக் கண்டு விபரம் கேட்டபோது வழி வழியாகத் தம் குடும்பத்தினர் அவ்வேலை வைத்து வழிபடுவதாகக் கூறினார். இளவரசியும் அங்குக் கோயில் கட்ட முடிவு செய்து சோழ

நாட்டிலிருந்து முருகப் பெருமான் திருவுருவையும் சிற்பிகளையும், நித்திய நைமித்திய பூசைகள் செய்ய ஆட்களையும் கொண்டு வந்தார். அங்குக் கோயில் கட்டி தேவப் பிரதிஷ்டை செய்து கும்பாபிஷேகமும் செய்வித்தார்.

பின் ஆங்கிலப் படையெடுப்பின்போது கோயில் சேதமானது. பின்னர் அக்கோயில் புதுப்பிக்கப்பட்டது. மூலமூர்த்தியின் பீடத்தின் அடியில் பெரிய இயந்திரம் ஒன்று உண்டு என்பர்.

## 295. வடபழனி

சென்னை நகரின் மேற்கே கோடம்பாக்கத்தை அடுத்து அமைந்துள்ளது. சோமாஸ் கந்த பாவனையில் பழனியாண்டவர் கிழக்கு நோக்கி எழுந்தரு ளியுள்ளார்.

சித்தி விநாயகர், சொக்கநாதர், மீனாட்சி, அருணகிரியார், ஆஞ்சநேயர், ஆறுமுகம் சந்நிதிகள் உள்ளன.

வள்ளி, தெய்வசேனா தேவியருடன் மயில் மீது எழுந்தருளியுள்ளார் முருகப் பெருமான்.

அங்காரகருக்குத் தனிச் சந்நிதி உள்ளது. திருக்குளம் கோவிலின் கீழ்ப்பக்கம் உள்ளது.

இங்கு காவடி, பால்குடம் எடுப்பது சிறப்பு. ஆடிக்கிருத்திகை கந்தர் சஷ்டி, புத்தாண்டு சிறப்பாகும்.

## 296. விநாயக மலை

இத்தலம் இப்போது பிள்ளையார் பட்டி என அழைக்கப்படுகிறது. திருப்பூரில் இருந்த 8 கி.மீ. இல் உள்ளது.

விநாயகர் சிறப்பானவர். வாதாபியிலிருந்து கொண்டு வரப்பட்டவர். இவ்விநாயகர் திருவுரு தனிச் சிறப்பினையுடையது. குடவரையில் எழுந்த ருளியுள்ளார். பல்லவர் காலத் திருப்பணி. வடக்கு நோக்கிய சந்நிதியில் சண்முகப் பெருமான் தேவியருடன் எழுந்தருளியுள்ளார்.

இலங்கையில் கதிர்காமம் அருகிலும் ஒரு விநாயக மலை உள்ளது.

## 297. வெண்ணெய் மலை

கரூரிலிருந்து வடக்கிழக்கே 3 கி.மீ. தூரத்தில் வெங்கமேடு என்ற இடத்தில் அமைந்துள்ளது.

பெயருக்கு ஏற்றார் போல வெண்ணெய் போன்ற வெண்மையான நிறமுடைய பாறைகளை உடைய சிறிய குன்றின் மேல் தண்டாயுதபாணி யாய் குமரன் கிழக்கு நோக்கியவாறு அருள் பாலிக்கின்றார். 35 படிகள்

உள்ளன. முருகப் பெருமானை வலம் வரும்போது அம்மையையும், அப்பனையும் வணங்கலாம்.

இவர் பாலசுப்பிரமணியன் என்ற திருநாமம் கொண்டவர். 4 அடி உயரம் கொண்ட முருகப் பெருமானைத் தேவர்கள் தைமாதம் வந்து வணங்கிச் செல்வதாக ஐதீகம். பிரமன் வழிபட்ட தலம்.

குழந்தைப் பேறு இல்லாதவர்கள் இங்குள்ள தேனு தீர்த்தத்தில் தீர்த்த மாடி முருகனை வழிபட்டால் குழந்தைப் பேறு கிட்டும். இத்தீர்த்தம் காமதேனுவால் உருவாக்கப்பட்டது.

இத்தல முருகப் பெருமான் வேல், மயில், வள்ளி, தெய்வயானை இன்றி தனியே காட்சி தருவது சிறப்பு.

இம்மலையை வலம் வந்தால் கயிலை மலையை வலம் வந்த பலன் கிட்டுமென்பர் எனத் தலபுராணம் கூறுகின்றது. கருவூராருக்குத் தனிச் சன்னிதியுள்ளது. இத்தலத்திற்கு நவநீதகிரி என்ற பெயரும் உண்டு.

தை மாதம் பத்து நாட்கள் பிரம்மோற்சவம். தைப்பூசம் சஷ்டி சிறப்பு. ஆடிக் கிருத்திகையன்று உற்சவர் கரூர் வந்து காட்சி தருகின்றார். மாதக் கார்த்திகை சிறப்பு.

## 298. வெள்ளி மலை

நாகர்கோவிலுக்கு வடமேற்கே 13 கி.மீ. தூரத்தில் உள்ளது.

200 அடி உயரக் குன்றின் மீது கோயில் அமைந்துள்ளது. கிழக்கிலும் மேற்கிலும் படிகள் உள்ளன. கிழக்கிலுள்ள படிகள் 108 ஆகும். மூலவர் குமரன் வடிவில் மயிலுடன் கிழக்கு நோக்கிக் காட்சி தருகின்றார்.

இங்குள்ள 8 அடி ஆழச் சுனையில் வற்றாத தீஞ்சுவையுடைய ஊருணி உள்ளது. இது முருகப் பெருமானின் வேலால் உருவாக்கப்பட்டது. கடைசி வெள்ளி சிறப்பு.

சஷ்டி சிறப்பாகக் கொண்டாடப்படுகின்றது.

ஸ்ரீ விவேகானந்த மந்திரம் என்னும் இராமகிருஷ்ணர் மடம் மலையின் கீழே உள்ளது.

## 299. வேளுக்குறிச்சி

நாமக்கல்லை அடுத்துள்ளது.

குன்றில் குடிகொண்ட குமரப் பெருமான் வேடன் வடிவில் எழுந்தருளி அருள்பாலிக்கின்றார்.

இங்கே வேட வடிவு கண் கொள்ளாக் காட்சியாக உள்ளது. வள்ளியைக் காணச் சென்ற வேடனான குமரனே இங்கு வேட வடிவில் காட்சி தருகின்றார்.

## 300. ஹரிப்பாடு

கொல்லம் மாவட்டத்திலுள்ளது.

மிகப் பெரிய கோவில் 800 ஆண்டுகட்கு முன் சந்நியாசி ஒருவருக்கு 'அரை நாழி நற்பறை' என்னும் இடத்தில் இச்சுப்பிரமணியர் கிடைத்தாராம்.

60 ஆண்டுகட்கு முன் தீக்கிரையாகிய கோயிலைப் புதுப்பித்துள்ளனர்.

தைப்பூசம் மிகவும் சிறப்பு. காவடியாட்டம் முக்கிய வழிபாடாகக் கொண்டாடப்பட்டு வருகின்றது.

## 301. பொள்ளாச்சி

இங்குள்ள அருள்மிகு சுப்பிரமணிய சுவாமி திருக்கோயில் முன்னர் திருவகத்தீசுவரமுடையார் கோயில் என வழங்கப்பட்டது.

இங்கு முருகப் பெருமான் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் விளங்க மயில் மீது சுகாசனத்தில் அமர்ந்த கோலத்தில் காட்சி தருகின்றார். இவரது திருக்கரங்களில் கத்திரி முத்திரையும், வச்சிரமும், வரத, அபய முத்திரையும் காணப்பெறுகின்றன. திருவாசி, மயில், முருகப் பெருமான் ஒரே கல்லால் உருவாக்கப்பட்டுள்ளன. மயிலின் தலை இடப்புறம் உள்ளத னால் இதைத் தேவமயில் என்பர். தேவியர் இருவரும் இருபுறமும் காட்சி தருகின்றனர்.

இங்குள்ள சிவபிரான்: சுந்தரேசுவரர், இறைவி: மீனாட்சியம்மன். பிரகா ரத்தின் தென்மேற்கு மூலையில் விநாயகப் பெருமான் பெரிய திருவுரு வுடன் காட்சி தருகின்றார்.

இங்குள்ள திருமண மண்டபத்தில் சிவபிரான் சந்நிதிக்கு நேர் எதிரில் மேல் விதானத்தில் 12 இராசிகள் கொண்ட சதுர அமைப்பு உள்ளது. ஒரே கல்லில் யாளியும் அதன் வாயினின்று 3 வளையங்கள் ஒன்றில் ஒன்றாகப் பிணைத்துத் தொங்குவதும் கலைச்சிறப்பு வாய்ந்தன.



# முருகப் பெருமானின் திருவுருவங்கள்

முருகப் பெருமான் பல்வேறு திருக்கோலங்களில் அடியவர்களின் பரிபாக நிலைக்கு ஏற்ப உருவம் கொண்டு எழுந்தருளி குறைகளைக் களைந்து அருள்பாலிக்கின்றார்.

நின்ற திருக்கோலம், மயில் மீது அமர்ந்த திருக்கோலம், மயிலின் அருகில் நின்ற கோலம், ஒரு திருமுகம், இரு திருமுகம், ஆறுமுகம், ஒரு திருக்கரம், இரு திருக்கரங்கள், நான்கு திருக்கரங்கள், ஆறு திருக்கரங்கள், எட்டு திருக்கரங்கள், பன்னிரு திருக்கரங்கள் இவைகளோடும் காட்சி தருகின்றார். ஒரு தேவி, இருதேவியர் உடன் விளங்கவும், குமரனாக, பாலகனாக, கிழவனாக, வேடவனாகக் கோலம் கொள்கிறார். பத்மாசனம், சிங்கம், யானை மீது அமர்ந்தும், அருகில் எழுந்தருளிய கோலங்களும் உண்டு.

பொதுவாக அமர்ந்த திருக்கோலத்தில் இரு திருக்கரங்களும் நின்ற திருக்கோலத்தில் நான்கு திருக்கரங்களும், மயில் மீது அமர்ந்த திருக் கோலத்தில் 6,8,12 திருக்கரங்களும் காணப் பெறும்.

முருகப் பெருமானின் குழந்தை வடிவங்கள் ஆறு. அவை பாலசுப்பிர மணியர், காங்கேயர், கார்த்திகேயர், குழந்தை வேலன், சரவணபவன், ஸ்கந்தன் ஆகும். பிரம்மச்சாரி வடிவங்கள் மூன்று. அவை: தேசிக சுப்பிரமணியர், குருபரன், ஞானசக்திதரன். யோக (தவ) வடிவத்தில் யோகாசாரிய மூர்த்தியாகக் காட்சி தருவார்.

வீரவடிவில் (பராக்கிரம வடிவம்) காட்சி தரும் வேலவனின் வடிவங்கள் பத்து. அவை: அஜாரூடர், சேனாபதி, சகிவாகனர், வில்லேந்திய வேலன், கஜாரூடர், பிரம்மசாஸ்தா, தாரகாரி, கிரௌஞ்சபேதனர், சகலகலாவல்லப மூர்த்தி, வராக ஹோன்மத்த பங்கமூர்த்தி ஆகும்.

தேவியருடன் காட்சி தரும் முருகப் பெருமான் தேவசேனாபதி, வள்ளி கல்யாணமூர்த்தி, சண்முகர், குமாரர் என நான்கு வகைப்படும்.

சண்முகன், சகிவாகனன், தேசிக சுப்பிரமணியன் ஆகிய மூன்று வடிவங் களில் மட்டும் பெருமான் மயில் மீது அமர்ந்து காணப் பெறுவார்.

இரு திருக்கரங்களை உடையன சாத்வீக மூர்த்தி, நான்கு திருக்கரங்களை உடையன இராக்ஷதமூர்த்தி, நான்கிற்கு மேற்பட்ட திருக்கரங்களை உடை யன தாமசமூர்த்திகள் எனப் புராணங்கள் குறிப்பிடுகின்றன.

முருகப் பெருமானின் திருவுருவங்கள் பதினாறு எனக் குமார தந்திரமும் ஸ்ரீதத்துவநிதி என்னும் நூலில் மேலும் 6 வடிவங்களும் சேர்த்து ஆக 22 வடிவங்கள் எனவும் குறிப்பிடப்பட்டுள்ளன. அவை: 1.சக்திதரர், 2.கந்தசாமி, 3.தேவசேனாபதி, 4.சுப்பிரமணியர், 5.கஜவாகனர், 6.சரவண பவர், 7.கார்த்திகேயர், 8.குமாரர், 9.சண்முகர், 10.தாரகாரி, 11.சேனானி,

12.பிரமசாஸ்தா, 13.வள்ளி கல்யாண சுந்தரர், 14.பாலசுவாமி, 15.கிரவுஞ்ச பேதனர், 16.சகிவாகனர், 17.அக்னிஜாதர், 18.சௌரபேயர், 19.காங்கேயர், 20.குகர், 21.பிரமசாரி, 22.தேசிகர் ஆகும்.

இவற்றில் சேனாபதி, சரவணபவன், கார்த்திகேயன், சண்முகன், தாரகாரி, கிரவுஞ்ச பேதனன், சேனானி ஆகிய திருவுருவங்களுக்கு ஆறு திருமுகங்களும் அக்னிஜாத சுப்பிரமணியருக்கு இரு திருமுகங்களும் சௌரபேய சுப்ரமணியருக்கு நான்கு திருமுகங்களும் காணப்படுகின்றன. ஏனைய வடிவங்களுக்கு ஒரு திருமுகம் மட்டுமே காணப்பெறும்.

இரு திருக்கரங்களை உடைய வடிவங்களில் 5 வகைகள் உள்ளன.

| வலது கரம் | இடது கரம் |
|---|---|
| 1. தாமரை மலர் | இடுப்பில் வைத்த திருக்கரம் |
| 2. அபயம் | இடுப்பில் வைத்த திருக்கரம் |
| 3. தண்டாயுதம் | இடுப்பில் வைத்த திருக்கரம் |
| 4. சக்தி (வேல்) | வச்சிரம் |
| 5. சக்தி (வேல்) | குக்குடம் (கோழி) |

நான்கு திருக்கரங்களை உடைய வடிவங்களில் 7 வகைகள் உள்ளன. அவை:

| | வலது கரம் | | இடது கரம் | |
|---|---|---|---|---|
| | முன்கரம் | பின்கரம் | முன்கரம் | பின்கரம் |
| 1. | அபயம் | சக்தி | வரதம் | வச்சிரம் |
| 2. | அபயம் | அட்சமாலை (ஜெபமாலை) | வரதம் | கமண்டலம் |
| 3. | அபயம் | அட்சமாலை | இடுப்பில் கை | கமண்டலம் |
| 4. | அபயம் | சக்தி | இடுப்பில் கை | குக்குடம் (கோழி) |
| 5. | அபயம் | சக்தி | இடுப்பில் கை | கமண்டலம் |
| 6. | அபயம் | சக்தி | அட்சமாலை | குக்குடம் |
| 7. | கட்கம் (கத்தி) | சக்தி | கேடயம் | குக்குடம் |

6 திருக்கரங்களை உடைய உருவங்களில் 3 வகைகள் உள்ளன. அவை:

| வலது கரம் | இடது கரம் |
|---|---|
| 1. அபயம் | கேடகம் |
| 2. கட்கம் | அட்சமாலை |
| 3. சக்தி | குக்குடம் |

8 திருக்கரங்களை உடைய வடிவங்களில் இரு வகைகள் உள்ளன. அவை:

| | |
|---|---|
| 1. வச்சிரம் | 1. பத்மம் |
| 2. சக்தி | 2. வச்சிரம் |
| 3. அபயம் | 3. சக்தி |
| 4. வரதம் | 4. அபயம் |
| 5. கட்கம் | 5. வரதம் |
| 6. கேடகம் | 6. கேடகம் |
| 7. பாணம் | 7. கட்கம் |
| 8. தனுசு | 8. பாசம் |

12 திருக்கரங்களை உடைய மூர்த்திகள் ஆறு வகை:

**வலது கரங்கள்**

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 1. | சக்தி | அம்பு | கத்தி | கொடி | கதை | அபயம் |
| 2. | சக்தி | அம்பு | அம்பு | சக்கரம் | பாசம் | நீட்டிய கை |
| 3. | சக்தி | கொடி | கத்தி | சக்கரம் | பாசம் | அபயம் |
| 4. | சக்தி | கொடி | கத்தி | தாமரை | அபயம் | அம்பு |
| 5. | சக்தி | வச்சிரம் | சக்கரம் | பாசம் | அங்குசம் | கதை |
| 6. | சக்தி | அம்பு | கத்தி | அபயம் | வில் | கேடயம் |

**இடது கரங்கள்**

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 1. | வச்சிரம் | வில் | கேடயம் | தாமரை | சூலம் | வரதம் |
| 2. | வச்சிரம் | சங்கம் | கோழி | தனுசு | தண்டம் | கலப்பை |
| 3. | வச்சிரம் | வில் | கேடயம் | கோழி | அங்குசம் | வரதம் |
| 4. | வச்சிரம் | பாசம் | கேடயம் | தண்டம் | அங்குசம் | வரதம் |
| 5. | சூலம் | அபயம் | தாமரை | தண்டம் | அங்குசம் | வரதம் |
| 6. | சூலம் | கோழி | சக்கரம் | பாசம் | அங்குசம் | வரதம் |

## 1. ஞானசக்திதரர்

ஒரு திருமுகம், இரு திருக்கரங்கள், வலது திருக்கரத்தில் சக்திவேல், இடதுகரத்தினைத் தொடை மீது வைத்திருப்பார். இவர் வலத்திருக்கரத்தில் உள்ள சக்திவேல் இச்சை, ஞானம், கிரியை என்னும் மூன்றையும் வடிவாகக் கொண்டது. இதனை மூன்று இலை கொண்ட வேல் என்பர். நின்ற திருக்கோலம். காத்தல், அழித்தல் ஆகிய சக்திகளைக் கொண்டவன் என்பதனை உணர்த்தும் திருவுருவம்.

*இச்சா ஞானக் கிரியையெனு மிவைமுன் றிலையாய்க் கிளைத்தெழுந்திட்*
*டச்சா னாழி யறச்சுவற்று மயில்வே லொருகை வலத்தமைத்து*
*நச்சா தவரைத் தெறுமொருகை நளினங் குறங்கி னமைத்திமை யோர்*
*விச்சா தரர்சூழ் ஞானசக்தி தரன துருவம் விதிப்போரும்*

—அகத்தியன் அருள்பெறு படலம் 64.

ஞானசக்தியாக வேலினை உடையதனால் ஞானசக்திதரர் எனப் பெயர் பெற்றார். முருகப் பெருமானின் திருவுருவ வகைகளை விளக்கும் ஸ்ரீதத்து வநிதி என்னும் நூல் ஒரு திருமுகமும் இரு கண்களும் நான்கு திருக்கரங்க ளும் கொண்டு அவற்றில் சக்தி, குக்குடம், வச்சிரம், அபயமும் விளங்க சடாமகுடம் தாங்கி வெள்ளெருக்கம் பூமாலையும், சந்தனப் பூச்சும், வெண் பூணூலும் தாங்கி வெண்ணிற முடையவராக விளங்குபவர், ஞானசக்தி சுப்பிரமணியர் எனக் குறிப்பிடுகின்றது.

தணிகைப் புராணம் ஒருகை வேல் ஏந்தி மற்றொரு கை தொடை மீது வைத்திருக்கக் காட்சி தருகின்றார் ஞான சக்திதர மூர்த்தி எனக் குறிப்பிடு கின்றது.

இத்திருவுருவே திருத்தணிகை மூலவர் திருவுருவாகும். வெற்றி தரும் வேலினை உடைய இவரை வழிபட எடுத்த காரியங்கள் வெற்றி பெறும்.

திருக்கண்டியூரில் ஞான சக்தி தரும் வடிவம் வலக்கையில் ஜபமாலையும் இடக்கையில் வஜ்ரசக்தியும் கொண்டு 'ஞானஸ்கந்தர்' என்ற பெயருடன் விளங்குகின்றார்.

## 2. ஸ்கந்தன் - கந்தசுவாமி

'ஸ்கந்தம்' என்றால் தோள் எனப் பொருள். வலிமை வாய்ந்த தோள் களை உடையவன். எனவே 'ஸ்கந்தன்' எனப் பெயர் பெற்றான். ஒன்று கூட்டப் பெற்றவன் என்பதனால் 'கந்தன்' எனப் பெயர் வந்தது. இதனையே கந்தபுராணம், ''சேயவன் வடிவம் ஆறும் திரட்டி நீ ஒன்றாய்ச் செய்தாய், ஆயதனாலே கந்தனாம் எனும் நாமம் பெற்றான்'' எனக் குறிப்பிடுகின்றது.

கடவுளர் பலரின் ஆற்றலும் கூறும் ஒருங்கே திரண்டவன். கந்து என்பதற்கு நடுதறி, தண்டாயுதம் எனப் பொருள்.

முருகனைப் போற்றும் பல நூல்கள் கந்தர் அனுபூதி, கந்தரலங்காரம், ந்தரந்தாதி, கந்தர் கலிவெண்பா, கந்தபுராணம், கந்த சஷ்டி கவசம் என்றே ழங்குகின்றது.

ஒரு திருமுகமும் இரு திருக்கரங்களும் விளங்க நின்ற திருக்கோலத்தில் லக்கையில் தண்டம் என்னும் ஆயுதத்துடன் இடக்கை இடுப்பில் விளங் த் துறவுக் கோலத்தில் தலைமுண்டிதமாய் உருத்திக்ஷ மணி மகுடம் தாங்கி காவணம் உடுத்திக் கொண்டு செந்தாமரை போன்ற நிறத்துடன் காட்சி ருபவர். இது பழனியாண்டவர் திருக்கோலம்.

*வைவாய்க் கணிச்சிப் படையென்ன வதிவித்த் திருங்கோ வணத்தண்டு*
*கைவாய் வலத்தின மைத்தருளிக் கடியி லிடக்கை பதித்தருளி*
*ஐவாய் வழங்கும் பொறிபுலனை யவித்த வுறுவ ரிமையவர்கள்*
*உய்வா னிறைஞ்ச வருள் வழங்குங் கந்த னுருவ முளுற்றுநரும்*

**—அகத்தியன் அருள்பெறு படலம் 65.**

ஸ்ரீ தத்துவநிதி ஒரு திருமுகமும், இரு கண்களும் நான்கு திருக்கரங்களும் டையவர்; குக்குடம், அபயம், வச்சிரம், வரதம், இவற்றைத் திருக்கரங்க ரில் தாங்கி வெண் தாமரை மலரில் வீற்றிருப்பவர்; மயிர் முடியில் ட்டப்பட்ட பூமாலையினை யுடையவர்; மேகலை ஆடை அணிந்து ணியணி பூண்டு வட்ட ஒளியோடு கூடிய புகை நிறத்தினை உடையவர் ன விளக்குகின்றது.

சித்தனாய் விளங்கும் இப்பெருமானை வழிபட்டால் எல்லாக் காரியங்க நம் சித்தியாகும்.

## 3. ஆறுமுக தேவசேனாபதி

தேவர்களாகிய சேனைக்குத் தலைவன், ஆன்மாக்களை ஆளும் தலை ர், தேவசேனா தேவியின் கணவர் எனப் பொருள்.

ஆறு திருமுகங்களும் பன்னிரு திருக்கரங்களும் உடையவன். இவர் ன் இடப்புறம் அமர்ந்திருக்கும் தாமரையினைத் திருக்கரத்தில் ஏந்திய தவசேனா தேவியை தொடை மீது உட்கார வைத்து இடக்கையால் அணைத்தும் வலக்கை அபய முத்திரையுடனும் காட்சி தருகின்றார். னைய பத்து திருக்கரங்களில் கேடயம், கத்தி, அங்குசம், குலிசம், வேல், பில், கதாயுதம், சேவல், தாமரை, பாசம் விளங்கும்.

*ஒருகை தனது வலக்குறங்கி னணங்கைத் தழுவி யுகளமுலை*
*மருவ வபய மொன்றாக வளர்தோல் வாள் சூலங்குலிசம்*
*பொருவேல் வாள்வில் கதைபுள்ளம் புயங்கோல் பத்துங் கரம்பத்தின்*
*இருவு மாறு முகத்தேவ சேனா பதிசீ ரிழைப்போரும்*

**—அகத்தியன் அருள்பெறு படலம் 66.**

ஸ்ரீதத்துவநிதி ஒரு திருமுகமும், இரு கண்களும், நான்கு திருக்கரங்களில் அபயம், வரதம், சங்கம், சக்கரம் இவற்றைக் கொண்டவர். கருநிறம் கொண்டவர். அணிகள் பூண்டு, வெண்ணூல் அணிந்து சந்தனப் பூச்சுகள் விளங்க புன்னகை பூத்த திருமுகத்துடன் காட்சி தருபவர் என விளக்குகின் றது.

சென்னிமலைத் திருக்கோயிலின் கருவறையின் வடக்கு வெளிப்புறச் சுவரிலுள்ள புரையில் ஒரு தலை, நான்கு கரங்களுடன் முன் இருகைகள் அபய வரத முத்திரையுடனும் பின் இருகைகள் சங்கும் சக்கரமும் விளங்கக் காட்சி தருகின்றார். இது அரிய படைப்பாகும்.

தேவேந்திரனின் திருமகள் தெய்வயானையின் மணவாளனான இப் பெருமானை வழிபட்டால் மங்களகரமான மணவாழ்வு பெறலாம்.

## 4. சுப்பிரமணிய மூர்த்தி

ஆனந்த மயமான பரவஸ்துவிலிருந்து தோன்றி ஒளிர்பவன், நல்ல வேதத்தின் தலைவன், சிறந்த தேவன் எனப் பொருள். பிராமணருக்கும் வேதத்திற்கும் முதன்மை மிக்க தலைவன் (சு + ப்பிரமணியன்) இன்பத்தி னையே இயல்பாக உடைய சிவபரம் பொருளின் வேறன்றி விளங்குபவன். (சு + பிரமம் + ந்யம்(ண்யம்) எனப் பாம்பன் சுவாமிகள் கூறுகின்றார். சு-சுகம், ஆனந்தம்; பிரமம் - சிவப்பரம் பொருள்; ந்யம்(ண்யம்) - அதிலிருந்து தோன்றி ஒளிர்வது. சிவனும் முருகனும் ஒருவரே. பேதமற்ற வர் எனப் பொருள் கூறுவர்.

ஒரு திருமுகமும், இரு திருக்கரங்களும் கொண்டு வலக்கை அபய முத்திரை காட்ட இடக்கையை இடுப்பில் வைத்தவாறு சூரியன் போன்று ஒளியுடையவராகக் காட்சி தருபவர். திருவிடைக்கழி முருகப் பெருமான் இத்தோற்றம் கொண்டவர்.

*இருள்கால் சீக்கு மணிக்கடக விடக்கை கடியிற் கொளவிருவி*
*வெருள்கா லுளத்தோர்க் கஞ்சலென விரவும் பயஞ்சா டபயமெனத்*
*தெருள்கா லொருகை வலத்தமைத்துத் திகழ்ந்து பணிவோர் நமக்கெல்லாம்*
*அருள்கால் விழிச்சுப் பிரமணிய விண்ணா லுருவ மமைப்போரும்*

—அகத்தியன் அருள்பெறு படலம் 67.

மற்றொரு திருவுருவாக நான்கு திருக்கரங்களில் தாமரை, அபயம், சக்தி, குக்குடம் விளங்க குங்குமம் போன்ற சிவந்த நிறமும், முழுமதி போல் விளங்கும் திருமுகமும் கொண்டு செஞ்சந்தனப் பூச்சும், செம்பட்டாடை யும், தோள்களில் கேயூரமும், ஆரம் இவற்றையும் உடையவராகவும் விளங்குபவர் என்பர்.

ஆனந்தமயமான இப்பெருமான் தம்மை வழிபடுபவர்களின் வினை களை நீக்கி ஆனந்தப் பேறு அருள்வார்.

## 5. ஸ்ரீ கஜவாகனர் - களிர் ஊர்திப் பெருமான்

முருகப் பெருமானை மயில் வாகனனாகவே பொதுவாக நாம் காண்கின்றோம். இருப்பினும் பல வாகனங்கள் அவருக்குண்டு. யானையும் இவருக்கு வாகனமே. இவ்வாறு யானையை வாகனமாக ஏற்ற முருகப் பெருமானின் திருவுருவினை ஸ்ரீ கஜவாகனர்-களிர் ஊர்திப் பெருமான் - கஜாரூடர் என்பர். மிகப் பழமையான கோயில்களில் முருகன் சந்நதிகளின் முன் யானை வாகனமே காணப்பெறும். திருத்தணிகை, சுவாமிமலை, உத்தரமேரூர் ஆகிய தலங்களில் காணலாம்.

அடியவர்களுக்கு அருள் புரியவும், அசுரர்களை வதம் செய்யவும் ''பிணிமுகம்'' என்னும் யானையின் மீதேறி முருகப் பெருமான் செல்வதாகப் புராணங்கள் கூறுகின்றன. இந்திரனின் ஐராவதமே பெருமானின் வாகனமாயிற்று.

ஒரு திருமுகமும், இரு கண்களும், வலது கை இரண்டிலும் குக்குடம், வரதமும் கொண்டு இடது கை இரண்டிலும் சக்தி, அபயம் கொண்டு ஆண் யானை மீது காட்சி தருபவர். யானை மீது அமர்ந்ததனால் 'கஜவாகனர்' எனப் பெயர் பெற்றார்.

மற்றொரு வகையாக ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு இடக்கையில் வரத முத்திரையும், மற்றொரு கரம் சேவலைப் பற்றியவாறும் வலக்கையில் ஒன்று வேலினையும் மற்றொன்று கத்தியினையும் ஏந்தியபடி காட்சி தருபவர்.

*ஒற்றை முகமு மிணைவிழியு மும்மைப் பயனு மொருங்களிக்கும்*
*கொற்ற வரத முன்றலைக்குக் குடமோ ரிரண்டு மிடங்கதிர்ப்ப*
*மற்றை வலப்பான் மணிவேலும் வாளுங் கதிர்ப்பக் கரநான்கும்*
*பெற்ற மதவெங் களிற்றூர்திப் பெருமா னுருவஞ் சமைப்போரும்*

—அகத்தியன் அருள்பெறு படலம் 68.

சிதம்பரம் கீழ்க் கோபுரத்தின் வெளிப்புற வாயிலின் வலப்புறம் உள்ளடங்கிக் காணப்பெறும் கஜவாகனர் கோழிக்குப் பதில் வச்சிரம் கொண்டு காட்சி தருகின்றார். திருமருகல் (தஞ்சை), வள்ளிமலையின் அருகில் உள்ள மேல்பாடித் திருக்கோயில்களில் கஜவாகனர் காட்சி தருகின்றார்.

இப்பெருமானை வழிபடத் துன்பங்கள் விலகும்.

## 6. சரவணபவர்

சரம் - நாணல், வனம் - காடு, நீர் (வனம் -வணம் ஆயிற்று), பவன் -தோன்றியவன். நீர் வளமிக்க நாணல் புல் நிறைந்த சரவணப் பொய்கையில் தோன்றியவன் எனப் பொருள். ''சிவாய நம'' என்னும் திருவைந்

தெழுத்து சிவனுக்குரியது போல 'சரவணபவ' என்னும் ஆறெழுத்து முருகப் பெருமானின் தாரக மந்திரமாகும்.

இவர் மஞ்சள் நிறத்தோடு அன்று பூத்த தாமரையினைப் போன்ற திருமுகத்தினை உடையவர். ஆறு திருமுகங்களும் பன்னிரு கண்களும், பன்னிரு திருக்கரங்களும் கொண்டவர். வலக்கரம் ஒன்று அபய முத்திரை காட்ட ஏனையவற்றில் வேல், மணி, கத்தி, தாமரை, சேவல் ஆகியனவும்; இடக்கரம் ஒன்று வரத முத்திரை காட்ட ஏனையவற்றில் கதாயுதம், உளி, வில், அம்பு, பாசக்கயிறு ஆகியனவும் கொண்டு தாமரை மலரில் நின்ற கோலத்தில் காட்சி தருபவர்.

*ஞாங்கர்ப் படைகே டகங்கண்டை நளினஞ் சேவல் கதையிடங்கம்*
*ஓங்கும் பகழி வாள்வரத மொளிரு மபயஞ் சிலையவைதாம்*
*தாங்குங் கரங்க ளீராறுந் தயங்கும் வதன மோராறும்*
*ஆங்க விளங்க வருட்சரவ ணபவ னுருவே மாக்குநரும்*

**—அகத்தியன் அருள்பெறு படலம் 69.**

ச-மங்கலம், ர-ஒளி, கொடை; வ-சாத்வீகம், ந-வேல்; பவன் - தோன்றியவன். மங்கலம், ஒளி, கொடை, சாத்வீகம், வீரம் என்னும் உயர்ந்த பண்புகளுடன் தோன்றியவன். சரவணன் என்பதற்குச் சிவன், திருமால் ஆகிய இருவரின் பண்புகளைக் கொண்டவன் எனப் பொருள். சிங்கத்துடன் நிற்கும் நிலையில் வேறுபட்ட திருவுருவாகச் சென்னிமலை யில் காட்சி தருகிறார். திருப்போரூரில் ஒரு திருமுகம், நான்கு திருக்கரங்க ளுடன் காட்சி தருகின்றார்.

இவரை வழிபட மங்கலம், ஒளி, கொடை, சாத்வீகம், வீரம் கிட்டும்.

## 7. கார்த்திகேயர்

கார்த்திகையில் தோன்றியவர், கார்த்திகைப் பெண்டிர் அறுவரால் சரவணப் பொய்கையில் வளர்க்கப்பட்டவர் என்பதனால் ஏற்பட்டது. வடநாட்டினர் கார்த்திகேயன் என்ற பெயரிலேயே சிறப்பாக வழிபடுகின்ற னர். ஆறு திருமுகங்களையும், ஆறு திருக்கரங்களையும் மத்தி சூரியன் போன்ற நிறத்தினையும் உடையவர். வலக்கரம் ஒன்றில் அபய முத்திரை யும் ஏனையவற்றில் வேலும் கத்தியும் விளங்குகின்றன. இடக்கரம் ஒன்றில் வரத முத்திரையும் ஏனையவற்றில் குலிசமும் கேடயமும் விளங்குகின்றன.

ஸ்ரீதத்துவநிதி ஒரு திருமுகமும் மூன்று கண்களும் பத்து திருக்கரங்களும் கொண்டவன். சூரியனைப் போன்ற ஒளி கொண்ட நிறமும் தலையில் வில்வ மாலையும் அணிந்து மயில்வாகனனாகக் காட்சி தருபவர். வலக்க ரங்களில் சூலம், சக்கரம், சக்தி, அங்குசம், அபயம் தாங்கியும் இடக்கரங்க ளில் தோமரம், பாசம், சங்கம், வச்சிரம், வரதம் தாங்கியும் காட்சி தருவதாகக் குறிப்பிடுகின்றது.

*சீர்த்த குலிசங் கேடகமே செழித்த வரத மிடப்பாலும்*
*கூர்த்த மணிவேல் வாளபயங் குலாவு வலப்பா லுங்கவின*
*ஏர்த்த வாறு மலர்க்கரமு மிலங்கும் வதன மோராலும்*
*சூர்த்த பிணிக டபுங்கார்த்தி கேய னுருவத் தொகுப்போரும்.*

—அகத்தியன் அருள்பெறு படலம் 70.

கும்பகோணம் ஆதிகும்பேசுவரர் திருக்கோவில், தாராகரம் ஐராவதேஸ் வரர் திருக்கோயில்களில் கார்த்திகேயர் சிறப்பாகக் காட்சி தருகின்றார்.

இப்பெருமானை அவர் தோன்றிய கார்த்திகைத் திருநாளில் வழிபட்டால் சகல சௌபாக்கியங்களும் கிட்டும்.

## 8. குமாரர் -குமாரசுவாமி

சிவபிரானின் குமாரன், ஆணவ மலத்தை அழிப்பவன், பிரம்மச்சாரி என்பதனால் இப்பெயர் வந்தது. இளமையோடு கூடிய திருவுருவமும் செந்நிற வடிவமும் கொண்டவன். ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் உடையவன். வலக்கைகளில் வில்லும், கத்தியும், இடக் கைகளில் குக்குட மும், கேடகமும் கொண்டவன். வலப்புறம் வள்ளிதேவி காட்சி தருவார்.

ஸ்ரீதத்துவநிதி செந்நிறமும், குழந்தை வடிவம் கொண்டு தலையில் மகுடம் அணிந்து தாமரைப் பூ மாலையினைக் கழுத்தில் அணிந்தவர்; ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டவர்; வலக்கையில் சக்தியையும் அபயத்தையும் கொண்டு, இடக்கையில் வரதமும் வச்சிரமும் கொண்டவர் எனக் குறிப்பிடுகின்றது.

கங்கை கொண்ட சோழபுரத்தில் குமாரதந்திரத்தில் குறிப்பிட்டுள்ள குமரப் பெருமானின் திருவுருவம் உள்ளது. ஒரு திருமுகம் நான்கு திருக்கரங்களை உடைய குமரப் பெருமானின் முன் வலக்கையில் கத்தியும் பின் வலக்கையில் சக்தியும் உள்ளன. (இப்போது இவை உடைந்த நிலையில் உள்ளன) பின் இடக்கையில் கேடயமும் முன் இடக்கையில் கோழியும் காணப்படுகிறது.

*வைத்த சுடர்வேல் வாளிரண்டும் வலபபா லிடப்பால் வாரணப்புள்*
*பைத்த மணித்தோ லோரிரண்டும் பயில வலர்ந்த நாற்கரமும்*
*முத்த முறுவற் குறமாது விளங்க முன்வந் தடுத்துமலக்*
*கொத்து விளியக் கடைக்கணிக்குங் குமார னுருவங் குயிற்றுநரும்.*

—அகத்தியன் அருள்பெறு படலம் 71.

நாகர்கோயிலிலிருந்து 16 கி.மீ. தொலைவில் உள்ள குமார கோயிலில் இப் பெருமான் வள்ளி தேவியுடன் கம்பீரமாக எழுந்தருளியுள்ளார். கங்கைகொண்ட சோழபுரம் திருக்கோயிலில் பஞ்சலோகப் படிமத்தில் இத்திருவுருவினைக் காணலாம்.

இப்பெருமானை வழிபட ஆணவ மலம் நீங்கும்.

## 9. சண்முகர் - ஆறுமுகர்

''நுங் குமாரன் உன் சொரூபத்தையும் எனது சொரூபத்தையும் கொண்டவனாதலின் அறுமுகனாயினன்'' என இறைவன் உமைக்கு உரைப்பதாக ஸ்கந்த புராணம் குறிப்பிடுகிறது. ஐந்து முகத்தோடு அதோ முகமும் தந்து திருமுகங்கள் ஆறாகிச் செந்தழற்கண் ஆறும் ஒருமுகமாய்த் தீய்ப்பொறி ஆறு உய்ப்ப எனக் கந்தர் கலிவெண்பா குறிப்பிடுகின்றது. ஞானம், ஐஸ்வர்யம், திரு, வீரியம், வைராக்கியம், புகழ் என்னும் இறைமைக் குணங்கள் ஆறினையும் உடையவன்.

மயில் வாகனத்தில் வலப்பக்கம் வள்ளிதேவியும் இடப்பக்கம் தேவசேனாபதியும் விளங்க அமர்ந்த கோலத்தில் ஆறு திருமுகங்களும் பன்னிரண்டு திருக்கரங்களும் கொண்டவர். வலக்கை ஒன்று அபய முத்திரையுடனும் ஏனையவற்றில் வேல், கத்தி, சக்கரம், அம்பு, பாசக் கயிறும் இடக்கை ஒன்றில் வரத முத்திரையும் ஏனையவற்றில் குலிசம், கேடயம், சேவல், வில், அங்குசம் காணப் பெறுகின்றன.

சண்முகர் என்னும் வடமொழிப் பெயருக்கு ஆறுமுகங்களை உடையவர் எனப் பொருள். திருச்செந்தூர் முருகப் பெருமான் ஆறுமுகனாகக் காட்சி தருகின்றார்.

ஸ்ரீதத்துவநிதி செந்நிறமும், ஆடை அணிகளும் விளங்க அழகான திருவுருவோடு மயில் மீது எழுந்தருளியிருப்பவர். சக்தி, சரம், கட்கம், சக்கரம், பாசம், அபயம் முதலியவற்றை வலக்கைகளிலும் குக்குடம், தனுசு, கேடகம், சங்கம், கலப்பை, வரதம் இவற்றை இடக்கைகளிலும் கொண்டவர். சயை, விசையை என்னும் இரு தேவியரும் இருபுறமும் நின்ற திருக்கோலமாகக் காட்சி தருவார் எனக் குறிப்பிடுகின்றது.

*படைவேல் பகழி வாடிகிரி பாச மபயம் வலத்திடத்துச்*
*சுடர்வார் குலிசஞ் சிலைதோல்புஃ டோட்டி வரத மிவைபரித்த*
*தடவான் கரமு முகமாறுந் தனிமா மயிலு மிருமாதர்*
*உடனா மெழிலுந் தருமாறு முகவ னுருவ முஞற்றுநரும்*

—அகத்தியன் அருள்பெறு படலம் 72.

இப்பெருமானை வழிபட்டால் சிவசக்தியை ஒருங்கே வழிபட்ட பலன் கிட்டும்.

## 10. தாரகாரி - தாரகாந்தக மூர்த்தி

சூரபத்மன் தம்பியான தாரகாசுரனைக் கொன்றதனால் தாரகாரி எனப் பெயர் பெற்றார். ஆறு திருமுகங்களும் பன்னிரண்டு திருக்கரங்களும் கொண்டவர். வலக்கரத்தில் அபய முத்திரையும், சேவல், கொடி, கேடயம், அங்குசம், பாசக் கயிறு, குலிசமும், இடக்கரத்தில் வரத முத்திரையும் கத்தி,

திரிசூலம், சக்கரம், தண்டம், வில் தாங்கியவர். கோடி சூரியனின் பிரகாசம் போன்ற தோற்றப் பொலிவினைக் கொண்டவர்.

ஸ்ரீதத்துவநிதி: செந்நிறத்தினராய் யானை வாகனனாகக் காட்சி தருபவர். ஒரு திருமுகமும் மூன்று கண்களும் ஆறு திருக்கரங்களும் உடையவர். யானை மீது அமர்ந்துள்ள இவரது வலக்கைகளில் அபயம், கட்கம், சக்தியும் இடக்கைகளில் கேடகம், அட்சமாலை, குக்குடமும் கொண்டு விளங்குபவர் என விளங்குகின்றது.

*வரதங் கொடிகே டகந்தோட்டி வார்ந்த வெறும்ப்பா சங்குலிசம்*
*பரவு மபயம் வாள்சூலம் பரிதி முசலம் வேன்முந்நாற்*
*கரமும் விளங்க வறுமுகமுங் கதிர்ப்ப விழிகள் கருணைமழை*
*தரவென் றருளுந் தாரகரந் தகன்சீ ருருவஞ் சமைப்போரும்*

—அகத்தியன் அருள்பெறு படலம் 73.

தஞ்சைப் பெரிய கோவிலில் இராசராசன் திருவாயிலின் இடப்புறம் மேல் பகுதியில் ஒரு திருமுகமும் பன்னிரு திருக்கரங்களும் கொண்ட முருகப் பெருமான் யானை மீது காட்சி தருகின்றார். இத்தகைய இரு திருவுருவங்கள் உள்ளன.

விராலிமலைப் பெருமான் தாரகாரி வடிவில் சிறப்புடன் விளங்குகின்றார். உத்திரமேரூர் திருக்கோயிலிலும் இவ்வடிவினைக் காணலாம்.

இப்பெருமானை வழிபட்டால் உலக மாயையிலிருந்து விடுபடலாம்.

## 11. சேனானி மூர்த்தி -சேனாபதி

படைத்தலைவன் எனப் பொருள். வீரர்களுக்குள் யான் சேனானியாகத் திகழ்கிறேன் எனக் கீதையில் கண்ணன் கூறுகின்றார். அதுபோல் வீரர்களுள் சிறந்த படைத்தலைவனான முருகப் பெருமான் சேனானி எனப் பெயர் பெற்றார். தேவர்களின் படைக்குத் தலைவன், சேனைக்குப் பதியாக - தலைவனாக விளங்கியதனால் சேனானி, சேனாபதி எனப் பெயர். அடியவர்களின் துன்பங்களை நீக்குபவன் சேனாபதி.

இவர் ஆறு திருமுகங்களும் பன்னிரு திருக்கரங்களும் உடையவர். வலக்கை அபய முத்திரையும் கதாயுதம், கத்தி, திரிசூலம், வேல், அங்குசமும் கொண்டு, இடக்கை வரத முத்திரையும் குலிசம், அம்பு, தாமரை தண்டாயுதம், பாசக்கயிறு கொண்டும் விளங்கும்.

*அபய முசலம் வாள்சூல மயில்வே றோட்டி வலம்வரதம்*
*தபுதீர் குலிசஞ் சிலைபதுமந் தண்டங் கதைமற் றிடமாக*
*உபய வீராறு கரதலமு மொளிர்வித் தாறு முகந்தோற்றிச்*
*சுபநன் கருளி யிடர்துமிக்குஞ் சேனா பதிசீர் தொகுப்போரும்*

—அகத்தியன் அருள்பெறு படலம் 74.

இத்திருவுருவினை வடாற்காடு மாவட்டத்தில் தேவிகாபுரத்தில் காண லாம்.

இப்பெருமானை வழிபட்டால் விரோதிகளிடம் வெற்றி, போட்டி, பந்தயங்களில் வெற்றி கிட்டும். பொறாமை நீங்கும்.

## 12. பிரம்ம சாஸ்தா

சிவபெருமானைக் கயிலையில் வணங்கச் சென்ற பிரம்மா, அங்கே வழியில் வீற்றிருந்த முருகப் பெருமானை மதியாது செருக்குடன் சென்றார். முருகப் பெருமான் வீரபாகுத் தேவரை அனுப்பி பிரம்மனைப் பிடித்து வரச் செய்து அவரது பெயர், தொழில் என்ன என வினவினார். அவர் தாம் வேதம் உணர்ந்தவர் எனக்கூற முருகப் பெருமான் அவரிடம் பிரணவப் பொருள் கேட்டார். பொருள் தெரியாது மயங்கி நின்ற பிரம்மனைத் தலையில் குட்டி செருக்கினை அடக்கிச் சிறையில் அடைத் தார். பின் பிரமனது படைப்புத் தொழிலைத் தாமே ஏற்றார். அத்திருவுரு வமே பிரம்ம சாஸ்தா திருவுருவாகும். காஞ்சி குமர கோட்டம், திருப்போ ரூர் முருகன் பிரம்மசாஸ்தா திருவுருவாகும்.

ஒரு திருமுகமும், நான்கு திருக்கரங்களும் விளங்க செந்தாமரை போன்ற முகத்தையும் உடையவர். வலக்கரத்தில் ஒன்று அபய முத்திரையுடனும் மற்றொன்றில் ருத்திராக்ஷ மாலையும் இடக்கரத்தில் ஒன்று வரத முத்திரை யுடனும் மற்றொன்றில் கமண்டலமும் விளங்கும். இப் பெருமானே பிரணவப் பொருள் கூறாத பிரமனைத் தலையில் குட்டி சிறையில் அடைத்தவர். இவரை வள்ளிதேவியோடு கூடியவராகவும் கூறுவர்.

*வரத மணிக்குண் டிகையிரண்டும் வாமத் திருக்கைத் தலமாக்கிப்*
*புரவு புரிய மபயமொடு புரைதீ ரக்க வடம்வலப்பால்*
*இரவை யிரிக்கும் வலத்தமைத்திட் டெல்லா வுலகு மினிதளித்துட்*
*பிரம சாத்த னெனப்பொலிந்த பெருமா னுருவம் பிறக்குநரும்*

**—அகத்தியன் அருள்பெறு படலம் 75.**

திருக்கள்ளில் சிவநந்தீசுவர் ஆலயத்தில் சிவநந்திசுவரருக்கும் ஆனந்த வல்லிக்கும் இடையில் முருகப் பெருமான் பிரம்ம சாஸ்தா வடிவில் எழுந்தருளியுள்ளார். காஞ்சி குமரகோட்டம், ஆனூர், பாகசாலை, சிறுவா புரி முதலிய தல மூலவர்களும் பிரம்ம சாஸ்தா வடிவே. ஆனூரில் கையில் மலர் தாங்கி பிரம்ம சாஸ்தா வடிவில் உள்ளார். இது போல் வேறுஎங்கும் காண முடியாது.

திருப்போரூர் திருக்கோவிலின் இரண்டாவது சுற்றின் நுழைவாயிலை அடுத்துள்ள முருகப் பெருமான் பிரம்ம சாஸ்தா கோலத்தில் யானை ஊர்தியுடன் காட்சி தருகின்றார். இது அபூர்வப் படைப்பாகும்.

இவரை வழிபட்டால் சகல வித்தைகளும் கை கூடும்.

## 13. வள்ளி கல்யாண சுந்தரர்

வள்ளி தேவியை மணம் புரியும் எழிலார்ந்த திருக்கோலமே வள்ளி கல்யாண சுந்தரர் கோலம். செந்நிறம் கொண்ட முருகப் பெருமானின் அருகில் வலப்புறம் கருநிறம் கொண்ட வள்ளி தேவியும் எதிரில் பிரம்மா மணச் சடங்குகளை நடத்த விஷ்ணு கையில் நீர்ச்சொம்புடன் தாரைவார்க்க, சிவனும் உமையும் ஆசி வழங்கக் காட்சி தரும் பெருமான் இவர். பெருமானும் தேவியும் மணக் கோலத்துடன் ஆபரணங்களோடும் பீதாம்பரங்களோடும் வீற்றிருப்பார். இவர் திருமாலின் திருமகளான சுந்தர வல்லியேயாதலால் திருமால் தாரை வார்த்துக் கொடுக்கின்றார்.

இவர் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் விளங்க வலக்கரத்தில் ஒன்று அபய முத்திரையுடனும் மற்றொன்றில் உத்திராக்ஷ மாலையைக் கொண்டும் இடப்புறக் கரங்களில் ஒன்றில் ரத்னக்கும்பம் இருக்க மற்றொரு கை இடையில் வைக்கப்பட்டிருக்கும்.

*அல்யாப் பவிழ்க்கும் வலக்கரங்க ளபய மக்க வடந்தாங்க*
*வெல்யாப் புறுத்த மணிக்கடமுங் கடியு மிடக்கைத் தலஞ்சேரச்*
*சொல்யா முனைய வள்ளிவலந் துன்ன மணிநீ ரிவாக்கக்*
*கல்யா ணத்தி னெழில்வாய்ந்த கடவு ளுருவங் காண்போரும்*

—அகத்தியன் அருள்பெறு படலம் 76.

திருப்போரூர் திருக்கோயில் மண்டபத்தில் உள்ள தூணில் இவ்வரிய வடிவம் உள்ளது.

தடைபட்ட திருமணம் கைகூட இப் பெருமானை வழிபட வேண்டும்.

## 14. பாலசுப்பிரமணியர் -பால சுவாமி

முருகன் என்ற சொல்லுக்கு அழகன், இளமை உடையவன் எனப் பொருள். இளமையும் அழகும் இறைமையும் மிக்க நிலையில் விளங்கும் முருகனே பாலசுப்பிரமணியர் எனப் பெயர் பெறுகின்றார்.

ஒரு திருமுகமும் இரு திருக்கரங்களும் விளங்க இடது கையினை இடுப்பில் வைத்து வலக்கையில் தாமரை மலர் விளங்க அழகிய குழந்தை வடிவில் உயர்ந்த தோளும் செந்தாமரை போன்ற நிறத்துடனும் திருவடிகளில் கிண்கிணியுடன் காட்சி தருபவர்.

இவரை இரு கரங்களிலும் தாமரை ஏந்தியவராகவும் குறிப்பிடுவர்.

***கடியி லிடக்கைத் தலமிருவிக் கமலம் வலக்கைத் தலமேந்தி***
***அடியின் மணிக்கிண் கிணிசுவைஇ யமரும் பால வுருத்தோற்றி***
***முடிக ளுரிஞ வெதிர்வணங்கு முகுந்தன் முதலோர்க் கருள்சுரக்கும்***
***படியி லெழிற்சுப் பிரமணிய பகவ னுருவம் பயிற்றுநரும்***

—அகத்தியன் அருள்பெறு படலம் 77.

திருச்செந்தூர், திருக்கண்டியூர், ஆண்டார் குப்பம் திருவுருவங்கள் இவ் வடிவினை உடையதே.

உடல் குறைகள் நீங்கவும் உடல் நலம் பெறவும் இவரை வழிபட வேண்டும்.

## 15. கிரௌஞ்ச பேதனர்

கிரௌஞ்ச மலையாக உருமாறி வந்த அசுரனைப் பிளந்த திருக்கோலமே இது. சங்க நூல்கள் 'குருகுபெடர்க் குன்றம் கொன்றோன்' என்று குறிப்பிடப் படுகின்றது. குறுந்தொகையில் கடவுள் வாழ்த்துப் பாடல் இத்திருவுரு பற்றியதாகும்.

ஆறு திருமுகங்களும் எட்டு திருக்கரங்களும் கொண்டவர். வலக்கையில் அபய முத்திரையுடன் வேல், கத்தி, கம்பும் ஏந்தி இடக்கை வரத முத்திரையுடன் குலிசம், கேடயம், வில் ஏந்திக் காட்சி தருபவர்.

இவரை மயில் வாகனத்தின் மேல் இரு கரங்களிலும் வேல் கொண்டு கிரௌஞ்சமலையைத் துளைக்கும் தோற்றத்துடனும் காட்டுவர்.

ஸ்ரீதத்துவநிதியில் செந்நிறமும் மூன்று கண்களும் ஒரு திருமுகமும் கொண்டவராக நான்கு திருக்கரங்களில் வரதம், அபயம், மலர் அம்பு, கரும்பு வில்லுடனும் குறிப்பிடப்பட்டுள்ளது.

*அழலு நெடுவேல் வான்பகழி யபயம் வலநாற் கரத் தமைத்துத்*
*தழல்வச் சிரங்கே டகம்வரதஞ் சாபமிடநாற் கரந்தாங்கி*
*எழின்மிக் கொழுகு முகமாறு மிலங்கத் தோற்றிக் கிரவுஞ்சம்*
*புழைபட் டழியப் படைவிடுத்த புத்தே ளுருவம் பொறிப்போரும்*

—அகத்தியன் அருள்பெறு படலம் 78.

இப்பெருமானின் அரிய வடிவினைத் திருநெல்வேலி மாவட்டம் திருக்கு றுங்குடி நம்பி கோயிலிலும், தஞ்சை மாவட்டம் திருநனிப் பள்ளிக் கோயிலிலும் காணலாம்.

துன்பங்கள், மனச் சஞ்சலங்கள் விலகிட இப்பெருமானை வழிபட வேண்டும்.

## 16. சகிவாகனர் - மயில் வாகனர்

மயிலுக்குச் 'சகி' எனப் பெயர். எனவே சகிவாகனன் எனப் பெயர். மயில் தோகை விரித்து நிற்பது ஓங்கார வடிவாகக் காட்சி தரும். முருகப் பெருமான் அத்தகைய மயில் மீது எழுந்தருளிக் காட்சி தருகின்றார்.

ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் விளங்க வலக்கை ஒன்றில் அபய முத்திரையும் மற்றொன்றில் வேலும் இடக்கை ஒன்றில் வரத முத்திரையும் மற்றொன்றில் குலிசத்துடம் காட்சி தருபவர்.

இம்மூர்த்தி பேதம் படைக்கலன்கள் வேறுபாட்டாலும் உருவ அமைப்பாலும் ஏழு வகையாக அமைந்திருக்கும்.

1. பவழ நிறத்துடன் அசுரர்களை வென்று தேவர்களைக் காக்கும் பாவனையுடன் மயில் வாகனனாக ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களில் வச்சிரம், சக்தி, வரதம், அபயம் ஏந்தியவராகக் காட்சி தருபவர்.

2. செந்நிறமும் காளைப் பருவமும் வள்ளல் தன்மையை விளக்கும் திருமேனியுடனும் காதில் மகர குண்டலமும், தலையில் கரண்ட மகுடமும், கழுத்தில் தோள் வளையும், ஆரமும், திருக்கரங்களில் கடகமும், இடுப்பில் அரைஞானும் காற்சிலம்பும் அணிகலன்களும் விளங்க தேவியர் இருவருடன் நவ வீரர்கள் சூழ வெண் பூணூல் விளங்க ஆறு திருமுகங்களும் பன்னிரு கண்களும் நான்கு திருக்கரங்களுடன் திருக்கரங்களில் அபயம், வரதம், கமண்டலம், அக்ஷமாலைகளுடன் காட்சி தருபவர்.

3. இளப் பருவத்தினராக ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களில் சக்தி, குக்குடம், அபயம், வரதம் விளங்கக் காட்சி தருபவர்.

4. ஆறு திருமுகங்களும் பன்னிரு கண்ணும் பன்னிரு திருக்கரங்களுடன் பவள நிறமும் வலக்கைகளில் சக்தி, சரம், கடகம், அபயம், கொடி, கதைகளையும் இடக்கையில் வில், வச்சிரம், தாமரை, வரதம், சூலம், கடகம் இவற்றுடன் காட்சி தருபவர்.

5. மயில் வாகனனாகச் செம்பட்டு உடுத்தி, செம்மலர் சூடி, செம்மணி மாலைகளைப் பூண்டு பிறைசூடி ஆறு திருமுகங்களும் கொண்டவர். ஒவ்வொரு முகங்களிலும் மூன்று கண்களை உடையவர். பன்னிரு கரங்களில் சக்தி, கேடகம், கடகம், சூலம், அபயம், தீ, வில், சக்கரம், பாசம், குக்குடம், அங்குசம், வரதம் ஏந்தியவர்.

6. கோடிச் சூரிய பிரகாசம் உடையவராய் அன்று பூத்த தாமரை போன்ற மலர்ந்த கண்களும் புன்னகை பூத்த திருமுகமும் தளர்ந்து தொங்கும் முன் உடலைக் கொண்டவராய் வில்லைத் தரையில் ஊன்றி அம்பு தொடுத்த நிலையில் காட்சி தருபவர். இவர் ஒரு திருமுகமும் இரு திருக்கரங்களும் உடையவர். கரங்களில் குலிசம், சக்தி உள்ளன.

7. ஒளிவிடும் கேசபாசங்களும் செம்பொன் நிறமும் இரத்தின நீலக் கல்லாகிய இரதம் போன்ற மயில் வாகனத்தின் மீது அமர்ந்த தோற்றமுடையவர். ஒரு திருமுகமும் மூன்று கண்களும் நான்கு திருக்கரங்களில் அபயம், வரதம், பாசம், அங்குசம் விளங்கக் காட்சி தருகின்றார்.

*புலிங்கம் கதிப்பத் தீத்தும்மும் பொரு வேல் அபயம் வலத்திருகைத்*
*தலங்கொண்டு இடப்பால் இரு கரத்தும் தக்கவரதம் வச்சிரமும்*
*இலங்க அணிந்து திரைக் கடலும் எழு பல்வரையும் உலகு அனைத்தும்*
*குலுங்கக் கடவும் மயில் ஊர்திக் கோமான் உருவம் இடற்று நகும்.*

—தணிகைப் புராணம் அகத்தியன் அருளிய படலம் 79.

இன்ப வாழ்வு கிட்ட இப்பெருமானை வழிபட வேண்டும்.

## 17. அக்னிஜாதர்

இரு திருமுகமும் எட்டு திருக்கரங்களும் உடையவர். முன் நான்கு திருக்கரங்களில் வச்சிரம், குக்குடம், கேடகம், நெய் கிண்ணமும், பின் நான்கு திருக்கரங்களில் சுருவம், அட்ச மாலை, கட்கம், சுவஸ்திகம் இவற்றுடன் வெள்ளை நிறமும் கரிய கண்டமும் உடையவராகக் காட்சி தருகின்றார். தெய்வீக யாகாக்னியை வளர்க்கும் நிலையில் காட்சி தருகின்றார்.

இத்திருவுரு சில மாற்றங்களுடன் சென்னிமலையில் காணப் பெறுகின்றது. வேறு எங்கும் இவ் அரிய திருவுருவினைக் காண முடியாது. இப்பெருமானை வழிபட்டால் யாகம் செய்த புண்ணியம் கிட்டும்.

## 18. சௌரபேயர்

செந்தாமரை போன்ற நிறத்துடனும் நான்கு திருமுகங்களும் எட்டுத் திருக்கரங்களும் எட்டு கண்களுடனும் தாமரை ஆசனத்தில் நின்ற திருக் கோலத்தில் காட்சி தருபவர். வலக்கால் பூமியிலும் இடக்கால் சிறிது வளைந்தும் காணப்படும். சக்தி, நீலோத்பலம், மலரம்பு, அபயம், வலக்கரத்திலும் வச்சிரம், கரும்பு வில், சூலம், வரதம் இடக்கரத்திலும் காட்சி தருகின்றது. தாமரை மீது அமர்ந்த கோலம். நிற்கும் நிலையில் இருப்பின் திரிபங்க நிலையில் இருக்க வேண்டும்.

சென்னிமலையில் வடபுறம் வெளிப்புறச் சுவரில் உள்ள புரையில் கோமுகத்திற்கு மேல் இத்திருவுரு நான்கு திருமுகங்களுடன் 6 திருக்கரங்களுடன் தாமரை மலரும் சூலமும் இன்றிக் காணப்படுகின்றது. வேறு எங்கும் காணமுடியாத அரிய திருவுருவமாகும். வாழ்வு வளம் பெற இவரை வழிபட வேண்டும்.

## 19. காங்கேயர்

கங்கையின் மைந்தனாதலால் காங்கேயன் எனப் பெயர் பெற்றார். இவர் செந்நிறத்துடன் ஒரு முகமும் மூன்று கண்களும் நான்கு திருக்கரங்களும் விளங்கத் தலையில் கரண்ட மகுடமும் விளங்கக் காட்சி தருபவர். இடது கைகளில் அரணிகட்டையும், கோழிக் கொடியும், வலது கைகளில் பரசும், பூரண கும்பமும் காட்சி தரும். மகர(மீன்) வாகனத்தினர்.

சிவானந்தப் பேறு கிட்ட இப்பெருமானை வழிபட வேண்டும்.



## 20. குகர்

அன்பர்களின் இதயமான குகைகளில் குடியிருப்பதனால் குகன் எனப் பெயர் பெற்றார். மலைக் குகைகளில் கோயில் கொண்டவர்.

கருநிறத்துடன் ஒரு திருமுகமும் மூன்று கண்களும் நான்கு திருக்கரங்களும் கொண்டவர். தலையில் இரத்தின கிரீடமும் வெள்ளை ஆடையும் வலக்கைகளில் வச்சிரமும் சூலமும் இடக்கைகளில் வரதமும் அபயமும் தரித்தவர். இடப்பாகத்தில் துணைவியாரோடு திருமணக் கோலத்தில் காட்சி தருவார்.

தகராகாச வித்தை பெற வேண்டுவோர் இப் பெருமானை வழிபட வேண்டும்.

## 21. பிரம்மசாரி

ஒரு திருமுகமும் இரு கண்களும் இரு திருக்கரங்களும் உடையவர். தலையில் அழகிய மயிரும், மார்பில் பூணூலும், ஆடையும் இடையில் முஞ்சிப்புல்லாலான அரைஞானும் கோவண ஆடையும், வலக்கையில் தண்டமும் இடக்கையில் வச்சிரமும் உடையவர்.

செந்நிறத்துடன் தாமரை மீது வலக்காலும் இடக்கால் சிறிது வளைந்தும் நின்ற திருக்கோலத்தில் காட்சி தருபவர்.

ஞானம் பெற இவரை வழிபட வேண்டும்.

## 22. தேசிகர்

எதிரில் சிவபிரான் குருவிடம் பாடம் கேட்கும் பாவனையில் கைகட்டி, வாய் புதைத்த நிற்க பிரணவ உபதேசம் செய்பவர்.

ஒரு திருமுகமும், ஆறு திருக்கரங்களும் கைகள் இரண்டில் சக்தியும் ஏனைய திருக்கரங்களில் அட்சமாலை, வரதம், அபயம், சின் முத்திரை விளங்கக் காட்சி தருபவர். முருகப் பெருமானின் எதிரே கல்லாலின் கீழே அமர்ந்து சனகாதி நால்வருக்கும் உபதேசம் செய்த சிவபிரான் தன் இடப்பக்கம் உமை விளங்க, தன் இடக்கையை மார்போடு அணைத்து வலக்கை கொண்டு வாய் புதைத்து ஏனைய இரு திருக்கரங்களில் உடுக்கையும் மானும் இருக்க உபதேசம் கேட்கும் நிலையில் விளங்கும் முருகப் பெருமானின் திருவுருவம் என்பர்.

திருப்போரூரில் இத்திருவினை செப்பு வடிவில் காணலாம். இப்பெருமானைச் சிவஞானம் பெற வணங்க வேண்டும்.



## சோமாஸ்கந்தர்

''ஸஹ உமா ஸ்கந்தர்'' என்பதே 'சோமாஸ்கந்தர்' என்றாயிற்று. சிவன், உமை, கந்தர் சேர்ந்து காட்சி தருபவர் எனப் பொருள்.

சிவனுக்கும் உமைக்கும் நடுவே சிறு குழந்தை வடிவில் தாயின் வலது தொடை மீது அமர்ந்த நிலையில் காட்சி தரும் பாலகன் வடிவம்.

சிவபிரான் இடக்காலை மடித்து வலது காலை தொங்கவிட்ட நிலையில் அமர்ந்த திருக்கோலத்தில் காட்சி தருவார். புலித்தோலினையும் பட்டினையும் அணிந்து நான்கு திருக்கரங்களில் வலத்திருக்கரங்கள் இரண்டில் மழுவும், அபயமும், இடத்திருக்கரங்கள் இரண்டில் மானும் வரதமும் விளங்கும். வலது காதில் மகா குண்டலம் அல்லது சிம்ஹ குண்டலமும் இடது காதில் பத்ர குண்டலமும் அல்லது இரு காதுகளிலும் விருத்த குண்டலமும் விளங்க ஜடாமகுடமும் சர்ப்ப கங்கணங்களும் விளங்க பல ஆபரணங்கள் அணிந்து காட்சி தருவார்.

பெருமானின் இடப்பக்கம் உமா தேவி வலது காலை மடித்து இடது காலைத் தொங்கவிட்டும் வலக்கரத்தில் தாமரை மலரும் இடக்கரம் சிம்ஹகரணம் அல்லது ஆசனத்தில் வைத்த நிலையிலும் கரண்ட மகுடம் தாங்கிக் காட்சி தருவார்.

அல்லது வலக்கரத்தில் தாமரை மலரும், இடக்கையில் வரதமும் கொண்டு காட்சி தருவார். தேவி பச்சைநிறத்துடன், சிவப்புப் பட்டாடை பூண்டு காட்சி தருவார்.

கந்த பெருமான் இருவருக்கும் நடுவே பாலகனாக உமையின் மடியில் அமர்ந்தோ, நடனக் கோ[illegible]த்துடனோ காட்சி தருவார். கரண்ட மகுடம், மகர குண்டலங்கள், சன்ன வீரம் அணிந்து கரங்களில் தாமரை மலருடன் காட்சி தருவார்.

நடனமாடும் கந்தன் திருவுருவாயின் இடக்கரம் பழத்துடனும் அல்லது தொங்கவிட்[illegible]லையிலும் வலக்கரம் சூசி முத்திரையுடனும் காட்சி தரும். சோமாஸ்கந்தர் திருவுருவின் இருபுறமும் பிரம்மாவும் திருமாலும் தம் தேவியருடன் நிற்பதும் உண்டு.

சோமாஸ்கந்தருக்குச் சிறப்பிடம் திருவாரூர். காஞ்சிபுரம் ஏகாம்பரேஸ்வரர் திருக்கோயிலும், குமர கோட்டமும், காமாட்சியம்மன் கோவிலும் சோமாஸ்கந்த தத்துவத்தில் அமைந்துள்ளது. திருக்கருக்காவூர், திருக்கள்ளில் ஆகிய தலங்களில் அம்மை, அப்பன், கந்தன் சந்நிதிகள் சோமாஸ்கந்தர் வடிவில் அமைந்துள்ளன. உலகிலேயே மிகப் பெரிய சோமாஸ்கந்த வடிவம் இலங்கை திருக்கேதீச்சரத்திலே உள்ளது.

# தேவியர்

## தேவசேனா தேவி:

முருகப் பெருமானுக்கு இச்சை, கிரியை, ஞானம் என்னும் மூவகைச் சக்திகள் உண்டு. (சித்தியார்சுபக்கம் 83) தேவசேனாதேவி கிரியா சக்தியா கும். திருமாலின் திருமகள் அமுதவல்லியே தேவசேனா தேவியாவார்.

ஒரு திருமுகமும், இரு கண்களும் இரு திருக்கரங்களும் உடையவர். முருகப் பெருமானின் இடப்பக்கம் காட்சி தருவார். சிவந்த நிறமும் புன்முறுவல் பூத்த முகமும் கொண்டவர். இடது காலை ஊன்றி வலது காலைச் சிறிது வளைத்து வலக் கையில் கருங்குவளை ஏந்தி இடது கை கடத்யவலம்பித முத்திரையுடன் காட்சி தருபவர்.

பங்குனி மாதம் உத்தர நாளில் திருமணம் நடைபெற்றதனால் பங்குனி உத்தரப் பெருவிழா நடைபெறுகின்றது. முருகப் பெருமானின் இடக் கண்ணான சந்திரனின் ஒளிபட்டு எப்போதும் தேவியின் கையில் உளள குவளை மலர்ந்தே காணப்படும்.

இத்தேவியை அமுதத் தெய்வயானை, அமுதுதமாது, அண்டத் திரும யில், தேவ பூ, சொர்க்கக்கிளி, தேவகுஞ்சரி, வேழமங்கை, சசிதருமயில், குஞ்சரிமான், புருகூதனமினாள், வேழம்ங்கை எனப் போற்றுவர்.

இடி, குலிசம், ஐராவதம், பொன்னுலகு ஆகியவை இத் தேவியின் சொத்தாகும். தேவசேனை மேகவாகனனாம் இந்திரனின் திருப்புதல்வியாத லால் இத்தேவியைத் துதித்தால் வறுமை நீங்கும்.

## வள்ளி:

முருகப் பெருமானுக்கு இச்சை, கிரியை, ஞானம் என்னும் மூவகைச் சக்திகள் உண்டு. (சித்தியார் பக்கம் 83) வள்ளிதேவி இச்சா சக்தியாகும். இவரை ஞானசக்தி என்றும் கூறுவர். இவர் திருமாலின் திருமகள் சுந்தரவல்லியே வள்ளி தேவியாவார்.

வள்ளி தேவியுடன் சம்பந்தப்பட்ட தினைப்புனம் உலகம், தினைக் கொல்லை ஞானப் பயிர்விளையும் இடம், வள்ளிதேவி பரிபக்குவம் அடைந்த நல்லுயிர். வள்ளியின் கொங்கைகள் பரஞானம், அபர ஞானம் என்பர். வள்ளி தேவியைப் பெருமான் வலிந்து மணந்தது அடியவர்களை பெரிதும் விரும்பி ஏற்கும் பேரருள் திறத்தினைக் குறிக்கும்.

தேவி ஒரு திருமுகமும், இரு கண்களும் இரு திருக்கரங்களும் உடையவர். முருகப் பெருமானின் வலப்பக்கம் காட்சி தருவார். இவர் பச்சை நிறமும், புன்முறுவல் பூத்த முகமும் கொண்டவர். வலது காலை நேராக ஊன்றி இடது காலை வளைத்து இடக்கையில் தாமரை மலரை பிடித்துக் கொண்டு வலது கையைத் தொங்க விட்டு வலக்கை கத்ய வலம்பி முத்திரையுடன் காட்சி தருவார். முருகப் பெருமானின் வலக் கண்ணாகிய

சூரிய ஒளி எப்போதும் தாமரை மலரில் படுவதால் எப்போதும் இம் மலர் மலர்ந்தே இருக்கும். தேவியை அருணகிரியார் பச்சைக் கொச்சைக் குறவி (476) என்று குறிப்பிடுகின்றார்.

கொம்பு, கோழிக் கொடி, சேவல், மயில், மலையாட்சி இத்தேவியின் சொத்தாகும்.

இவருக்கு அமுத சொரூபி, அமுதாசனத்தி, இன்பரச சத்தி, எயினர் குலோத்தமை, கலைக்கொம்பு, காவற்பாவை, கிராத குலதிலகமான், கிராத லக்ஷ்மி, சந்தானமாது, சுசிஞான ரம்பை, சோதிப் பிரகாசச் செயலாள், ஞானதனத்தி, பட்டாள், பெண்கள் நாயகம், மிருகக் கரும்பு, மாயக்குற மாது, முத்தமிழ்மான், மூலஞான மங்கை, வேடபதிவ்ருதை, வேடமங்கை, வேதச் சொரூபி என்றும் கூறுவர்.

**வேல்படை:**

இது முருகப் பெருமானின் ஞான சக்தி என்பர். வெற்றியினைத் தருவது வேல். வேலின் ஆற்றலுக்கு இணையான வேறு ஆயுதம் இல்லை. எனவே இதனை வடமொழியில் 'சக்தி' என்பர்.

நூறு கோடிக்கணக்கான உதயசூரியர்களின் ஒளிக்கு நிகரானது வேலின் ஒளியாகும். (திருப்.207). சூரியன் பன்னிருவர் வடிவையும் உருக்கி வடிவெடுத்தாற் போன்ற மாசற்ற பேரொளியைக் கொண்டது வேல் (பூத வேதாள வகுப்பு).

ஆணவம், கன்மம், மாயை என்னும் மலங்களாகிய சூரபத்மன், சிங்க முகன், தாருகன் என்னும் அசுரர்களை அழித்து மக்களுக்கும் தேவர்களும் நலம் புரிந்தது ஞானவேல். எனவே இவ்வேலை வணங்கினால் மலங்கள் அழிந்து எல்லா ஞானமும் நலன்களும் கிட்டும். இதனையே சான்றோர் ஒருவர், ''வேலை வணங்குவது எமக்கு வேலை'' எனக் குறிப்பிட்டார்.

ஒளிவேல், கிரண் அயில், சுடரயில், சோதிவேல், பாநுசத்தி, ரவை, அயில், மின் அயில், தடிநிகர் அயில் என்பர். குஞ்சம், மணி பொருந்திய அழகுடன் விளங்குவது வேல். வஞ்சர்களுக்கு வஞ்சனை செய்யும் வேல்.

கண்ணாடியில் தடம் **கண்ட** வேலாதலின் **தோற்றமும்** ; வீரவாகு, நக்கீரரைக் காத்ததனால் **திதியும்;** சூரசம்ஹாரம் செய்ததனால் **சங்காரமும்;** அடியாரிடத்து வெம்மையை **மறைத்து** தன்னருள் காட்டியும், பகைவரி டத்து தன்மையை மறைத்து வெம்மையைக் காட்டுவதனால் **திரோபவமும்** அருணகிரிநாதர், குமரகுருபரர் நாவில் பொறித்ததனால் **அனுக்கிரகமும்** ஆகபஞ்சகிருத்திய சத்தியுடையது வேல்.

இது பிறவிக்கு வித்தாகிய ஆசையை ஒழிக்கும். யமன் கொடுமை நீக்கும், பிறப்பு இறப்பினை நீக்கும்.

அருணகிரியார் இவ்வேலின் பெருமையை வேல்வகுப்பு வேல்வாங்கு வகுப்பு என இரு வகுப்புகளில் வேலின் பெருமைகளை விளக்கியுள்ளார்.

இவ்வேலினைச் சிவன் தந்ததாகவும் தேவி தந்ததாகவும் அருணகிரியார் குறிப்பிடுகின்றார்.

**கோழிக்கொடி:**

முருகப் பெருமானின் கொடி சேவல் கொடியாகும். சேவல் கோழி ஒளியை விரும்புவது. இருள் விலகி ஒளி பிறந்ததும் அனைவரையும் கூவி எழுப்பும் சேவல் போல அறியாமை இருளைப் போக்கி அறிவு ஒளி வழங்கி பக்தி மார்க்கத்திற்கு அழைப்பது சேவல் கொடி யாகும்.

கோழியை நாத தத்துவம் என்பர். இது தான் எல்லாவற்றிற்கும் மூலதத்துவமாகும். கோழி ஊர்த்துவமாயை; நாததத்துவம்.

**மயில் வாகனம்·**

ஆடமயில், அழகு மயில், ஆடுமயில், ஓகாரபரி, சண்ட நீலகலாபவாசி, சமான கலாபப்பரி, சிங்காரரூப மயில், சித்திர மணி மயில், துரகத பதங்க இரதம், நாட்டிய மயில், நிர்த்தம் நடித்திடு பக்ஷி, நீல மயில், பச்சை மஞ்ஞை, ரத்ன படாக மயில், ரத்ன ரேகை யுடைய சிறக்கு மாமயில், விகடநடங்கொள் சித்ர மயில், வையாளிப்பரி என்பர்.

இந்திரனே மயிலாக வந்து முருகப் பெருமானின் வாகனமாக முதலில் ஆனது. அடுத்து சூரபத்மன் உடலின் இரு கூறுகளில் ஒன்று மயிலாகி முருகப் பெருமானின் வாகனமானது. மயிலை அதோ மாயை என்பர். இது விந்து தத்துவம். மயிலைப் பிரணவ மந்திரம் எனவும் கொள்ளலாம். இது தோகை விரித்தாடுவது ஓங்காரம் போல் விளங்கும். மயில் பிரணவ மந்திரமாகும்.

அங்கவடி, மணி, சேணம் பூட்டிய குதிரை போன்ற அலங்காரம், நாகப்பூண் பூண்டது. காலில் பவளமும் முத்தும் கோர்த்துக் கட்டிய அழகினை உடையது.

## முருகப் பெருமானின் யந்திரங்கள்

முருகப் பெருமான் வழிபாட்டில் அறுகோணச் சக்கரம் முக்கியமாகப் பயன்படுத்தப்படுகின்றது. இச் சக்கரம் இரு சம அளவுடைய சமபக்க முக்கோணங்கள் ஒன்றன் மேல் ஒன்றாக நேர் எதிர்திசைகளில் படிந்துள்ளன படி நுனிப்பாகம் மேல் நோக்கி இருக்கும்படி அமைக்கப்பட்டிருக்கும். இதில் மேல் நோக்கிய நுனிப் பாகம் ஆண் பாகமாகவும், கீழ் நோக்கிய பகுதி பெண் பாகமாகவும் கருதப்படும். இந்த இரு முக்கோணத்தின் நடுவில் அமைந்த புள்ளி உயிர் சக்தி. இதில் ஆறுமுகப் பெருமான் மயில் வாகனத்தில் வேல் தாங்கி சேவல் கொடி பிடித்து விளங்குகின்றார். இதன்

உள்வட்டத்தில் ஆறு தாமரை இதழ்களும் வெளிவட்டத்தில் 12 தாமரை இதழ்களும் வரையபட்டிருக்கும். இதைச் சுற்றி 'பூபுரம்' எனப்படும் மூன்று ஒத்த அளவுடைய இடைவெளியுடன் கூடிய 3 சதுரங்கள் நான்கு பக்கங்களிலும் வாயில்களுடன் அடைக்கப்பட்டிருக்கும். இவை உற்பத்தி அல்லது ஆக்கல் தொழில் தடையின்றி தொடர்ந்து நடைபெறுவதை விளக்கும்.



இப்பகுதியில் உள்ள 3 கோட்டில் ஏழு தேவதைகள் உள்ளனர்.

**1. முதல் கோடு:**

1. தக்ஷிணாமூர்த்தி, 2. நாராயண ஸ்ரீ, 3. ப்ரஹ்ம ஸ்ரீ, 4. ஸகனஸ்ரீ, 5. ஸனந்தன ஸ்ரீ, 6. ஸனாதன ஸ்ரீ, 7. ஸனத்குமாரஸ்ரீ.

**2. இரண்டாவது கோடு:**

இதில் 10 சித்தர்கள் உள்ளனர்.

1. கச்யபர், 2. அத்ரி, 3. பரத்வாஜர், 4. விசுவாமித்திரர், 5. கௌதமர், 6. ஜமதக்னி, 7. வசிட்டர், 8. சுகர், 9. அகத்தியர், 10. தத்தாத்ரேயர்.

**3. மூன்றாவது கோடு:**

1. கோராக்ஷானந்த நாதர், 2. மத்யானந்த நாதர், 3. கோலகணானந்தநாதர், 4. கல்ஹடானந்த நாதர், 5. வைநேத்ரானந்த நாதர், 6. மலயாஸலானந்த நாதர், 7. மத்யானந்த நாதர், 8. கிரானந்த நாதர், 9. குருநாதர்.

**2. வளையம்:**

இதில் 3 வளையங்கள் உள்ளன. முதல் வளையம் குணங்களையும் (சத்துவம், ரஜோ, தடுமோ, மாயை) இதை எட்டு சித்திகளான 1.அணிமா சித்தஸ்ரீ, 2.மகிமா சித்திஸ்ரீ, 3. கரமா சித்திஸ்ரீ, 4.லகிமா சித்திஸ்ரீ, 5.ப்ராப்தி சித்திஸ்ரீ, 6.ப்ராகாம்ய சித்திஸ்ரீ, 7.ஈசித்வ சித்திஸ்ரீ, 8.வசித்வ சித்திஸ்ரீ காத்திருக்கும்.

இரண்டாவது வளையத்தில் வாக்கு தேவதைகளை நினைக்க வேண்டும். அவை: 1.பராவாக் தேவதா, 2.பச்யந்திவாக் தேவதா, 3.மத்யமா வாக் தேவதா, 4.வைகரிவாக் தேவதா, இதனை பன்னிரண்டு தேவதைகள் காவல் புரிகின்றன. அவை 1.விவேக ஸ்ரீ, 2.வைராக்ய ஸ்ரீ, 3.சம ஸ்ரீ, 4.தம ஸ்ரீ, 5.அபராதி ஸ்ரீ, 6.திதிக்ஷா ஸ்ரீ, 7.சிரத்தா ஸ்ரீ, 8.சமாதான ஸ்ரீ, 9.முமுக்ஷுதா ஸ்ரீ, 10.ச்ரவண ஸ்ரீ, 11.மனனஸ்ரீ, 12.நிதித்யா ஸனஸ்ரீ.

மூன்வது வளையத்தில் நான்கு பஞ்சகங்களை நினைக்க வேண்டும் அவை: 1.மூக பஞ்சகம், 2.குண பஞ்சகம், 3.ஞானேந்திரிய பஞ்சகம், 4.கர்மேந்திரிய பஞ்சகம் ஆகும். இவற்றை நவ வீரர்களான 1.வீரபாகு, 2.வீரகேசரி, 3.வீரமகேந்திரன், 4.வீரமகேசன், 5.வீரபுரந்தரன், 6.வீராக்ஷன், 7.வீரமார்த்தாண்டன், 8.வீராந்தகன், 9.வீரதீரன் ஆகியோர் காவல் புரிகின்றனர்.

**3. பன்னிரு இதழ்கள்**

மூன்றாவது பாகமான இதனைப் பன்னிரண்டு ராசிகளுடன் ஒப்பிடுவர். இதில் விளங்குபவர்கள்: 1.கலா, 2.காஷ்டா, 3.கடிகா, 4.முகூர்த்தம், 5.திவஸம், 6.பக்ஷம், 7.மாசம், 8.ருது, 9.அயனம், 10.சம்வத்ஸரம், 11.யுகம், 12.காலம்.

**4. ஆறு இதழ்கள்:**

இச்சக்கரத்திற்கு ஆதாரமான இந்த 6 இதழ்களும் 6 சக்தி பீடங்கள்

ஆகும். அவை: 1.சர்வ சக்தி (பூலோகம்), 2.நித்ய திருப்தி சக்தி (அக்னி மண்டலம்), 3.அனாதி போதசக்தி (அந்தரிக்ஷம்), 4.நித்ய மலும்த சக்தி (சூரிய மண்டலம்), 5.சுதந்திர சக்தி (சுவர்க்கம்), 6.அனந்தபோத சக்தி (சோம மண்டலம்).

**5. அறுகோணம்:**

இச்சக்கரத்தில் ஐந்தாவது பாகம் அறுகோணம் ஆகும். இரு முக்கோணங் களின் கூட்டு ஆறுமுகச் சக்கரமாகும். இதில் மேல் நோக்கிய நுனிப்பாகம் யோகச் சக்கரம் என்றும் கீழ் நோக்கிய பாகம் போகச் சக்கரம் என்றும் கூறுவர். யோகச் சக்கரத்தை பூசித்தால் யோகநிலை கூடி வரும். போகச் சக்கரத்தைப் பூசித்தால் சகல போகங்களும் கூடும். இவ்விரு முக்கோணங் களாலான ஆறுமுகச் சக்கரம் யோகமும் போகமும் ஒருங்கே தரக்கூடியதா கும்.

**6. முக்கோணம்:**

ஆறாவது பகுதியான இதனைச் சக்திகோணம் என்பர். முக்கோணத்தில் இச்சா சக்தி, பராசக்தி, ஞானசக்திகள் ஸ்வரூப ராணி சமேத பிரும்மாவாக வும், ஸ்வரூப ருத்ராணி சமேத ருத்ரனாகவும், ஸ்வரூப வைஷ்ணவி சமேத விஷ்ணுவாகவும் முறையே விளங்குகின்றார்கள்.

**7. பிந்து:**

சக்கரத்தின் ஏழாவது பகுதியான பிந்துவில் சிவசக்தி சொரூபமாக முருகப் பெருமான் விளங்குகின்றார்.

இந்த ஆறுமுகச் சக்கரத்தை வழிபட்டால் எல்லாத் தெய்வங்களையும் முருகப் பெருமானோடு வழிபட்ட பலன்கள் கிட்டும். இச்சக்கரம் தாளில் வரையப்பட்டு கண்ணாடிக்குள் அடைக்கப்பட்டோ மரம் அல்லது உலோ கம் ஆகியவற்றில் தோண்டப்பட்டோ பயன்படுத்தப்படுகின்றது. திருமந்தி ரத்தில் சிவனுக்குக் கூறப்பட்ட 'நமசிவாய' என்ற ஐந்தெழுத்து (பஞ்சாட்சர) மந்திரத்தினை ஒட்டி ஆறுமுகப் பெருமானுக்கு 'சரவணபவ' என்றும் ஆறெழுத்து (விடாட்சர மந்திரம்) மந்திரம் பயன்படுத்தப்படுகின்றது. இது ஆகர்ஷணம், மாரணம், மோகனம், தம்பனம், உச்சாடனம், வசியம் எனப்படும்.

## சமுதாய மாறல்

சிவபிரானுக்குரிய ஐந்தெழுத்து மந்திரம் 25 கட்டங்களுக்குள் அமைக்கப் பட்டிருக்கும். அதே போல் முருகப் பெருமானின் ஆறெழுத்து மந்திரம் 36 கட்டங்களுக்குள் அமைக்கப்பட்டுள்ளது. இதனைச் சமுதாய மாறல் மந்திரம் என்பர். இதனை வெள்ளி அல்லது தங்கத் தகட்டில் எழுதி பத்மாசனத்தில் கிழக்கு முகமாக அமர்ந்து சக்கரத்தில் உள்ளபடி 1008 முறை உச்சரிக்க சர்வ காரியமும் சித்தியாகும்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ச | ர | வ | ண | ப | வ |
| ர | வ | ண | ப | வ | ச |
| வ | ண | ப | வ | ச | ர |
| ண | ப | வ | ச | ர | வ |
| ப | வ | ச | ர | வ | ண |
| வ | ச | ர | வ | ண | ப |

இச் சதுரங்கட்டுப் பதிலாக பல்வேறு முறைகளும் பின்பற்றப்படுகின்றது. இவ்வாறு செய்து வழிபடுபவர்கட்கு விரும்பிய பலன் கிட்டும்.

கந்தர் சஷ்டி கவசத்தில் இம்மந்திர வரிகள் பல இடங்களில் உள்ளன.

### 1. வசியம்

இச்சக்கரத்தினை வில்வப் பலகையில் அமைக்க வேண்டும். கிழக்கு முகமாக அமர்ந்து இச்சக்கரத்திற்குரிய மூல மந்திரமான ''ஓம், ரீம், ஐயும், கிலியும், ஔவும், சௌவும் சரவணபவ'' என 1008 முறை உச்சரிகக வேண்டும்.

### 2. ஆகர்ஷண சக்கரம்

இச்சக்கரத்தினை வெண்நாவல் மரப் பலகையில் எழுதுதல் வேண்டும். ஈசான்ய முகமாக இருந்து ''ரீம் ஐயும் கிலியும், ஔவும், சௌவும் ஓம், ரஹண பவச'' என்னும் மந்திரத்தினை 1008 முறை உச்சாடணம் செய்ய வேண்டும். பேய், பிசாசு, சூன்யங்கள் விலகும்.

### 3. மோகனச் சக்கரம்

இச்சக்கரத்தினை அலரிப் பலகையில் எழுதுதல் வேண்டும். வடக்கு முகமாகப் புலித்தோல் ஆசனத்தின் மீது அமர்ந்து ''ஐயும், கிலியும்,

1. வசிய சக்கரம்




2. ஆகர்ஷண சக்கரம்




3. மோகனச் சக்கரம்




4. தம்பனச் சக்கரம்




5. உச்சாடன சக்கரம்




6. மாரணச் சக்கரம்



ஔவும், சௌவும், ஓம் ரீம், ஹணபவசர'' என்னும் மந்திரத்தினை 1008 முறை உச்சாடனம் செய்ய வேண்டும். சண்முகரின் அருள் கிட்டும்.

### 4. தம்பனச் சக்கரம்

இச்சக்கரத்தினை ஆலம் பலகையில் அமைத்தல் வேண்டும். தெற்கு முகமாக தர்ப்பை ஆசனத்தின் மீது அமர்ந்து ''கிலியும் ஔவும், சௌவும், ஓம், ரீம், ஐயும், ணபவ சரஹ'' என்று 1008 முறை உச்சாடனம் செய்ய வேணடும். தீராத நோய்களும் தீரும்.

### 5. உச்சாடன சக்கரம்

இச்சக்கரத்தினைப் பலா மரப்பலகையில் அமைத்தல் வேண்டும். வட மேற்கு முகமாக சித்ராசனத்தில் இருந்து ''ஔவும், சௌவும், ஓம், ரீம், ஐயும், கிலியும், பவசரஹண'' என்று 1008 முறை உச்சாடனம் செய்ய வேண்டும். இதனால் ஞானமும் புகழும் கிட்டும்.

### 6. மாரணச் சக்கரம்

இந்தச் சக்கரத்தினை வில்வப் பலகையில் எழுதுதல் வேண்டும். தென்கிழக்கு முகமாகப் புலித்தோல் ஆசனத்தில் இருந்து ''சௌவும், ஓம், ரீம், ஐயும், கிலியும், ஔவும், வசர ஹணபவ'' என்னும் மந்திரத்தினை 1008 முறை உச்சரிக்க வேண்டும். இதனால் வறுமையும் வல்வினையும் நீங்கும்.

## மந்திரங்கள்

குமார தந்திரம் மந்திரோத்தாரப் படலத்தின் முருகப் பெருமானின் பல மந்திரங்கள் குறிப்பிடப்பட்டுள்ளன. மந்திரங்களை உரிய முறையில் உச்சரித்து வணங்கினால் வேண்டிய பலன்கள் கிட்டும்.

| | |
|---|---|
| ஸ்கந்தர் மூல மந்திரம் | : ஓம் ஸ்ரூம் ஸ்கந்தாய நம: |
| சுப்பிரமணியர் மூல மந்திரம் | : ஓம் ஸௌம் ஸுப்ரமண்யாய நம: |
| குமாரர் மூல மந்திரம் | : ஓம் க்ரூம் குமாராய நம: |
| குகர் மூல மந்திரம் | : ஓம் ஸூம் ஸ்வாமிந் குஹாய நம: |
| சரவணபவர் மூல மந்திரம் | : ஓம் ஸ்ரீம் சம் சரவணபவாய நம: |
| ஷண்முகர் மூல மந்திரம் | : ஓம் ஹ்ரீம் ஷம் ஷண்முகாய நம: |
| வள்ளிதேவி பீஜம் | : ஓம் வ்ரீம் மகாவல்ஞயை நம: |
| தேவசேனாதேவி பீஜம் | : ஓம் ஹ்ரீம் தேவ ஸேனாயை நம: |

**சக்தி பீஜங்கள்:**

ஓம் ஸ்ரீம் சக்தயே நம:
ஓம் ஸ: சகுந்யை நம:
ஓம் ரம் ரேவத்யை நம:
ஓம் பம் பூதநாயை நம:
ஓம் மம் மகாபூதநாயை நம:
ஓம் நம் நசீதிந்யை நம:
ஓம் மம் மாலிந்யை நம:
ஓம் ஸம் ச்யாமளாயை நம:
ஓம் பம் புத்தாயை நம:
ஓம் நம் நவம்யை நம:
ஓம் வம் விஸ்வதோமுக்யை நம:

**பஞ்சாயுத பீஜங்கள்:**

வேல், வில், அம்பு, அட்சமாலை, கமண்டலம் இவற்றோடு, முதலில் பிரணவமான 'ஓம்' என்பதையும் கடைசியில் நம: என்பதையும் சேர்த்துக் கூற வேண்டும்.

**மயில் மந்திரம்:**

ஓம் ம்ரீம் மாயூராய நம:

**பஞ்சப்பிரம மந்திரங்கள்:**

ஓம் ஸம் சத்யோஜாதாய நம:
ஓம் ஸிம் வாமதேவாய நம:
ஓம் ஸூம் அகோராய நம:
ஓம் ஸெம் தத்புருஷாய நம:
ஓம் ஸொம் ஈசாநாய நம:

**ஷடங்க மந்திரம்:**

ஓம் ஸாம் ஹ்ருதயாய நம:
ஓம் ஸீம் சிரஸே நம:
ஓம் ஸீம் சிகாயை நம:
ஓம் ஸைம் கவசாய நம:
ஓம் ஸௌம் நேத்ரேப்யோ நம:
ஓம் ஸ: அஸ்த்ராய பட்

**ஆறுமுகமூர்த்தி மந்திரம்:**

ஓம் ஸும் ஸுப்ரமண்யாய நம: - ஓம் ஜகத்புவே நம:
ஓம் கும் குமாராய நம: - ஓம் ஸ்வயம்புவே நம:
ஓம் ஹம் ஹரஹௌநவே நம: - ஓம் விஸ்வபுவே நம:
ஓம் ஸும் ஸுராக்ரஜாய நம: - ஓம் ருத்ரபுவே நம:
ஓம் ஸெம் ஸேனாபதயே நம: - ஓம் பிரமபுவே நம:
ஓம் ஸும் ஸுரேச்வராய நம: - ஓம் புவசாபுவே நம:

**எண்பரிவாரங்களின் மந்திரம்:**

ஓம் கம் கஜேந்த்ராய நம:
ஓம் அம் அக்னயே நம:
ஓம் யம் யமாய நம:
ஓம் நம் நிருதயே நம:
ஓம் வம் வருணாய நம:
ஓம் யம் வாயவே நம:
ஓம் ஸம் ஸோமாய நம:
ஓம் ஸௌம் ஸௌமித்ராய நம:

# முருகப் பெருமானுக்குரிய விரதங்கள்

**கார்த்திகை விரதம்:**

இதனைக் கிருத்திகை விரதம் என்பர். கார்த்திகை மாதம் கிருத்திகை நட்சத்திரம் வருவதனால் அம்மாதம் கார்த்திகை மாதம் என அழைக்கப்படுகின்றது.

சரவணப் பொய்கையில் முருகப் பெருமானைப் பாராட்டி, சீராட்டி வளர்த்த கார்த்திகைப் பெண்களுக்குச் சிவபிரான் ஒரு வரம் அளித்தார்.

கார்த்திகை விரதம் இருந்து குமரப்பெருமானை எவர் வழிபடுகின்றார்களோ அவர்கட்குக் கல்வி, செல்வம் நன்மக்கட்பேறு முதலிய எல்லாச் செல்வங்களும் கிட்டும் என வரம் அருளினார்.

கார்த்திகை மாதம் கிருத்திகை நட்சத்திரம் முதல் தொடங்கி ஒவ்வொரு மாதக் கிருத்திகை நட்சத்திரத்தன்றும் பன்னிரண்டு ஆண்டுகள் தொடர்ந்து விரதம் இருப்பர். இவ்விரதம் இருந்தால் பெருஞ்செல்வம் கிட்டும்.

கார்த்திகை சோமவார விரதம் அனுஷ்டிப்போர் சகல மேன்மைகளையும் அடைவர். இவ்விரதத்தினைப் பன்னிரண்டு ஆண்டுகள் தவறாமல் அனுஷ்டித்து வந்த நாரத முனிவர் சகல மேன்மைகளைப் பெற்றார்.

**சஷ்டி விரதம்:**

ஐப்பசி மாதம் வளர்பிறை பிரதமை முதல் சஷ்டி திதி வரையான ஆறுநாட்கள் விரதம் இருக்க வேண்டும். முருகப் பெருமான் சூரவர்மனை அழித்து உலகுக்கு அருள்புரிந்த நன்னாள் கந்தர் சஷ்டி நாளாகும்.

ஒவ்வொரு மாதமும் வரும் சஷ்டியன்று விரதம் இருப்பர்; அன்று உண்ணா நோன்பும் இருப்பர். கந்த சஷ்டியன்று உண்ணாநோன்பு இருப்பது சிறப்பாகும். அமாவாசைக்கு அடுத்த ஆறு நாட்களிலும் காலையில் நீராடி தோய்த்துலர்ந்த ஆடை அணிந்து இரவினில் தம்பம், விம்பம், கும்பங்களில் முருகனைப் பூசித்து செய்த வெல்லம் சேர்த்து நெய்யில் அடைத்து மோதகத்தை நிவேதித்தல் வேண்டும். அன்று திருமுருகாற்றுப்படை, கந்த சஷ்டி கவசம், கந்தரலங்காரம், கந்தர் கலிவெண்பா, ஆகியவற்றை ஆசாரத்துடன் ஓதி கந்தபுராணம் படித்தல் வேண்டும்.

ஏழாம் நாள் அடியவர்களுக்கு அன்னம் அளித்து பாரணம் செய்தல் வேண்டும். சூரனை அழித்த நாள் வளர்பிறை சஷ்டி திதியாகும்.

இவ்விரதத்தினை ஆறு ஆண்டுகள் இருந்து முடிக்க வேண்டும். இவ்விரதம் இருப்பவர்கட்கு மக்கட் செல்வம் கிட்டும். இதையே சஷ்டியில் இருந்தால் அகப்பையில் வரும் என்பர். இதனையே ஒவ்வொரு மாதமும் வளர்பிறையில் வரும் சஷ்டியிலும் விரதம் இருப்பர்.

**சுக்கிரவார விரதம்:**

கந்தனை வேண்டி ஐப்பசி மாதம் முதல் வெள்ளிக்கிழமை தொடங்கி ஒவ்வொரு வெள்ளிக்கிழமை தோறும் விரதம் இருக்க வேண்டும். இவ்விரதத்தினைத் தொடர்ந்து மூன்று ஆண்டுகள் இருக்க வேண்டும். இவ்விரதம் இருந்தால் குடும்பம் விருத்தியடையும். முழு உண்ணாநோன்பு சிறப்புடையது. இயலாதோர் ஒரு பொழுது உட்கொள்ளலாம்.

விநாயகர், உமாதேவி, முருகன் ஆகிய மூவருக்கும் உரிய விரதம் சுக்கிரவார விரதம். பகீரதன், கோரன் என்னும் அரக்கனால் நாடு இழந்து பின் இவ்விரதம்

இருந்து இழந்த நாட்டினைப் பெற்றான்.

**விசாக விரதம்:**

வைகாசி மாத விசாக நாளன்றே முருகப் பெருமான் அவதரித்தார். இந்நாளில் சூரியன் குமரனை வழிபடுவதாக ஐதீகம். அன்று முருகப் பெருமானை வழிபடுவர்கட்குப் புத்திர பாக்கியம் கிட்டும். இதனையே வைகாசி மாதம் விசாகத்தன்று விரதம் தொடங்கி ஒவ்வொரு விசாகத்தன்றும் விரதம் அனுஷ்டிப்பர்.

**தைப்பூச விரதம்:**

மார்கழி மாதம் முதல் நாளில் மாலை போட்டு தினமும் இரு வேளை குளித்து முருகனை வழிபடுவர். தைப்பூச நாளன்று அறுபடை முருகன் திருக்கோயில்களில் ஏதாவது ஒரு தலத்திற்கு நடந்தே சென்று வழிபடுவர்.



# முருகப் பெருமானின் பல்வேறு பெயர்கள்

| | | |
|---|---|---|
| சரவணபவன் | - | சரவணப் பொய்கையில் தோன்றியவன் |
| காங்கேயன் | - | கங்கையில் வளர்ந்தவன் |
| குமரன் | - | இளைய கடவுள் |
| சண்முகன் | - | ஆறுமுகம் கொண்டவன் |
| கந்தன் | - | ஆறு உருவங்களில் ஓர் உருவம் |
| சேனாபதி | - | தேவர்களின் சேனைத் தலைவன் |
| கஜவாகனன் | - | யானை மீது ஊர்பவன் |
| கார்த்திகேயன் | - | கார்த்திகைப் பெண்டிரால் வளர்க்கப்பட்டவன் |
| மயில்வாகனன் | - | மயிலை வாகனமாக உடையவன் |
| குகன் | - | பக்தர்களின் மனக்குகையில் வாழ்பவன் |
| சுவாமிநாதன் | - | தந்தைக்கு உபதேசம் செய்தவன் |
| தேசிகன் | - | சுப்பிரமணியன் |
| சக்திதாசன் | - | தணிகை முருகன், அருள்ஞானச் சக்திதரன் |
| சுப்பிரமணியன் | - | பிரம்மத்தில் உயர்ந்தவன் |
| கடம்பன் | - | கடம்பமலரை உடையவன். |
| பாவகி | - | அக்னியை உடம்பாக உடையவன் |
| வாகுலேயன் | - | கார்த்திகைப் பெண்டிரால் வளர்க்கப்பட்டவன் |
| விசாகன் | - | பக்ஷிவாகனன், விசாக நட்சத்திரத்தில் தோன்றியவன் |
| ஆறுமுகன் | - | ஆறு திருமுகங்களை உடையவன் |
| குறிஞ்சிவேந்தன் | - | குறிஞ்சி நிலத் தலைவன் |
| சூர்ப்பகைவன் | - | சூரபத்மனை அழித்தவன் |
| வேற்கொடியோன் | - | வேலைக் கொடியாகக் கொண்டவன் |
| வேலன் | - | வேலைக் கையில் கொண்டவன் |
| வள்ளி மணாளன் | - | வள்ளி தேவியை மணந்தவன் |
| முத்தையன் | - | குருவின் முத்துப்போல் சிறந்தவன் |



